# ஆனந்தரங்கப் பிள்ளை

## நாட் குறிப்பு

தொகுதி எட்டு

பாகம் - 1

கலை பண்பாட்டுத் துறை

புதுவை அரசு

1998

# ஆனந்தரங்கப் பிள்ளை

# நாட் குறிப்பு

தொகுதி எட்டு

பாகம் -- 1



கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு
1998

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி VIII

☆ மக்கள் பதிப்பு

☆ 1988. ஏப்ரல்

☆ விலை :

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
புதுவை 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர் எல். இராமமூர்த்தி

பிரத்தியேகமான

ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களின்

# தினப்படி சேதி குறிப்பு

சொஸ்த லிகிதம்

எட்டாம் புத்தகம்

**பாகம் - 1**




வெளியீடு :

ரோமன் ரோலண்டு நூலகம்

புதுவை

விலை ரூ. 1-70

# ENGLISH. VOLUME. VIII

பிரசோத்பதிஸு. சித்திரைமீ 24. 1751ஸு. மாயுமீ 3உ. சோமவாரம்.

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் என்னை அழைத்துப் பேசினவர். காம்பிரூவை போய் மறுபடிவந்து இங்கிரீச்சுக்காறர் திருவீதி அண்டையிலே யிறங்கியிருந்தவர்கள் சேதி என்னவென்று கேட்டார். அவர்கள் அங்கேதானே இறங்கியிருக்கிறுர்கள் திருச்சிராப் பள்ளிக்குப்போன வெள்ளைக்காறர் கோப்பு முதலான பேர்கள் மதுரைக்கு சண்டைக்குப் போனவிடத்திலே முறிஞ்சு ஓடிவந்தவர்கள் திருச்சிராப்பள்ளி வந்து சேர்ந்நார்கள் என்றும் அங்கேயிருந்து காயக்காறர்களை—டோலியின் பேரிலே போட்டு தீவுக்கோட்டைக்கு—150 டோலி காயக்காறர் வந்து சேர்ந்ததாகவும் பின்னையுஞ் சிறிது வெள்ளைக்காறர் மூணு தண்டகமாய் அன்பது பேரும் அறுபதுபேருமாய் தீவுகோட்டை வந்து சேர்ந்ததும் தேவணாம்பட்டணத்தார் மேஸ்தர் கோப்பை வரச்சொல்லி யெழுதினதாகவும் அவன் வந்தாலவனை நோஸ்தவனுக்கு வார்களென்று மய்சூர்ரர் 5000 குதிரையும் 10,000 ஹோமமும் திண்டிக்கல்லிலே சேர்ந்திருக்கிறதாகவும் மேஸ்தர்—கோப்பும் மதுரைக்குப் போகச்சே திண்டிக்கல் வழியாய் போன சிவராப்பன்ரூப்போலேயும் மறுபடியும் அந்தவழி வரச்சே அவனுக்குத் தெண்டனை பண்ணிவிச்சு பிடிச்சுக் கொண்டுபோக வேணுமென்று காத்திருந்ததாகவும் அதிலே கோப்பு முறிஞ்சி ராத்திரியிலே ஒண்டியாய் ஓடிவந்தபடியினலே தப்பிப்போய் விட்டானென்றும் நல்லது மமுதல்லிக்கான் பவுன்சு வந்தாலும் புத்தி சொல்லுகிறதாய் சொல்லிக் கொள்ளுகிறதாயிருக்கிறது இது யிப்போ பிறக்குறபேச்சு யிதுக்குமுன் காசுத்திகான் (Ghazi-ud-din-Khan) பர்வாணு வந்ததின் பேரிலே மமுதல்லிக்கானுக்கு மத்தித்து யனுப்பி விச்சுதாகவும் சொல்லிக்கொள்ளுவதும் எதுவும் நிஷ்கரிஷையாய்ச் சொல்லக்கூடவில்லையென்று சொன்னதுக்கு இங்கிலீசுக்காறர் வெட்கம் கெட்டவர்களென்று மெத்தனைதரம் முறிஞ்சு காரியங்கள் போனாலும் சண்டித்தனமாய் மறுபடி ஓடிஓடி வந்து யெத்தனம் பண்ணுகிற சாடை யாயிருக்கிறதென்னவென்றால் பணம் விஸ்தாரமாய் மமுதல்லிக்கான் கையில் வாங்கிப்போடுகிறுர்களே யந்தப் பணம் ருசி முன்னே மானத்தை விட்டுவிட்டார்களேன்று சொன்னுர். நம்மைப்போலே பணம் கூடக் கொடுத்து பத்துக்கு நிறுவாகம் பண்ணுகிறசாடை அவர்கள் சாதியிலே யில்லை இராச்சியம் எல்லாம் வெட்கம் கெட்டவர்களென்று யெகத் தாளியாய்ப் பேசிக்கொள்ளுகிறுர்களென்று சொன்னேன். மெய்தா னென்று ஒத்துக்கொண்டு அப்பால் புவனகிரி பணம் சாடவாய் சேர்ந்தா வென்று கேட்டார்.

## 1751௵ மாயுமீ 19௳ பிறசோத்பதிஸு வைகாசிமீ 9௳ புதவாரம்

இத்தனுள் காலத்தாலே சீமைகப்பல் வந்து துரைபிடிச்சு பதினேழு பீரங்கிப்போட்டான். கப்பல்பேர் தூக்குதே பாறுமு (Duc-de Parme) கப்பல் கப்பித்தான்பேர் ஷெவல்லியேர் முசியே தறசி (Chevallier de Rhius) யென்றும் யிந்தக்கப்பலிலே– நூத்து முப்பத்தி மூணுபெட்டி வெள்ளியும் நாற்பதுகட்டு சகலாத்தும் நாற்பது சொலுதாதுகளும் புடுதிகசுசி (Portuguese)–க்காறன் பெரிய மனுஷனொருத்தனும் வந்தானென்று சொன்னார்கள். புது வர்த்தகர்களைப் பார்த்து நீங்கள் அதிருஷ்டசாலிகள் உங்களுக்கு கும்பினீர் கொந்திராத்து நேமிச்சு கோன்சேலிலே தீர்ந்தவுடனே சீர்மை கப்பல் வந்துதுயென்று சொல்லிப் போட்டுப் போனார்.

அப்பால் கப்பல் கப்பித்தான் வந்தான். அவனுடனே பேசியிருந்து வந்து துரையவர்கள் சொன்னவயணம் இந்தக்கப்பலிலே நூத்திமுப்பத்தி மூணுபெட்டி வெள்ளி வந்தது. நாற்பது கட்டு சகலாத்து வந்தது. இதுக்குமுன் பிறப்பட்ட கப்பல் ஒரு றேவு பிடிச்சபடியினாலே யின்னம் பத்து நாளையிலே வரும் யென்றும் நாற்பது சொலுத்தாதுகள் இப்போ வந்த கப்பலிலே வந்தார்கள். இனிவருகிற கப்பலுகளுக்கெல்லாம் வருவார்களென்றும் புருதகாலராசா (Portuguese King) பழயராசா செத்துப்போய் புதுசாய் ராசா வந்தவன் வயது பிள்ளையானபடியினாலே மயிலாப்பூரிலே மேஸ்தர் புஸ்கவேன் (Mr. Boscowan) புடுதிக்கீசுக் கொடியை வாங்கிப்போட்டு இங்கிரீசுக்கொடியைப் போட்டதுக்கு வெகு அனர்த்தமாய் முடிஞ்சுது. அதன் பேரிலே மேஸ்தர் போஸ்கவேனை வெகு கொஞ்சப்படுத்திப்போட்டதுமல்லாமல் மயிலாப்பூரிலே இங்கிலீசுக் கொடியை வாங்கிப்போட்டு புறுதிக்குசுக் கொடியைப்போடச் சொல்லிசேனே கண்டிப்பு நடந்து புறுதிக்குசிக் கொடி போடத்தக்கதாக தீர்ந்ததென்றும் பாதிரிபிரோ அனதோனியோவுக்கு பிஷப் பட்டம் கொடுத்தார்களென்றும் கும்பினியார் லொறியாமிலே பதினறுகப்பல் சரக்கு யிவ்விடத்துக்கும் பங்காளா–சீனத்துக்கும் மஸ்க்கரை வகையாறுயிடங்களிலே யிருந்து போன சரக்குக்கு யெப்போதும் விக்கிற ஆதாயம் அல்லாமல் அதனமாய் ஒன்றரைகோடி ரூபாய் ஆதாயம் காணபித்ததாகவும் இங்கிலீசுக் கும்பினியர் சீமையிலே நாலுகோடி ரூபா கடன் கொடுக்க வேணும். பங்காளாத்திலே ஒரு கோடி கொடுக்க வேணுமிதல்லாமல் சென்னபட்டணம் வற்த்தகர் அரண்மனேக்காரர்களுக்கு கொடுக்க வேணும் யிதல்லாமல் இங்கிலீசுக்காறர் கும்பினீர் உடைஞ்சுபோய் வேறே கும்பினீராறுலும் ஆமென்று சொன்னார் அப்பால் காகிதங்களைப் பார்க்க வுள்ளே போய் பார்த்துக்கொண்டிருந்து சாயங்காலம் மொறட்டாண்டிச்சாவடிக்கிப் போனார்.

இந்தக்கப்பலிலே புறுதிக்கீசுக்காரன் பெரிய மனுஷன் ஒருத்தன் வந்தான் காரியம் விசிதப்படதெரியவில்லை.

**1752. ௵ மாயுமீ 22௨ பிறசோத்பதி௵ வைகாசிமீ 12௨ சனிவாரம்**

இன்றையதினம் உதயத்திலே நபா பாசிருயர் குமாரன் பாலாசிருயன் வெகுமதியுடன் அவனுடைய வைக்கீல் ராமாருயன் வந்ததற்கு வழுதாவூர் வாசல்ப்படியிலிருந்து முசியே அல்பேர் முசியே திலார்சும் வசராத்ருய விசய ஆனந்தரெங்கப்பருயரவர்களும் பாப்பாய்யபிள்ளை வகையருக்களும் நட்டுமுட்டு நாடகசாலை கும்பனிகாறுக்களும் கும்பினீர் பல்லக்கும் பயிர்க்குகள்—நவபத்து சகலசம்பிறமங்களோடே போய் வாசற்படியாண்டைக்குப்போய் பாறுவைத்து தம்பூறு அடித்தார்கள். அதற்குப்பிற்பாடு பெகுமதியெடுப்பித்துக் கொண்டு துரையவர்களுக்கு கொடுத்தவுடனே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள்.

வெகுமதி வயணம்:—

துரையவர்களுக்கு மகத்தாப்பி உசந்த நகைகள். அஞ்சுறெத்தினப் பெட்டிகள் நகைகள் நாறத்தகுதிரை—ஒண்ணு மதாமுக்கு.

மகதாபிசேலை ரவுக்கை வகையரு நகைகள் மூணுறெத்தினப் பெட்டி நகைகள் —— —— —— —— இறெண்டு இத்தனுள் காலத்தாலே துரையவர்களில்லாதபடியினலே பாக்கு கிடங்கியேவந்து யிருந்து வீட்டேபோனேன். இத்தனுள் கேழ்விப்பட்டசேதி சேக்கசேனை பொம்மராசாபாளையத்தின் பேரிலே சண்டைக்கி 2000 துப்பாக்கிக் காறர்களும்போய் அஞ்சாறு நாளைப்பயணம் சாகிப்போனதாய் சேதி வந்தது. சந்தாசாயபு திரிச்சிராப்பள்ளிக்குப்போக திருவணுமலை போய்ச்சேர்ந்தானென்றும் கபுறு வந்தது. அவடத்திலே பத்துபதினஞ்சு நாளிருந்து சிப்பாயிகள் சுவார்களுக்குஞ் சிப்பாய் களுக்குஞ்சம்மதி சொன்னதாய் கேழ்க்கப்பட்டது. இங்கிறெசுக்காரர் பவுன்சு திருவண்ணைநல்லூர் போய்ச்சேர்ந்தது யென்று யித்தனுள் ருத்திரி சேதிவந்தது.

**1751-௵ மாயுமீ 24௨ பிறசோத்பதி௵ வைகாசிமீ 14௨ சோமவாரம்**

இதல்லாமல் துரையவர்கள் மயிசூர் ருசாவுக்கும் தஞ்சாவூர் ருசா வுக்கும் பின்னையுந் திருச்சிராப்பள்ளி எழுபத்திரண்டு பாளையக்காறர் களுக்கும் காயிதமெழுதச்சொல்லிச் சொன்ன வயணம், திருச்சிராப் பள்ளி எழுபத்திரெண்டு பாளையக்காறர் பெயரவயணம்:—

1. அறியலூர் மழவருயன். 2. சேதுபதி, 3. ஒடையாத்தேவன். 4. தொரையூர் ரெட்டியார். 5. பூச்சிஞயக்கன். 6. லகக்யஞயக்கன். 7. கம்மயஞயக்கன். 8. காமாக்ஷிஞயக்கன். 9. லிங்கம்ஞயக்கன். 10. முத்தயஞயக்கன். 11. வல்லிகொண்டாஞயக்கன். 12. சாமய ஞயக்கன். 13. அம்மயஞயக்கன். 14. கூனப்பஞயக்கன். 15. அப்பய்ய ஞயக்கன். 16. பழணிசென்னவஞயக்கன். 17. விருபாக்ஷுரும்பத்திர

ஞயக்கன்.——— காங்கயம் கவுண்டர் பாளையப்பட்டு பாளையக்காறர் —9 27. தெண்டு கல்லுக்கு மேற்கு உத்தம பாளையத்துக்கும் கூடலூருக்கும் கிழக்கு–நாகமலைக்கு வடக்கு யிந்தமலைப்பாளையக்காறர் ———7. ஆக. 33.

நாஞ்சனுடு–ஆகபாளைய்க்காறர்கள்—————34

தெக்ஷணராச்சியம் பாளையக்காறர்.

சின்னணஞ்சாத்தேவன்—சிவகிரி வன்னியன் - இறட்டைக்குடை— வன்னியன்—அளகாபுரி வன்னியன்—சேத்தூர் திருவணத்தேவன்— கொல்லன் கொண்டான் வாண்டத்தேவன். எட்டப்ப நாயக்கன்.— அன்னிச்சி நாயக்கன்–தும்பிஞ்சிநாயக்கன் —காமனுயக்கன்—கலங்கா ஞயக்கன் —கண்டமனுயக்கன்—எழுமடைஞயக்கன்—சொக்கத்தலவன். தடியத்தலவன்—கட்டப்பநாயக்கன்—மருதப்பதேவன்— தாலிவேலி— சூதாலத்தேவன்— சாலுவத்தேவன்— சேதுருயன்—நல்லக்குட்டி— நம்பித்தலவன்— அனைஞ்சாத்தலவன் — ருமபத்திரரெட்டியார்— ருமசாமிரெட்டியார்— குமார்சாமிரெட்டியார்— வெங்கிடாசல ரெட்டிாயர் — சங்கரஞநாருயணரெட்டியார் — கேச்சலப்புஞயக்கன். பெத்தண்ஞயக்கன்—காடலக்குடிஞயக்கன்—நாகலாபுரம்–மேலமந்தை சிறுமலைநாயக்கன்— இந்திரத்தலவன். குமாரத்தலவன்— எறவப்ப ஞயக்கன் ஆகதெக்ஷணராச்சியம்பாளையக்காறர்—38 ஆகமொத்தம் பாளையக்காறர்—72.

கள்ளர்

வி. சிங்கனுட்டுக்கள்ளர் — தொண்டமான் பிராத்துக்கள்ளர். பிராமலைக்கள்ளர்—தன்னரசுநாட்டுக்கள்ளர்— அளகர்கோயில்க்கள்ளர் —ஆக கள்ளர் நாடு———6.

மேலேயெழுதப்பட்ட பாளையக்காறர்களுக்கு துறையவர்கள் காயு தங்கள் யெழுதச்சொன்ன விபரம்:—

முன்னலே முசபர்சங்குயெங்களுக்கு கிஷ்ணைமுதல்க்கன்னியா குமரி மட்டுக்கும் யிது நடுவிலே யிருக்கிற ஆதீனங்கள் சமஸ்தானங்கள் —பாளையப்பட்டுகள் முதலான யிடங்களுக்கெல்லாம் நம்மை தணி பண்ணி நம்முடைய உத்தாரப்படிக்கி நடந்து கொள்ளச் சொல்லி கட்ட ளையிட்டருக்கிற சங்கதியும்—இப்பவும் அந்தப்படிக்கு சலாபத்து சங்கு அவர்களும் கட்டளையிட்டு யிருக்கிற சங்கதியும் தாங்கள் கேட்டிருக் கிறுர்களென்றும் முன்னலே மமுதல்லிகான் தனக்கு கவில் மத்தது களெல்லாம் வாங்கியனுப்பிவிச்சா நான் பிறப்பட்டு வந்து உங்க ளுடைய உத்தாரப்படிக்கி நடந்து கொள்ளுகிறேன் என்று சொல்லி அஞ்சாறு தரம் எழுதியனுப்புவிச்சான். அப்பால் நாமும் நல்லதென்று சொல்லி முசபரச்சங்குக் கபிலை வாங்கியனுப்பிவிச்சோம். அந்தப்படிக்கி சகமாய் வராமல்படிக்கி யிப்போ யில்லாத மொணடித் தகராறு பண்ணிக்கொண்டு திருச்சிராப்பள்ளிக்கில்லாவிலே புகுந்துகொண்டிருக் கிறுன். இப்பவும் மமுதல்லிக்கான் பாதுசா உத்தாரமும் சலாபத்துசங்கு உத்தாரமும் எங்களுத் தாரத்தின் பேரிலேயும் அடங்கி நடவாத படியினலே. நாம் சந்தாசாயபுவைப் பயணம் பண்ணியெங்கள் பவுன் சையும் கூடக் கூட்டி திருச்சிராப்பள்ளிக்கில்லாவையும் வாங்கிச்

கொண்டு அவனுக்கு புத்தி சொல்லச் சொல்லி அனுப்பிவிச்சோம்மான படியினாலே தாங்களேதாகிலும்ம முதல்லிகானுக்கு உபராலா பண்ணதே யுண்டானால் தாங்களாதீனத்தையுட் வாங்கிக் கொண்டு தங்களையும் அறுபகம் பண்ணிப்போடுவோம். அதுதாம் கெட்டியாய் மனதிலே வைத்து மமுதல்லிக்கானுக்கு உபரால் பண்ணாமல் நானும் அனுப்பி விச்சி சந்தாசாயிபுக்கு உபராலா பண்ணி காதீரசாமாவாயிருந்து நடந்து கொள்ளவும்என்று யிந்தப்படிக் கெழுதச் சொன்னார். அப்படித்தானே யெழுதியாகுது நாளையதினம் யிந்தக்காயிதங்களை யெல்லாம் றவானாபண்ணியனுப்பிவைக்கிறோம்.

## 1751 ஷூ சூன்மீ 7௳ பிறஜோத்பதி ஷூ வையாசிமீ 28௳ சோமவாரம்

இத்தனால் காலமே பதினொருமணிவேளைக்கி சந்தாதாசாயபு வண்டையிலிருந்து கடுதாசி வந்தது அந்தக்கடுதாசியிலேழுதியிருந்த வயணமென்னவென்றால் நாங்கள் திரிச்சிராப்பள்ளிக்குப்போற பயணத்தை நிறுத்தினோம். அதேதென்றால் இங்கிலீசுக்காறர் வந்து விருத்தாசலத்திலே வெள்ளைக்கொடி போட்டிருந்ததை வாங்கிப்போட்டு இங்கிலீசுக்கொடி போட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு கெட்டுப்போற காலம் வந்திருக்குது.—நாமிதை விட்டுப்போட்டு திரிச்சி ராப்பள்ளிக்கு நடந்தோமேயானால் அவர்களுக்கு என சித்தியாயிருக்கும் அப்பால் சரிப்போனவிடங்களெல்லாம் தோறணங்களை கட்டுகிறதும் இல்லாத போருட்டங்கள் நடக்கும். ஆனபடியினாலே திரிச்சிராப் பள்ளிக்குப் போற பயணத்தை நிறுத்தியிவடத்திலே தானே யிருந்துக் கொண்டு இங்கிலீசுக்காறரை இந்தவிடத்திலே தலைகாட்டவிடாத படிக்கு அடிச்சுத்துரத்திவிட்டு அதின்பேரிலே மத்தயோசனை பண்ணவேணுமென்கிறதாய் நாமும் தொத்தேலும் (d–Auteuil) யோசனை பண்ணியிருக்கிறோம். அப்பால் நீங்கள் எந்தப்படி சிலவு கொடுத்து எழுதியனுப்புவீர்களோ—அந்தப்படி நடந்து கொள்ளுகிறோம் என்றெழுதியனுப்பிவிச்சார். அந்தக்கடுதாசியைப் படித்துக்காண்பித்த வுடனே அதுக்குபதிலுத்தரவு சந்தாசாயபுக்கு எழுதியனுப்பச்சொன்ன வயணமென்னவென்றால் என்னைப்பார்த்து விருத்தாசலத்திலே இங்கிலீசுக் காறர் கொடி போட்டது மெய்தானாவென்று கேட்டார். 24.௳. வியாழக்கிழமைநாள் விருத்தாசலத்தண்டையிலே இறங்கியிருந்த இங்கிலீசுக்காறர்தானே சண்டைபண்ணி வெள்ளைக்கொடியை வாங்கிப் போட்டு இங்கிலீசுக்கொடி போட்டது மெய்யென்றுதான் காணுங்கபுறு கேட்டனேன்று சொன்னேன். அதன்பேரிலே சந்தாசாயபுக்கு எழுதச் சொன்ன வயணம்—நல்லது அப்படித்தானே அவ்விடத்திலிருந்துக் கொண்டு–அவர்களுக்கேத்தப்புத்திபண்ணிவிச்சு இதல்லாமல் பாளையக் காறர்பேரிலே சண்டைக்குப் போயிருக்கிற அசனதிகானுக்கு(Hasan–ud–din–Khan)ம் எழுதி யனுப்பிவிச்சு அவனையும் அழைப்பித்துக் கொண்டு அதுக்கு ஏத்த பந்தோபஸ்து பண்ணிக்கொண்டு இங்கிலீசுக் காறரை அந்த பிறுந்தியங்களிலே தலைகாட்டவொட்டாமல் அடிச்சு துரத்திவிடச்சொல்லி யெழுதியனுப்பும்படியும் மத்தசமாச்சாரம் நடக்கவேண்டிய காரியங்களுக்கெல்லாம் முசியே தொத்தேலுக்கு நாமெழுதுகிற கடுதாசியிசிலே வயணமாயெழுதியனுப்புகிறோமென்று சொன்னார். ஆனபடியினாலே அவர் சொன்னபடிக்கு சந்தாசாயபுக்கு கடுதாசி எழுதியனுப்பிவிட்டேன்.

இத்தனுல் சாயங்காலம் அஞ்சுமணிக்கு மொறட்டாண்டிச்சாவடியி லிருந்தபேர்—மதாம் முதலான குஞ்சுக்குழந்தைகள் மதாம் தொத்தேல் அவருடைய பிளளேகள் மதாம் பிறுயேல்சமஸ்தமானபேரும் வந்து சேர்ந்தார்கள்.

**1751–ஸ்ல சூன்மீ 8உ. பிறஜோத்பதிஸ்ல வையாசிமீ 29உ செவ்வாய்கிழமை.**

இத்தனுள் காலமே ராயப்பராசா வென்கிறவன் துரையவர்கள் பேருக்கு ஒருகடுதாசியெழுதியனுப்பினுன். அந்தக்கடுதாசியிலே சுத்துப்பாளேயம்பட்டியிலே வங்காறுப்பாளேயமென்றுயிருக்குது. அதை சண்டைபண்ணி வாங்கிஞேம். அதைவாங்கிகொள்ளேயிடுகிறசமயத்திலே மறுபடியுமவர்கள் வந்து விழுந்து அந்த மலேயைப் பிடித்துக்கொண்டு துப்பாக்கியாலே சுட்டார்கள். ஒரு குண்டு வந்துவிழுந்தது. நிசான் பிடித்துக்கொண்டுயிருந்தவனே அடிச்சுது. யிப்படியிருக்குதுசமாச்சாரம் சிலவு முதலுக்குமில்லே. எம்மாத்திரமாகிலும் கொடுத்தனுப்பவேணு மென்றுமிப்படியாக யெழுதியனுப்பிவிச்சான். அந்தக்கடுதாசியை வாங்கிக்காண்பிச்சுப்போட்டோம். யிதல்லாமல் கோவிந்தராவு இந்தக் காரியமெல்லாம் தன்னுட முகாந்திரமாய் நடக்கவேணுமென்கிற தினுலே யில்லாத அகடவிகடமெல்லாம் பண்ணுகிருன் என்கிறதா யெழுதியனுப்பிவிச்சான்.

**1751ஸ்ல சூன்மீ 11உ. பிறசோத்பதிஸ்ல. ஆனிமீ 1உ சுக்கிறவாரம்**

இத்தனுள் காலத்தாலே துரையவர்களிடத்துக்குப் போன வீடத்திலே முசியே துலார்சு (M. Delarche) வந்து கூடலூரிலிருந்து சேதிவந்ததாய் துரையவர்களுடனே சொன்னதென்னவென்ருல் போர்த் துகல் (Portuguese king) ராசாவினுடைய சண்டைக்கப்பல் வந்ததாக வும் அது தேவனும்பட்டணம் துறைபிடிச்சுது எதுநிமித்தியம் என்ருல் மயிலாப்பூர் ஒப்பிவிக்கச் சொல்லி வந்ததாகவும். தன்மனு ஷி யெழுதி யனுப்பினதாய் வந்து சொன்னுன். அந்தச்சனம் என்னுடனே சொல்லி புறுதிக்கிசுக்காரன் பேர்விளங்கன் வந்திருக்கிருனே அவனேயுமழைத்துக் கொண்டு வரச் சொல்லி அவன் வந்தவுடனே அவனுடனே சொல்லி புறுதிக்குசுக்காறனே புதுசாய்க்கட்டுகிற குவற்றணமாவுக்கு அவனேயும் கூடவழைத்துக் கொண்டுபோய் நச்சுக்குழல் வைத்துப் பார்த்த விடத்திலே அஞ்சாறு கப்பல் நிற்குறபடியினுலே தெரியவில்லே யென்று வந்தார்கள் அந்தச்சேதியைத்துரையவர்களுடனே என்னுடனே சொன்னுர்கள். மைத்தப்படி விசேஷ சமாச்சாரமில்லே.

**1751ஸ்ல சூன்மீ 12உக்கு பிறசோத்பதிஸ்ல ஆனிமீ 2உ சனிவாரம்**

இத்தனுள் சாயங்காலம் அஞ்சுமணிக்கு சீரமையிலிருந்து முன் அற்பிசிமீ த்தையிலே பிறப்பட்ட கப்பல் றூலியே (Rowille) என்கிற பேருடையது வந்து துறைபிடிச்சுது. துறையிலிருந்த துக்குதேபாறமு (Du-ed–eParme) யென்கிறகப்பல் ருபுதெகால் வாங்கிப் போட்டான்.

இப்போ வந்த கப்பித்தான் பெரியவனுனபடியினுலே இவன் போட்டுக் கொண்டு வந்த வாடிக்கைப்படிக்கி கப்பலுக்கு ஒருத்தருக்கொருத்தர் பீறங்கிகள் போட்டு அப்பால் கோட்டைக்கிப் போட்டான். இந்தக் கப்பலிலே நூத்தாறு (106) பெட்டி வெள்ளியும், இருபத்தையாயிரம் விராகனுக்குப் பொன்னும் அன்பது கட்டு சகலாத்தும் வந்ததாகவும் சேதி வந்தது. கப்பல் கப்பித்தான் பேர்— — — — — கப்பித்தான் துரையவர்களுக்கு ஆறுமணிக்கு காகிதங்கள் கொண்டு வந்து கொடுத்து கண்டு வாற்த்தை சொன்னதின் பிற்பாடு பத்துநாளைக்குப் பிறகு பிறப் பட்ட தூக்கு தெபாறமு யென்கிற கப்பல் முன் வையாசிமீ 9உ (May 19) புதவாரம் முன்னதாக வந்தபடியினுலே சகல சேதியும் அதிலேயெழுதி வந்தபடியினுலே அந்தக்கப்பல் சேதிதானி நிலேயும். விந்தைகளில்லே. இத்தனுள் டில்லியிலிருந்து பெருமுக்கல் மியாசாயபுக்கு யெழுதி வந்த அக்காபாதியிலே வந்த சேதியாவது—

## 1751௵ சூன்மீ 19உ பிறசோத்பதி௵ ஆனிமீ 9உ சனிவாரம்.

நாலுமாசத்திற்குமுன் மன்சூரல்லிக்கான் லாகூர்கோட்டையின் பேரிலே முன்முறிஞ்சுவந்தவன் மறுபடி தளங்கூட்டிக் கொண்டு சண்டைக்குப் போனதாகவும் மறுபடியும் முறிஞ்சுவந்து டில்லி சேர்ந்தானென்றும் அந்தப்பட்டாணியர்கள் கொப்பாமு (Gopamau) முதலான டில்லி ராச்சியமெல்லாம் கொள்ளேயிட்டு சிறைகள்கூட பிடிச்சு ராச்சிய மெல்லாம் நிப்பாந்தம் பண்ணுகிறுர்களென்றும் மியாசாயபுக்கு வநத அக்கபரிலே யெழுதிவந்தது. கொப்பாமிலே சம்பத்துருயன் தகப்பன் தாயார் தம்பி முதலானபேர்கள் கானுக்கோயி உத்தியோகமாயி யதிலேயிருக்கிறதாம். தகப்பன்மாத்திரம் செத்துப்போய் மத்தப்பேர் யிருந்தவர்களுக்குப் பட்டாணியர்கள் வந்து கொள்ளேயிட்டதினுலே வெகுதிரவியம் சேதமாய்ப் போச்சுதென்று மிப்படியாகச் சம்பத் ருயருக்கு சென்னப்பட்டணத்துக்கு சேதிவந்ததாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.

## 1751௵ சூன்மீ 20உ பிறசோத்பதி௵ ஆனிமீ 10உ ஆதிவாரம்.

இத்தனுள் கூடலூரிலிருந்து வந்த சேதி நேத்து 9உ சனிவாரம் இங்கிலீசுத் தோராவிலிருந்து வந்த சீர்மைக்கப்பல் ஒன்று தேவ ளும்பட்டணத்துக்கு வந்துதென்றும் அதிலே ரெண்டுபேர் பிருஞ்சுக் காறர்கள் வந்தார்களென்றும் கபுறு வந்தது. அந்தச்சேதியை துரை யவர்களுடனே சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது மெய் தானென்றும் எனக்குக் காகிதம் வந்தது. அந்தக்காகிதத்திலே படகு அனுப்பச்சொல்லி காகிதம் வந்தது. அந்தப்படிக்குப் படகு போச்சுது. நாளேயதினம் வந்து சேருவார்களென்று சொன்னுர்.

பின்னேயொரு வெள்ளேக்காரன் வந்து இங்கிலீசு சீமைக்கப்பலிலே வந்த வனிங்கேயிருந்துபோன மாறுக்ண்ணன் முசேலசேல் (M. dela. Selle) என்கிறவன் கோன் சேவியேராய் வந்தானென்றும் முசியே பிசார் என்கிறவனும் முன்யிங்கேயிருந்துபோனவன் தான் அவன் சொலுதாது

கப்பித்தாஞக வந்தான் யென்றும் நாளேயதினம் யிங்கே வருவார் களென்றுஞ் சொன்னுர்கள். யிவர்களே இங்கிலீசுக் கப்பலின்பேரிலே வந்த காரியம் வெளியாகச் சொன்ன தென்னவென்ருல் -பிருன்சாவிலே யிருந்து மஸ்கரேஞ்சுவுக்கு நேமிச்ச பிலியேரென்கிற கப்பல் வந்ததாகவும் அந்தக்கப்பலின் பேரிலேயேறி மஸ்கரேஞ்சுவுக்குப்போயி யிங்கேயிருந்து புதுச்சேரிக்குப்போற கப்பலின்பேரிலே போகத்தக்கதாக யேறி வந்ததாகவும் அந்தக்கப்பல் காத்திலே அகப்பட்டதிஞலே கம்பங்கள் உடைஞ்சு அலக்கழிச்சதிஞலே காப்புதெபொனே ஸ்பிரியான் (Cap de-bonne Esperance) என்றவிடத்திலே கப்பலேயிறக்கி வேலேப் பார்த்தபடியிஞலே இங்கிலீசு கப்பல் பங்காளத்துக்கு நேமிச்சது தேவஞம் பட்டணம் துறைபிடிக்சுப் பங்களாத்துக்குப் போற தானபடியிஞலே அந்தக்கப்பல் காப்பைக்கு வந்து பயணம் பட்டவுடனே புதுச்சேரிக்கு போருன் மானபடியிஞலே இதன்பேரிலே ஏறிப்போவோமென்று ஏறி வந்தார்களென்று சொன்னுர்கள்.

## 1751—ஸு ஜூன்மீ 21வ பிறசோத்பதிஸு ஆனிமீ 11வ சோமவாரம்.

இத்தனுள் பழயவற்த்தகர் பிடவை கோட்டையில் பார்வையான படியிஞலே நான் கோட்டைக்குப் போயிருக்கச்சே துரையவர்கள் சேவுகன் வந்து அழைக்க வந்தான். போனவுடனே பிடவை பாத்து கட்டுப்போட்டார்களாவென்று கேட்டார். கட்டுப்போட்டார்கள் ஓர்கண்டியும் செல்லாவும் நாளேயதினம் பார்க்கிருேம் என்று சின்னதுரை சொன்ஞரென்று சொன்னேன். அப்பால் பழஞ்செல்வி கில்லேதாரன் பேரன் வந்து மதாம் அண்டையிலே பேசியிருந்து அப்பால் துரையவர்களண்டைக்கு வந்து கண்டு பேசிஞன்.

அப்பால் சந்தாசாயபு காயிதமும் முசியே தொத்தேல் காயிதங் களும் வந்ததிலே குதிரைசுவார்கள் சம்பளங்குடுக்கச் சொல்லி தங்கா பண்ணுகிருர்களென்று மிபபோ சத்துருக்கள் வந்துயெதிரே யிறங்கி சண்டை பண்ணி மறுபடி சண்டைக்கி ஆயத்தமாயிருக்கிற வேளேயிலே தங்காவாஞல் நிறுவாகத்துக்கு வாறது பீறயாசமென்றும் அதுக்கு அடமானமெந்தசாடையிலே யெழுதியனுப்பவேணுமோ அந்தசாடை யிலே எழுதியனுப்பினதாயும் அதின்பேரிலே லக்ஷம்ரூபாய் தம்முடைய கணக்கப்பிள்ளேயை அழைப்பிச்சு பாப்பய்யபிள்ளே வசம் பண்ணச் சொல்லியுஞ்சொன்ஞர். அந்தப்படிக்கு இத்தனுள் சாயங்காலம் லட்சம் ரூபாயும் துரைகணக்கு முத்தய்யன் பாப்பய்யபிள்ளே வசம் வொப்பிச்சு சந்தாசாயபுவுக்கு அனுப்பச்சொன்ஞர் அந்தச்சேதி கேழ்க்கப்பட்டுது. இந்தரூபாய் எடுத்துப்போறதுக்கு சிறிது—எருதுகளும் சிறிது மூட்டைக்காறர்களும் முஸ்தீதுபண்ணிஞர்கள். நாளேயத்தினம் அனுப்புகிறதாய் சேதிகேழ்க்கப் பட்டுது. ஆஞல் சந்தாசாயபு—சிமாமூல் பணம் பாப்பய்யபிள்ளே மாரிபத்தில் செலுத்திவிச்சது நாளேயவரைக்கும் துரையவர்களுக்குச் சொன்னது இரண்டரை லட்சம்-தஞ்சாவூரார் கணக்கு—காரைக்காலிலே செலுத்திவிச்சது மூணரை லட்சமும் வந்துசேர்ந்தது. ஆக ஆறு லட்சம் ரூபாயும் வந்துது. இதுக்குயித்தனுள் லட்சம் ரூபாய் கொடுத்கதுபோக நீக்கு—அஞ்சுலட்சம் ரூபாயிதுக்கு சிலவு யென்னவருகுதோ அல்லது

யிந்தமட்டிலே நிற்கிறதோ—பார்க்க வேண்டியது. இதல்லாமல் கோல்கொண்டையிலே முசபர்சங்கு-சந்தாசாயபு சம்மதிக்குகூடயிவர்களுக்கு யினும் குடுக்கிறேமென்ற சம்மதியும் அப்பால் சலாபத்சங்கு யினும் குடுக்கிறேமென்ற சம்மதியும் கூடபதினைறரை லட்சம் ரூபாயிக்கு காசிதாசு—புக்கன்சி பேரிலே உண்டிக்கை கொடுத்து அந்த உண்டிகை மச்சிலிபந்தரிலே பிறுன்சு கோட்டை யிசமான் வசம் செல்ல திட்டம் பண்ணினேம். அந்தப்படி உண்டிகையனுப்பிவைக்குறேம் என்றெழுதினதுமல்லாமல் முசேதிலார்சுக்கு லக்ஷம்ரூபாய் அதுவேரே கொடுத்து-அனுப்புகிறேமென்று முன்வையாசி மீ 20வ 24வ மொறட்டாண்டிசாவடியில் துரையவர்களிருக்கச்சே சலாபத்துசங்கு காகிதங்களும்—ரூமதாசுபண்டிதன் காகிதங்களும் வந்தது. அதுக்கு தாங்கள் பதினைறரை லக்ஷம்ரூபாயும் காசிதாசி-புக்கன்சி கடையில்செலுத்தி மச்சிலிபந்தரிலே செல்ல உண்டிகை காகிதம் துவரிதமாய் அனுப்பிவிக்கச்சொல்லியும் முசேதிலார்சுக்கு யினும் கொடுக்கிற லக்ஷம் ரூபாயும் குடுத்து அனுப்பக்கவையில்லை. அவனுக்கு கொடுக்க வேண்டியகாரியமில்லை. யென்றும் அவனைத்தொட்டுக்காரியமென்ன அப்படியவனுக்கு கொடுக்கிறதுக்குயென்றும் பின்னையும் குடாதசாடை எந்தெந்தப்படி யெழுதவேணுமோ அந்த சாடையாய் எழுதி அஞ்சாறு தடவை மச்சிலிபந்தர் வழியாயும் கடப்பை மாற்க்கமாகவும் காகிதங்களை அனுப்பிவிச்சாதாகவும் அந்தலக்ஷரூபா மதாமுக்கு அனுப்புகிறதானால் உங்கள் மனதென்றுப்போலே—அதுக்குத்தக்கதாய் காகிதங்களைப் பிறத்தியேகமாய் எழுதி சலாபத்சங்குக்கு—ரூமதாசுபண்டிதனுக்கு சொல்லத்தக்கதாகயனுப்பிவிச்சதாய் மதனந்தபண்டிதன் என்னுடனே சொன்னான்.

### 1751-ஸு சூன் மீ 20உ. பிறசோத்பதிஸு ஆனிமீ 11வ.

இத்தனாள் ராத்திரிதேவனாம்பட்டணம் யிங்கிலீசுக்கப்பலிலே வந்த முசியே லசேலும்—பிரிசார் யென்கிறவனும் வந்து சேர்ந்தார்களென்று கபுறுசொன்னார்கள்.

### 1751-ஸு சூலைமீ 6வ பிறசோத்பதிஸு ஆனிமீ 26வ. செவ்வாய்கிழமை.

வாலிகொண்டான்புரத்திபேரிலே சண்டைபண்ணின போது இங்கிரீசுக்காறர் யெத்தனைபேர் செத்தவர்கள் நிசமாய்த்தெரியுமாவென்று கேட்டார்—மாத்தாபர்க்கான்—ஆசாபண்ணிவிச்சு அனுப்பினேன். அதிலேயெழுதியிருந்தது ராத்திரிகோட்டைலக்கை ஏறினபடியினாலே அப்போ தாங்கள் சாகிறுதையாயிருந்து சண்டை பண்ணியவர்களை முறிய அடிச்சு சண்டைபண்ணி துரத்தினபோது காயப்பட்டவர்கள் போக செத்தவர்களை—வெள்ளைக்காரர்களை எண்ணிப்பிடிச்சது தொண்ணூறு பேர்கள். யிதிலே இரண்டு பேர் ஒபிசியால்மார்கள் யென்று யெழுதி வந்தது. மார்கழி மாசத்தையிலே மேஸ்தர்கோப்பு திருச்சிராப்பள்ளிக்குப்போனபோது முதல் நாளது

வரைக்கும் மதுரைசண்டையில் செத்தவர்களும் வியாதியாய் செத்தவர்களும் நூத்திப்பத்துப்பேர் (110) யிதில் தொண்ணூறுபேர் ஆக இறநூறுபோர் செத்தசேதி நிசமென்று சொன்னேன். பின்னையும் லோகாபிறமமாய் பேசியிருந்து அப்பால் பாக்குக்கிடங்கியேவந்தேன்.

### 1751-ஷு சூலை மீ 7உ. பிறசோத்பதிஷு ஆனி மீ 27உ. புதவாரம்.

இராத்திரி ஏழுமணிக்கு துரையவர்கள் என்னை அழைப்பிச்சு விருத்தாசலத்துக் கோட்டையிலேயிருந்த சேவுகர் மூணுபேர் வந்து முத்திரை சாவடியில் தெக்கிளாறுசியோஞ் செய்த சீட்டுயிது--யிதை முசியே லேபோம்-(Le Beaume) அண்டைக்குப்போய் பிரூன்சு யெழுத்திலே எழுதி வந்தது. நாளைக்கு குடென்று குடுத்தார். அதை வாங்கிக் கொண்டு பாக்குகிடங்கியே வந்தேன். இதல்லாமல் முசியே திலார்சுக்கு லட்சம் ரூபாய்க்கும் மச்சிவிபந்தரில் கொடுக்க உண்டிக்கை பண்ணியனுப்பிவிச்சோமென்று சலாபத்துசங்கு காகிதமும் ராசாறகுனுதாசுடைய காகிதமும் வந்ததை துரை எடுத்து வைத்து-இந்தசேதியை மதனந்தபண்டிதனுடனே-ஆருடனேயுஞ் சொல்ல வாண்டாமென்று சொன்னதாகவும்-சலாபத்துசங்குக்கு றகுனுததாசு டண்டிதனுக்கு யெழுதின காகிதத்திலும் யினிமேல் நீங்கள் முசே திலார்சுககு எழுதுகிற காகிதங்களிலும்-லக்ஷம்ரூபாயும் உமக்குயினும் குடுக்கிறோம் என்றது யிப்போ சிலவாயிருக்குது யினிமேல்பார்த்துக் கொள்ளுவோம் தற்காலங்கூடாது யென்றெழுதியனுப்பச் சொன்ன தாகவும் மதனந்தபண்டிதன் என்னுடனே யின்று ராத்திரி ஒன்பதுமணி வேளை வந்து சொன்னான்.

### 1751-ஷு சூலை மீ 8உ பிறசோத்பதிஷு ஆனி மீ 28உ மங்களவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் விருத்தாசலம் கோட்டையிலிருந்து கொண்டிருக்கிற சேவுகரில் மூணுபேர் வந்து விருத்தாசலம் கோட்டையிலிருந்தது இங்கிலீசுக்காரர் பவுன்சு அங்கேவந்து யிறங்கினதும் அவர்களும் கோட்டையிலிருக்கிற பேர்கள் நீங்களார் என்று கேட்டதும் தாங்கள் பிரூன்சுகாறர் மனுஷர் பிரூன்சுக்காறர் கொடிப்போட்டுக்கொண்டு நாங்களும் யிருக்கிறோமென்று சொன்னதுமப்படியா—நாங்கள் மதுரைக்குப் போகயிதுவழியாய்ப் போறோமென்று சொல்லி அப்பால் இரண்டு மூணு நாளையில் மமுதல்லிகான் குதிரைகளும்—ஸெதாமும் வந்த வுடனே கொடியை யிறக்கிப்போட்டு கோட்டையை விட்டுப் போகச்சொல்லிச் சொன்னதாகவும் அதுக்குத் தாங்கள் பிரூன்சுக் காறருடைய உத்தாரமில்லாமல் கொடியைத்தான் அகப்படத் தானபோமா—நாங்கள் கோட்டையைத்தான் விட்டுப் பிறப்பட்டு வரப்போமா—கூடாதென்று சொன்னப்போலேயும் அவர்களப்பால் கோட்டையை வளைச்சுக்கொண்டு -150 (நூத்தம்பது) கற்ணுது போம்புசுட்டு கோட்டையில் விழப்போட்டு பீறங்கிகள் துப்பாக்கி களினாலே சண்டை பண்ணினதாகவும் தங்களுக்கு கொஞ்சம்

மருந்து குண்டு இருந்ததைக் கொண்டு ஒன்றரை நாள் மட்டுக்கும் போராடினதாகவும் அப்பால் சாப்பாடடுக்கு கூடயில்லாமப் போனதைத் தொட்டு கவில் கெட்டதாகவும் அந்தக் கவிலே நம்பி கற்னுடகமாயுத்தத்துடனே பிறப்பட்டதை இங்கிலீசுக்காறர் மனுஷாகள் ஆயுதங்கள் பிடுங்கிக்கொண்டுபோகச் சொல்லி அப்பால் கோட்டை நாயம்பாய் வெள்ளைக் கொடியைப் பிடுங்கிப் போட்டு மமுதல்லிக்கான் கொடியைப் போட்டுக்கொண்டார்கள் இது நடந்தயின்று முப்பதாம் நாள் யென்றும் அதில் நாங்கள் மூணுபேர்கள் மாத்திரம் யிந்தவூரேவந்து பதினஞ்சு நாளாச்சுது எங்களுக்கிது வொருத்தருடனே சொல்லவேணுமென்கிறதும் தெரியாது சொல்லுகிறதுக்கு இன்னாரென்று மறியோம் இன்னாரைக்கொண்டு சீ—சென்ருல் அவர்களைபபோய சந்திச்சு சொல்லிக்கொள்ளுகிறதுக்குந் தெரியாது. அப்பால் வாடிக்கையும் அறியாதபடியினாலே சும்மாயிருந்து பதினஞ்சாம் நாள் முத்திரைச் சாவடியே வந்தவிடத்தில் அமுசப்ப மூதலியார் திருச்செல்வருய முதலி சின்னதம்பியிருக்க அவர்களுடனே நடந்தக் காரியம் சென்னதுக்கு அவர்கள் ஊர் கணக்கப்பிள்ளையை எழுதச்சொல்லி யெங்களையும் கையெழுத்துப் போடச்சொன்னார் என்றும் எழுதி யிருந்ததுமல்லாமல் சாக்ஷிசாவடி கணக்குப்பிள்ளைகளறிவோ மென்று கையெழுத்துப் போட்டு சீட்டும் ஊர் கணக்குப்பிள்ளை கையெழுத்தப்பட பொழுதியிருந்தது. 1751-ஸு ஜூலை 4உ யெழுதினதாய் யெழுதியிருந்தது இதை மூசியே லெபோம் அண்டைக்குக் கொண்டுபோய் பிரான்செழுத்திலே எழுதிவிச்சுக் கொண்டுவந்து கொடுத்துப்போட்டு மயிசூர் ஸ்தானுதிபதிகள் எங்கள் சாவடியில் வந்திறங்கியிருக்கிறார்களே அவர்களைக்கண்டு பேசி உமக்குக் கொண்டுவந்த வெகுமானமும் பாத்துப்போட்டு வருகுறேனென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனேன்.

பகலைக்கு மேலாக நம்முடைய அக்கிறுகாரத்துக்குப்போயி மயிசூரிலிருந்து ராசாவுடைய வக்காலத்தாய் வந்திருக்கிற கோபால் தாசு—பவானிதாசு அண்ணன் பிள்ளை நாராசிங்கதாசுவைக் கண்டு துரையவர்களுக்கு கொண்டுவந்த பூஷணமும் வஸ்திரமும் பாத்து பூஷணத்தை மாத்திரம் கையில்யெடுத்துக் கொண்டு மறுபடி ராத்திரி துரையவர்களைக் கண்டு பேசி மோதிரமாய்க் கட்டி யிருக்கிற வயிரத்தையும் காண்பித்து அந்த வயிரமோதிரம்—நானூறு—அன்னூறு விராகன் பெரும் என்று யிது மூவாயிரம் மூவாயிரத்தன்னூறு விராகன் பெறுகிற வயிரமோதிரமென்று எப்படி சொல்லுவார்களென்று சம்மதியில்லாத வுத்திரங்களாய்ச் சொன்னபடியினாலே அப்பால் அவர் சம்மதிக்கும்படியாய்ச் சொன்ன துகையை ரொக்கமாய்க் குடுக்கத்தக்கதாய்ப் பேசிச் சொல்லி சொன்னபடியினாலே அந்தப்படி பேசி — நாளையனன்றைய தினம்—உத்திரஞ் சொல்லிப்போட்டு வீட்டிலே ஒன்பதரை மணிக்குப் போனேன்.

### 1751-வரு ஜூலயீ 9-உ பிறசோத்பதிவரு ஆனியீ 29-உ சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போன விடத்திலே சயிதசாவந்து அஞ்சு—அசறபீசர் வைத்து சலாம் பண்ணினான். ஏது விசமென்று கேட்டார். எனக்கும் பாப்பைய பிள்ளைக்கும் ஆனைவெகுமானம் பண்ணினபோது சறுக்கார் ஆனையைக் கூட்டிப்போகச்சொன்னதேய்யல்லாமல்-சொந்தமாய்க் கொடுத்ததில்லை—இப்போ பறங்கிப்பேட்டையிலிருந்து—ஏழானை வர்த்தகர் கையில் வாங்கின ஆ வந்துதே அந்த ஆனையில் ஒரு பெரிய ஆனையை எடுத்துக் கொள்ளச் சொல்லி எழுதிவந்தது. அந்தப் படிக்கு நேத்துதான் ஆனையைக் கொண்டுபோய்க் கட்டிக் கொண்டேன். அதுதான் உங்களுக்கு நசர் கொண்டு வந்தேன் என்று சொன்னான்—நல்லதென்று யசால்லி பன்னீர்—பாக்கு வெத்திலை கொடுத்து—பாப்பய்யபிள்ளைக்கு சரீரம் யெப்படியிருக்கு தென்று கேட்டதற்கு அவஸ்தமாயிருக்குது என்று சொன்னான். அதுக்குத் துரையவர்கள் சொன்னது பற்காளுவின் பேரிலே போய்க்கணக்குத் தீர்த்தால் மூணு லக்ஷம் ரூபாய் வரும். அதுக்கு இருபது சிப்பாயிகளும் முப்பது. நாற்பது முத்திரைப்போட்ட சேவுகரும் கூடவந்தால் ஒரு மாசத்தில் மூணுலக்ஷம் ரூபா அலுவு பண்ணி அனுப்புவிக்கிறேன் யென்று சொல்லிப்போட்டு வியாதி யென்று வீட்டிலே உளுக்கார்ந்துக் கொண்டிருக்கிறதேதுவென்று கேழ்க்க அதுக்கு அப்படியே ரெண்டு மூணு நாளையிலே பிறப் பட்டுப்போறதாயிருக்கிறேனென்று சொன்னான். நல்லது போவென்று சொன்னார். அனுப்பிவிச்சுக் கொண்டுபோனான்.

அப்பால் சேக்கசேன் பொமம ராசாப்பாளையம் வாங்கி ராயப்பராசாவுக்கு குடுத்து பதினஞ்சு லக்ஷம் ரூபாவாங்கிக் கொள்ளயிருந்த காரியத்துக்குத் தடைவந்து சேக்கசேன் சந்தா சாயபு அண்டைக்கு வாரிகொண்டைக்குப் போறதாய்ப் பணம் பிறப்பட்டு திருவண்ணாமலை வந்து சேர்ந்து ராயப்பராசாவை யங்கேயிருந்து செஞ்சிக்கோட்டையிலே கொண்டுபோய்க் காவல் வைக்கச்சொல்லி துறையவர்களுத்தாரப்படிக்கு—அனுப்பிவிட்டு தான் அப்பால் சந்தாசாயபு பாளையத்துக்கு வாலிகொண்டா புரத்துக்கு சாரிப்போனதாய் யெழுதியனுப்பினானென்று யபுறா கேழ்வியானேன்.

### 1751வரு ஜூலயீ 11உ பிறசோத்பதிவரு ஆனியீ 31உ ஆதிவாரம்.

இத்தனாள் காலத்தாலே எட்டு மணி வேளைக்கு துரையவர்கள் கோயிலுக்குப்போயி பூசை கேட்டு வந்த பிறகு நான் போய்க்கண்ட வுடனே தேவனாம்பட்டணத்தாருக்கு—இந்த மட்டுக்குஞ் சீர்மை கப்பல் வராமலிருக்கிற சாடை என்னவென்று கேட்டார். இந்தமட்டுக்குஞ் சீனத்துக்கு நேமிச்சதும் பங்களாத்துக்கு நேமிச்சதும் வந்ததேயல்லாமல் தேவனாம்பட்டணத்துக்கு

நேமிச்சது வரயில்லையாம் யிதல்லாமல் யித்தனை நாளும் சீர்மை யிலிருந்து வருகிற கும்பினீர் காயிதங்கள் மேல் விலாசம் கோவற்ணதோர் யின்னூர் மைத்தக கோன்சேலியேரின்றுறென்று யெழுது கிறதாம் அப்படிதான் வருகுறதாம் வாடிக்கை இப்போ வருகிற காயிதங்கள் மேல் விளாசமெல்லாம் தேவனாம்படடணம் கோன் சேலுக்கென்று யெழுதி வருகிறபடியினாலே மேஸ்தர் சாந்தருசை (Mr Saundrs) தேவனாம்பட்டிணம் துரைத்தனத்துக்கு நேமிச்ச சாடைகாணுதம் வேறேயொருத்தன் வருவானென்று எல்லோரும் பேசிக்கொள்ளுகிறார்கள் என்று தேவனாம்பட்டிணத்திலுள்ள வெள்ளைக்காரர் பேசிக்கொள்ளுகிறதாய் அவர்கவண்டையிலிருக்கிற துபாசிகள் போக்குவரத்தாயிருக்கிறவர்கள் சொல்ல நான் கேள்வி பட்டேன் என்று சொன்னார் இதல்லாமல் கொஞ்சம் துப்பாக்கியும் மருந்து குண்டு சிறிது சிப்பாயிகள் வெள்ளைக்காரர்கள் உள்பட அன்பது அறுபது பேர் உளுந்தூர்பேட்டைக்குப்போனதாய் சேதி கேழ்க்கப்பட்டது என்று சொன்னேன். அப்பால் மணிலாக்கப்பல் சூப்பர் காக்கு (Supercargo) முசே லபாத்து வகையறுவந்து பேசிக்கொண்டிருந்தார்கள் நாக்கு பாக்குகொடங்கியே வந்தேன்.

1751ளு ஜூலை 12உ பிறசோத்பதிளு ஆனிமீ 32உ சோமவாரம்.

இத்தனாள் முசியே லாசு (M. Law) முதலாகிய மூணு பேர் ஓபிசியேமார்களும் அன்பது அறுபது வெள்ளைக்காரர்களும் சடைக்காறர்களும் சிப்பாயிகள் அன்பது அறுபது பேர்களும் ஏழுபது எண்பது மாட்டின் பேரிலே மருந்தும் குண்டும் தண்டுக்கு அனுப்பினார்கள் மமுதல்லிக்கான் வழியிலேயிருந்து வந்தேனென்று திரிச்சிராப்பள்ளியில் வெள்ளைக்கொடி போடுகிறதுக்கு உங்கள் காலுக்காய் ஆரையாகிலும் ஒருத்தரையழைத்து வரச்சொன்னா னென்று சொல்லி அப்பால் அதை துரைஅவர்களும் மெய்யென்று நம்பி அந்தப்பாப்பான் பிறகே றங்காச்சாரியாரென்கிற பிஷஷேக் காறப்பாப்பானை கூடடி அங்கேயிருந்து வந்த பாப்பானை கோட் டையின் பேரிலேயிருந்து இங்கிலீசுக்காரர்கள் அறியாமல் அனுப்பி விட்டத்தினாலேமேலேபோட்டுக்கொள்ளுகிறதுக்கு அங்கிகூடயெடா மலும் வந்துவிட்டேனென்று சொல்லி இவர்கள் கையில் நூறு நூத்தன்பது மட்டுக்கும் பிறயோசனப்பட்டு றங்காச்சாரியாரை யழைத்துப்போய் திருச்சிராப்பள்ளியில் விட்டுப்போட்டு அவன் மறைந்து போன பிறகு றங்காச்சாரியென்கிறவன் மறுபடி தப்பி வரப்பட்டபாடு பிரமப்பிரேத்தினமாய்ப் போச்சுது அந்த றெங்காச்சாரி வந்து யிவடத்திலே மதாமுடனே பாப்பான் மோசம் பண்ணினான் அங்கேயெல்லாம் இங்கிலீசுக்காரர்கள் பிறபஞ்சமா யிருக்கிறது நாமக்கா மமுதல்லிகானிருக்கிறானென்று சொன்னான்

இத்தனாள் காலமே துரையவர்களண்டைக்குப் போயிவந்ததின்பேரில் கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால் அபரங்காப்பாத்துக்கு யிப்பால் கோதாவரிக்கு அப்பால் நிம்மல் யென்று ஒரு பட்டணமும் கில்லாவும் யிருக்குதாம் அங்கேயிருந்து முசி புசி ஒரு காகிதமும்—சயிது

செறிபு கான் ஒருகாகிதமும் அப்துல்ஆசி யென்கிற பனிறண்டு பாஷை பேசுபிற—றாமி ஒரு காகிதமும் இந்தக்காயித மூணும் காசி தாசு புக்கன்சி துக்காணுவிலே கொடுத்தது அவர்கள் காகிதம் ஆற்காட்டுக்கு வந்து அங்கேயிருந்து துரையவர்களுக்குக் குடுக்கச்சொல்லியவர்கள் குபாஸ்தா வண்டைக்கு அனுப்பிவைத்து அதை அவன் கொண்டு வந்து கொடுத்தான் அதைப்படித்து பார்த்து துரையவர்கள் யென்னுடனே சொன்னது சலாபத்சங்கு லஸ்காருடனே நம்முடவர்களும் கோதாவரி தாண்டி அபரங்கபாத்துக்குச் சமீபமாய் போனதாகவும் சலாப்த்துசங்கும் ராமதாசு பண்டிதனும் வசீர்—அப்துல் மன்சூரல்லிக்கான் மாரிபத்தில் அதுக்குத்தக்க திரவியங்கொடுத்து அனுப்பிவிச்சு தக்கனசுபா (Deccan-Subha) தங்கள் பேருக்கு பர்வாணுவுக்கு பிறேத்தனம் பண்ண படிக்கு—மன்சூரல்லிக்கான் வசீர் பாதுசாவுக்கு விண்ணப்பம் பண்ணின படிக்கு தக்கன் சுபா (Deccan) சலபத்துசங்கு பேருக்கு நேமக்கம் பண்ணி பர்வாணு யெழுதிவிச்சதாகவும் அந்தப்பர்வாணு கொஞ்ச நாளேயிலே வருமென்று முசே புசி (M. Busy) சயிது செறீபுகான் வகை யருயெழுதினது மல்லாமல் நிம்மல்-என்று ஒரு கோட்டையில் ஒரு இந்துஸ்தானியலிருக்கிறுன்—அந்தக்கில்லேதாரன் அண்டைக்கு-நிசமா நாசறுசங்கு—பாசிருயன் வகையருக்களுச்கு அந்தவங்கைக்கு வந்தவனல் லவாம் அப்பால் அப்படிப்பட்ட கில்லேதாரன் பிறுன்சு பவுன்சு கூட வருகுதென்ற பாஷேக்காறனை சலாபத்துசங்கு கில்லாதாரன் அண்டைக்கு அனுப்பிவிச்சு வந்து கண்டு கப்பம் உண்டானது குடுக் கிறயா— கோட்டையைவாங்கிப் போடுவோமாயென்று கேட்கச் சொன்னதுக்கு அவன் பயந்து கையைக் கட்டிக் கொண்டு எதிராக வந்து காலிலே விழுந்து வணங்கினுன். அப்பாலவனுக்குத்தானே அந்தக் கோட்டையை பாலிபண்ணி அவன் கையில் பணங்காசுக்கு மாற்கம் பண்ணிக் கொண்டார் களென்றும் மழை மிகுதியும் பேயுறபடியினுலே சேறும் ஆறுகாலும் வழிநடந்து போறது வெகு வருத்தமென்றும் அபறங்காபாத்துப் போய்ச் சேர்ந்தவுடனே அங்கே சாவணி பண்ணு கிறதாகவும் எழுதி வந்ததென்றுஞ் சொன்னுர். அப்பால் வற்த்தகனே சுறுக்கு பண்ணி பிடவை சீலே சுறுக்கிலே கொண்டு வந்து குடுக்கச் சொல்லிவெகு கண்டிப்பாய்த்தாக்கீதுபண்ணி பழையவர்த்தகர்களையும் கண்டிப்பாய் சொல்லி பிடவை கொண்டு வரச்சொன்னுர். நல்ல தென்று சொன்னேன். அப்பால் பனிரெண்டு மணிக்கு முசெ சொளிமி யாககு (M. Solominiac) கப்பல்க்கப்பித்தானும் முசே லபேத்து பெடுத்தலேன் சூப்பர்கார்குமாகவும் ஏறிக்கப்பலே மணிலாவுக்குப்பா யெடுத்தார்கள். இந்தக்கப்பல் கோவணத்திலேபோய் (Covelong) நாலஞ்சு நாளிருந்து முசியே லாபத்து பெடுத்தலேன் வகையருக்களுக்கு சரக்கு கூடினது யவடத்திலே யேத்திக் கொண்டு அப்பால் மணிலா வுக்குப்போனுர்கள்.

## 1751ஆ ஆகாஸ்துமீ 5உ பிறசோத்பதிஆ ஆடிமீ 24உ குருவாரம்

இத்தனுள் காலத்தாலே நேற்று ராத்திரி பேஞ்ச மழை துடந்து கொண்டுயிருந்த படியினுலே துரையவர்கள் பத்து மணிமட்டுக்கும் நித்திரைபோய் யெழுந்தார். நானும் தூறல் பத்து மணிக்கு விட்டுப் போன படியினுலே துரையவர்களண்டைக்குப் போனேன். அங்கே நான் கேழ்விப்பட்ட சேதி நேத்திராத்திரி பத்து மணிநேரம் ரெண்டு பேர் அற்காறர்கள் சந்தாசாயபுக் காகிதம் துரையவர்களுக் கொண்டு

வந்ததாகவும் அந்தக்காகிதத்தை அப்போதானே மதனுந்த பண்டிதனை அழைப்பிச்சு மத்தலப்பு அறிந்ததாகவும் அதிலேழுதி யனுப்பபின மத்த லப்பு முசியே தொத்தேலும் முசியே புறுணி—முசியே தான்சி வகை யறுவுகள். வெள்ளைக்காறர்கள் கொள்ளிடத்துக்கு—அக்கரை—பரிச் சேதம் போறதில்லையென்றும் புதுச்சேரிக்குப் போறோ மென்றும் வெகு கண்டிப்பின் பேரிலசொல்லி சொலுதாகளை அழைத்துக் கொண்டு புதுச்சேரிக்குப் பிறயாணம் போற யெத்தினத்தின் பேரிலேயிருக்குறார் களென்ன சமுதாயச்சு சொன்னாலும் பரிச்சேதமாய்க் கேழ்க்கிறதில்லை யென்றும் பிறப்பட்டுப் போறோமென்று யிருக்கிறதாக அதைத்தானே விஸ்தரிச்சு எழுதினதாகவும் அதின் பேரிலே சந்தாசாயபுக்கு பதிலுத் தரமும் முசே தொத்தெலுக்கு நாம் வெகுகண்டிப்பிலே தாக்கீது யெழுதி தனுப்பினும் அவரிந்தப்பாரிசம் நினைப்பை பரிச்சேதமாய் விட்டு விடுவார் தாம் முசியே தொத்தேல் முதலான் பேர்களுடைய பிக்கிரை விட்டு மனது இந்தக் காரியத்திலே நிம்மதியா யெண்ணிக் கொண்டு மேல் திருச்சிராப்பள்ளிக் கோட்டையை வாங்குகிற காரியத்திலே சாகிறதையாயிருந்து நடக்கச் சொல்லி காயிதமெழுதி விச்சு முசியே தொத்தேலுக்கும் மத்த ஒபிசியால்மார்களுக்கும் தாக்கீதாயெப்படி யெழுதவேணுமோ அந்தப்படிக்கு யெழுதி யிந்தமுகம் பாராமல் அந்த முகமாய் சந்தாசாயபு பவுன்சுடனே கூடப்போய் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை வாங்கச் சொல்லி கண்டிப்பாய் யெழுதியனுப்பினதாய் சேதி கேழ்விப்பட்டேன். இதுவரைக்கும் சேக்கசேன் காடுதி சிப்பாயிகளும் அவனும் வாலிகொண்டாபுரம் முதல் சீரங்கம் திருவானைக்காவல் பிடிச்சுக் கொண்ட மட்டுக்கும்—நாலஞ்சு சண்டையும் முனைந்து சண்டைப் பண்ணின தேயல்லாமல் முசியே தொத்தேல் வகையிறு வெள்ளைக்காரர் கள் பவுன்சு—அறோவிலே எப்போதும் போறதுஅதை விட்டுப்போட்டு இப்போ பிச்சாடியிலேயும் யில்லாமல் நாலு நாழிகை வழி பிறகே யிறங் பகினதாவும் அதுக்கு அடிக்கடி பேறோமென்கிற பேச்சும் அதுக்கு சமாதா னஞ் சொல்லி யிருக்கப்பண்ணுகிறதே வேலையாயிருக்கிறதாய் சந்தா சாயபு யெழுதிக் யெழுதிக் கொண்டானும். அதுக்குப் பதினைஞ்சு இருபது நாளைக்கு முன்பாக-யவர்களுக்கு மனதுவர-நாமாய் இரண்டு லெக்ஷம் ரூபா இனுமாய் நிறப்பியென்பேரிலே உண்டிகையெழுதி கொடும் அவர்கள் மனதுண்டாயி நடப்பார்கள் என்றும் அந்த உண்டிகைபடிக் கிப்பணம் நாமவர்களுக்கு கோடுக்கிறோமென்றும் துரையவர்கள் சந்தா சாயபுக்கு யெழுதியனுப்பினதாயும் அதையும் வாங்கிங் கொண்டு மறுபடியும் யிப்படி போக்கும் பேரிலே யிருக்கிறதாகவும்—இந்த விசை வெள்ளைக்காரர்களைத்தொட்டு ஒருகாரியமும் நடந்ததில்லை சம்பளம் ஒரு ஒபிசியாலுக்கு மாசம் முன்னூறு நானூறு ரூபாயாகவும் முசியே தொத்தோலுக்கு ஆயிரம்ரூபா விழுக்காடும் வாங்கிப்போறது மல்லாமல் இனும் இரண்டுலெக்ஷம் ரூபாகுடுத்தும் பிறயோசனம் மில்லாமல் போனது மல்லாமல் இல்லாததும் பொல்லாததும் புதுச்சேரி துரையவர் களுக்கு நித்தியம் ரெண்டு காயிதமெழுதுகிறு ரென்று யிந்த விசைமுனை சேக்க சேனைத் தொட்டு யென்றும் சந்தா சாயபு எல்லாருடனேயும் தண்டிலே சொல்லிக் கொள்ளுகிறதாய்க் கேழ்விப்பட்டேன். இதல்லா மலும் துறையவர்கள் சேக்கசேனுக்கும் அவன்—காற்துகளுக்கும் சம்பளத்துக்கு ஆக காரைக்காலிலிருந்து வந்த தஞ்சாவூர் போன யிருபத்து நாலாயிரமும்-பின்னையும் பதினாயிரமும் ரூபாயும் சிலவுக்கு யனுப்பினதைக் கண்ணிறைலே பார்த்தேன். இதுபார்த்த சேதியுங் கேழ்விப்பட்ட சேதியுமெழுதினேன்.

## 1751ஞு ஆகொஸ்நுமீ 7வ பிறசோத்பதிஞு ஆடிமீ 26வ சனிவாரம்.

இத்தனாள் சாயங்காலம் கேழ்விப்பட்ட சேதியாவது. ஆதிவெண்ணை யிலேயிருந்து இதாயித்து மொகதின்கான் தாயாருடை கரகிதமும் ஷெ குமாரன் காகிதமும் கந்தனூர் கோட்டையிலிருக்கிற முசபாகான் தாலூக்கு மனுஷனுடைய காகிதமும் வந்தது அதிலெழுதி வந்த சேதி சுவராசியமாத்திர மெழுதுகிறேன். கந்தனூர் கில்லேதார் இம்மத்து பகதூர்க்கான் இதாயித்து மொகதீன்கான் சண்டையிலே தலைவெட்டுப்போட்டுப் போனவன் தம்பி முன்முசாபாக்கம் தாலுக்கா அவனுக்கு சாகீராய் நடந்து அதிலேயிருந்தவன் அவன் பேர் முனவர்கான் அவன் பவுனசு கூட்டி கொண்டு கந்தனூர் கோட்டையை வாங்கிக்கொள்ள வருகிறானென்று எழுதி அதுக்கு பவுன்சு புதுச்சேரியிலிந்து வந்தால் நிறுவாகமாகும். இல்லாவிட்டால் கந்தனூர் கோட்டையும் வாங்கிக்கொண்டு அப் பால் ஆதிவெண்ணை முதலானயிடங்கள் யெல்லாத்தின் பேரிலேயும் அங்கரம் பண்ணுவானென்றும் அதுக்கு அவன் குஞ்சு குழந்தைகள் வகையறு -- சமுசாரமெல்லாம் காஞ்சிபுரத்தண்கட யிலே முசாபாக்கம் தாலுக்காவிலேயிருக்கிறவர்களைப் பிடிச்சுப் பத்திரம் பண்ணி யவ்விடத்துக்கு அவ்விடத்திலிருந்து பவுன்சு வந்தால் நிறுவாகத்துக்கு வருமென்று யெழுதியிருந்ததாகவும் அதுக்கு முசாபாக்கத்திலேயிருக்கிற யிம்மத்துபாதூர்கான் தம்பி-- முனவர்கான் குஞ்சு குழந்தைகளைப் பிடிச்சு வாரதுக்கு தாடிபத்திரி அமுல் பண்ணியிருந்த சயிதுமகம்மதென்கிறவன் சந்தாசாயபு தனக்கு இதாயித்து மொகதின்கான சலாபத்து சங்கு யிவர்கள் விட்ட சாகீர் விடமாட்டமென்கிறானென்று துரையவர் களண்டைக்கு வந்து பிறுது சொல்லிக்கொண்டவிடத்தில் தாது பிறுது யில்லாமல் மூணுமாசமாய்க் காத்துக்கொண்டிருந்தவனை இத்தனாள் ராத்திரி எட்டரை மணி ஒன்பது மணி வேளைக்கு அழைப்பிச்சு அவனைப்போய் முனவர்க்கான் குஞ்சு குழந்தைகள் முசாபாக்கத்திலிருக்கிறவர்களைப் போய்ப் பிடிச்சுக்கொண்டு வந்தால் உன்காரியம் அனுகூலமாய்ப் பண்ணிக்கொடுக்கிறோ மென்று வாசர் சொல்லி கொஞ்சம் சிப்பாயிகளையும் கூடக்கூட்டி யனுப்பி யெத்தனம் பண்ணி சொன்னதுக்கு அவனும் நாளைக்குப் போறோமென்று சொல்லிப்போட்டு வீட்டுக்குப் போகச்சே மதனாந்த பண்டிதன் சமையம் வந்தப்போது துரைக்கு ஒரும்பச்சொல்லி— யிதுமுன்னிலையாய் உன்காரியம் அனுகூலம் பண்ணிகுடுக்கிறதா யெத்தனம்பண்ணினேனென்றும் தான்வெகு பிறயாசப்பட்டதாய்ச் சொல்லித் தனக்கு வாய்க்கூலிக்கியெனம் பண்ணிக்கொண்டு அதின்பேரிலே ஒரு கத்தி ஒன்று வேணுமென்று சயிதுமகம்மது கானை கேழ்க்க அஞ்சாறு கத்தியிருக்குது காலத்தாலே உமக்கு வேணுமென்ற கத்தியைத் தாறேனென்று சொல்லிப்போட்டுப் போனதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது

இதல்லாமல் கேழ்விப்பட்டசேதி காரைக்காலிலிருந்து இரண்டு வெள்ளைக்காறர்கள் காயிதமும் ஒரு தெலுங்கெழுதின வோலை ஒன்றும் வந்ததாய் அந்த தெலுங்கோலை மேஸ்தர் கோப்பு

அண்டையிலே யிருக்கிறவன் தேவனும்பட்டணத்திலிருக்கிற தன் மனுஷனுக்கு தன் கிறகத்தியும யெழுதிக்கொண்டதிலே மேஸ்தர் கோப்பு முதல கி.. யிங்கிரேசுக்காறர் பவுன்சுக்கும் மமுதல்லிக் கானுக்கும் ஆ..மலிருக்கிற சாடையும் மேஸ்தர் கோப்பு கை யருக்க பிறப்பட்டு வந்து விடுகிறதாயிருக்கிறதா யெழுதியிருந்த தாய் ே..ம்விப்பட்டுது வெள்ளைக்காறக் காகிதச் சேதி சந்தாசாயபு பவுன்சைவிட்டு முசியே தொத்தேல் மாத்திரம் பிறப்பட்டு வருகிறதாயெழுதி வந்ததாகவும் அதின பேரிலேமதாம் தோத்தேலை அனுமர்சு உன் புருஷன் வந்தால் நாங்கள் பேசத்தக்கனதில்லை யென்று வரவேண்டாமென்று முன்யெழுதியிருக்..ச்சேயும் எப்படி வருகிறீரென்று கோபமாய் மறுபடி திருப்பிக்கொண்டுபோகச் சொல்லி யெழுதினதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

## 1751-ஆம் ஆகொஸ்துமீ 8உ பிறசோத்பதிஆம் ஆடிமீ 27உ ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே அபரங்காபாத் தண்டையிலே போயிருக்கிற லசுக்கரிலிருந்து முசியே புசிவகையரு வெள்ளைக் காறர் காகிதங்களும சலாபத்துசங்கு ராமதாசு பணடிதன் காகிதங்களும் காசித..சுபுக்கன் சி..டைக்கு ஆற்காடடுக்கு வந்ததை தறுவாடி கொண்டுவந்து ஆசாரம் தறுவாடி கையில் துரை விட்டிலே கொடுத்து துரைகையிலே குடுக்கச் சொல்லிப்போட்டு தான் உண்டியைப்பேச்சுப் பேசவேண்டியதுக்கு நாளைக்கு வந்து கண்டு பேசுகுறேமென்று சொல்லிப்போட்டுப்போனான். ஆசாரம் தறுவாடி அந்தக் காகிதங்களைக் கொண்டுபோய் துரைகையில் குடுத்தான். அவரதை வாங்கிக்கொண்டார். அதிலே யெழுதியிருந்த மத்லப்பு தெரியாது யினிமேல் அறியவேணும்.

இத்தனாள் சாயங்காலம் மமுதல்லிக்கான் காகிதமொன்று திரிச்சிராப்பள்ளியிலிருந்து வந்தது அது பிருமணன் ஒருத்தன் கொண்டுவந்து கொடுத்து அவன் வாசுதேவபண்டிதன் சாவடியிலே போய் ..ங்கரங்ாம யா போயிருக்கிறதாய் சேதி கேட்டோம். காகிதமத்லபு முன் சலாபத்துசங்கு கவில்ப்படிக்கு தான் பிறப் பட்டுப்போறதாய அந்தப்படிக்கு நடப்பிக்கிறதுக்குப்பரவசங்கேட்டு யெழுதினதாகவும் யிதல்லாமல் திரிச்சிராப்பள்ளி தனக்குத்தானே குடுத்தால் இம்மாத்திரம் தாறேமென்றும் ஆற்காட்டு சுபாகூட குடுத்தால் அதுக்கு இவ்வளவு அவ்வளவுதாறேமென்றும், அது களுக்கெல்லாம் பேசிக்கொள்ளுகிறதுக்கு புதுச்சேரியே வரு கிறதுக்கு சத்திபப் பிறமாணிக்கத்துடனே பரவசங்கேழ்க்கிற தாகவும் யிப்படியாக ராசவட்டம் விட்டு காகிதமும் யெழுதி யனுப்பினதாய் சேதிகேட்டேன் இதல்லாமல் மமுதல்லிக்கான் மதுரை யந்தப்பாரிசங்கட்டியிருக்கிற ஆலமகானுக்கு ராசவட்டம் விட்டு தன்பாமாயிருந்தால் அவ்வளவு யிவ்வளவு தருகுறேனென் றும் யெழுதி மனுஷர்களையும் அனுப்பியிருக்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது இங்கிலீசுக்காறர் பிகாடிச்சு வெளியே பிறப்பட்டு பங்காருதிப்பை யண்டையிலே வந்திறங்கி யிருக்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது சந்தாசாயபு காகிதம் ஒன்று சாயங்காலம்

வந்ததாகவும் அதிலெழுதியிருந்தசேதி முசியே தொத்தேல் கோபிச்சுக்கொண்டு பிறப்பட்டுவந்துவிட்டார். அவரங்கே சேர்ந்து யிவ்விடத்துக்கு அக்கிகத்துகள் சொல்லியிருப்பாரே.. யிப்பால் இவடத்து வெள்ளைக்காற பவுன்சுக்கு முசியேலாசை (M.Law) கொமாந்தமா வைக்கிறது மெத்த நல்லது. அவர் சொன்னபடி நடந்துகொள்ளச் சொல்லி ஒபிசியால்-சொல்தாதுகள் சிப்பாய்கள் வகையருக்கள் சொற்படி கேழ்க்க—உக்கும் அனுப்பிவைக்க வேணும்யென்று யெழுதியனுப்பினதாகவும் அந்தக் காயிதம் மத்தலப்பு துரைகேட்டு யிவன் பிறப்பட்டு வரலாமாவென்று கோபம் ரெம்பவென்றும் முசேலாசுவுக்கு கொமாந்தாமிடங் கொடுக்க சம்மதியில்லை யென்றும் யிப்படியாக சேதி கேழ்க்கப் பட்டது.

1751–ஸ்ரீ ஆகொஸ்து மீ 13வ பிறசோத்பதிஸ்ரீ ஆடி 3வ சுக்குறவாரம்

இத்தனாள் காலத்தாலே இரண்டு இங்கிலீசுக்காற சொலு தாதுகளோடிப் போய்விட்டார்களென்றும் அவர்களைப் பிடிச்சு வந்து அவர்களை தூக்கத்தக்கதாக கோயிலுக்குப்போயி பூசை கேட்டுவந்து கோன்சேல் கூடி சாயங்கலம் தூக்கிப்போடத்தக்க தாக கோன்சேல் கூடி தீத்தார்கள்.

1751–ஸ்ரீ ஆகொஸ்து மீ 18வ பிறசோத்பதிஸ்ரீ ஆவணிமீ 5வ புதவாரம்

இத்தனாள் காலமே கேட்ட சேதியென்னவென்றால் விறுத்தா சலத்தண்டையிலே மோறசா போட்டுக்கொண்டிருந்ததன் பேரிலே மதாம் துப்பிளேயிக்சு ஆமீல் றங்கோபண்டிதன் பேரிலே இங்கிலீசுக்காறர் பவுன்சு பிறப்பட்டுப்போய் விழுந்து அடிச்ச மாத்திரத்திலே — ஓடிப்போய் — ரங்கோபண்டிதன் ஓடிப்போய் நயினார்குப்பம் வந்து சேர்ந்தானென்றும் அவன் சேவுகர் சிப்பாய் கள் வகையரு நாற்ப்து சட்டைக்காரர் பீறங்கியும் யிழுத்துக் கொண்டு தீருவீதியே வந்து சேர்ந்ததாகவும் இங்கிலீசுக்காறர் கோட்டையிலே யிருந்த பேர்களும் பிறப்பட்டு அடிச்சு அவர்கள் மோறசா முதலானதுகளை நிரவிப்போட்டு அப்பால் றங்கோபண்டி தன் சேவுகர்கள் போட்டிருந்த குடிசைகளெல்லாம் நெருப்பை போட்டு கொளுத்திப் போட்டு அப்பால் கோட்டையிலிருந்து பிறப் பட்டவர்கள் கோட்டையே போனார்கள்—கூடலூரிலிருந்துபோன இரனூறு பேர்களும் வெளியே தானே யிருக்கிறதாகவும் இந்த சண்டைக்கு முன் கூடலூரிலிருந்து போறபேர்கள் சொலுதாதுகள் பிறகேபோன தின்பண்டம் சாமான்களெல்லாம் பிறகே நின்றவர்கள் கையிலே றங்கோ பண்டிதன் மனுஷர்கள் முன்னுதாக பிடுங்கிக் கொண்டதும். அல்லாமல் வெறும் பல்லக்கு போனதாயும் அதுவும் அகப்பட்டதாய் சேதி கேழ்க்கப்பட்டதும் இதல்லாமல் றங்கோ பண்டிதன் சிவபட்டணம் வெங்கிட்டாம்பேட்டை வகையரு பஞ்சமாம்—கல்குறிச்சி—பணத்துகளை வாங்கிக்கொண்டு சிப்பந்திக்

காறர்களுக்கும் குடாமல் இவ்விடத்துக்கும் அனுப்பாமல் நடப்பிச்சுக்கொண்டு வருகிற சம்மதிகளும் கேழ்விப்பட்டோம். யெல்லாம் துரைக்கு அறிவிக்குற பேரில்லாதபடியினுலேயும் — அல்லவென்று அறிவிக்குற பேருண்டாளுலும் யிப்போ செவிக்கேராதபடியினுலேயும் பணம் முழுகிப்போன பிற்பாடு அரியப்போளுர்கள்.

1751–வூ ஆகொஸ்து மீ 24உ. பிறசோத்பதி வூ ஆவணிமீ 11உ. செவ்வாய்க்கிழமை

இத்தனுள் ராத்திரி பத்துமணிக்கு துரை–ராசா சாயபுவை–அழைப்பிச்சி சாயங்காலமானபிறகு–உங்கள் தகப்பனுர் காகிதமும் தேவனும் பட்டணம் கோவற்ணதோர்–மேஸ்தர் சாந்தரசு–(Mr. Sanders) சந்தாசாயபுக்கு அனுப்பின காயிதமும் வந்துதே அந்தமத்தலப்புக்கு பதிலுத்தரமெழுதும் பொருட்டு ஆக வரச்சொல்லி அனுப்பினதின் பேரில் சந்தாசாயபுகுமாரன் குதபத்திக்கான் அல்லிசாயபுசலகு யிவர்கள் மூணுபேர்களும் போனுர்கள். அங்கே துரையவர்களும் மதாமும் மதனுந்தபண்டிதனும் மூணுபேர்களும் ஆக ஆறுபேர்களும் யிருந்து நடந்தசேதி நான் கேழ்விப்பட்டதை யெழுதினதாவது மேஸ்தர் சாந்தரசு சந்தாசாயபுக்கு யெழுதின காகிதத்தில் மமுதல்லிகான் திருச்சிராப்பள்ளிசீமையும் கோட்டையும் எங்கள் கையில் ஒத்திவிச்சு–திரவியம் வாங்கின சேதியறிவீர்களே–எங்களுக்கு யிருக்கிற சீமை யென்று அறிஞ்சிருந்தும் நீங்கள் சப்தி பண்ணதாய்ச் சேதி கேட்டோமிப்படி நீங்கள் சோராவாரியாய் நடக்கிறது உங்களுக்கும் எங்களுக்கும் யிருக்கிற சினேகத்துக்கு வெகுதூரம், இனிமேலப்படி நடப்பியாமலும் உங்கள் மனுஷர்கள் சீறமைவழிகளிலே போயிருக்கிற பேருக்கு தாக்கீது பண்ணி அந்தசீமைவழியிலேயிராமல் பிறப்பட்டு வந்துவிடச் சொல்லி வேண்டியதுஎன்று யெழுதியிருந்ததாகவும் அதுக்குப்பதிலுத்தரவு யெழுதவேண்டியவயணம்–துரையவர்கள் யெழுதியனுப்பிவிக்கச் சொல்லி யெழுதினதாகவும் அந்தக்காகிதந் தனுடைய மத்தலப்பைப்படிச்சுப்பார்த்துக் கொண்டு றசாசாயபு உடனே சொல்லி அன்று ராத்திரிதானே பதிலுத்தரமெழுதின வயணமாவது—

மேஸ்தர் சாந்தரசி பேருக்கு சந்தாசாயபு யெழுதுகுற காகிதத்துக்கு நக்கலிங்கேயிருந்து யெழுதியனுப்பிவிச்சதாவது. தாங்கள் அனுப்புன காகிதம் பார்த்துக்கொண்டு ஆச்சரியமாச்சுது என்றும் மமுதல்லிக்கான் பாதுசாவுடைய சீமையை உங்கள் கையில் யெப்படி அடமானம் வைப்பான் நீங்களேப்படி வைத்துக்கொள்ளுவீர்கள் அல்லவென்று வைத்துக்கொண்டால் செல்லுமா பாதுசாவுடைய சீர்மைகளை அமுல் பண்ணுகிறதுக்கு மாத்திரம் அதிகாரம் குடுத்தனுப்புறதேயல்லாமல் விக்கிறயம் பண்ணுகிறதுக்கு ஆருக்காகிலும் உத்தாரம் கொடுத்தனுப்புகிறதுண்டா–அல்லாமலும் தக்கனசுபைக்கு (Deccan Subak) யெசமாளு யிருக்கிற சலாபத்துசங்குபர்மாளு யென்பேருக்கு பாவிபர்வாளுயெழுதியனுப்பி சீமைக்கு எசமாளு–நானிருக்கச்சே–மமுதல்லிக்கான் கையில்–இதுவை வாங்ஞேமென்றெழுதினது பின்னேயும் ஆச்சரியமாயிருந்தது. இப்பவும் நீங்கள் ரகவரியாய்ப் பூந்தமல்லி சீமை மயிலாப்பூர சீமை

தேவனும்பட்டணம் சீமை வகையறுக்கட்டியிருக்கிறீர்கள் அதுவிட்டு விடச்சொல்லி நாலாறு காகிதங்கள் யெழுதியனுப்பி விடாமலிருக்கிறீர்கள். இதல்லாமல் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை வகையறுயிடங்களிலே உங்கள் பவுன்சை அனுப்புவிச்சு பகையாளிகளுக்கும் மத்தத்துபண்ணிக் கொண்டும் வருகிறகாரியங்களுக்கெல்லாம் நல்லதல்ல. உங்களுக்கு மெங்களுக்கும் யிருக்கிற சினேகத்தின்டேரிலே திஷ்டிவைத்து—நீங்களாயறிந்செயிருந்தும் நடப்பிக்குறவர்கள் யெப்போதும்-நடப்பிக்கமாட்டார்கள். தன்னிச்சையாய் விட்டுவிடுவார்களென்று எண்ணியிருந்தோம். யிந்த மட்டுக்கும் விடாமலிருக்கிற படியினலே யிப்போ யெழுதியனுப்பிவிச்சுபோட்டோம். தங்கள் மனுஷர்களுக்கு யெழுதியனுப்பி அழைப்பிச்சுக் கொள்ள வேண்டியது. யில்லாவிட்டால் பாதுசாவினுடைய சீர்மைகளிலே நீங்களிப்படி கலகம் பண்ணுகிறது பெரியமனுஷர்களுக்கு விகிதமல்லவென்று எழுதி சந்தாசயபுக்கு காகிதமெழுதி யிந்தபடிக்கு மேஸ்தர் சாந்தரசுபேருக்கு யெழுதியனுப்பவேண்டிய காகிதத்துக்கு சவ்வாதெழுதியனுப்பினேம். அந்தப்படிக்கு அசலெழுதி அனுப்பச்சொல்லியுமிதல்லாமல் மேஸ்தர் சாந்தரசு அனுப்பின லகோட்டா முத்திரைக் காகிதத்தை வைத்துக்கொண்டு உன்காகிதமொன்று மேஸ்தர் சாந்தரசு சந்தாசாயபு பேருக்கு திருச்சிராப்பள்ளி கோட்டையும் ஒப்பிச்சு மமுதல்லிகானையும் பிடிச்சு ஒப்பிச்சுப்போடுகிறோம் யெங்களுக்கு இன்னதுயின்னது நீங்கள் நடத்துகிறதானல் யென்று மீத்தியெழுதிஅந்த லகோட்டாவிலே வைத்து மமுதல்லிக்கான்தாலுக்கு மனுஷர் மனுஷர்முசியே தொத்தேல்சேக்கசேனண்டைக்கு அந்தரங்கமாய் வாரார்களே அவர்களுக்கு காண்புச்சு மமுதல்லிகானண்டைக்கு அனுப்பிவிச்சல் மமுதல்லிகான் அந்தரங்கத்தில் இங்கிரேசுக்காரர் பேரிலே அவிசுவாசமாயிருக்கிறதுக்கும் யிவடத்தியாருக்கு அந்தறங்கமாயிருக்கிறதுக்கு—ராசவட்டம் அனுப்பிக்கொண்டு யிருக்கிறதுக்கு யிந்தக்காகிதத்தைப் பார்த்தவுடனே மமுதல்லிக்கானுக்கும் இங்லீசுக்காறருக்கும் பிகாடிச்சுப்போமென்றும் யிந்தப்படி வஞ்சனை பண்ணவேணுமென்று சந்தாசாயபுக்கும் யெழுதி முசியே தொத்தேலுக்கும் யெழுதி அனுப்பினதாய் சேதிகேட்டேன். இந்தகாகிதங்களெழுதியான பிற்பாடு ராசாசாயபு—ராத்திரி பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்ததாய் சேதிகேட்டேன்.

## 1751—ஞு ஆகெஸ்துமீ 27உ. பிறசோத்பதிஞு ஆவணிமீ 14உ. சுக்கிறவாரம்

இத்தனை கேழ்விப்பட்ட சேதியென்னவென்றல் விருத்தாசலத்திலே யிருக்கிற கோட்டையை வாங்குற பிறதிஷ்டை மதாமுக்கு வருத்திக்க வேணுமென்று துரையவர்கள் கருத்துயிருந்து அதன்பேரிலே மதாமும் றெம்பபிறயாசைப்பட்டுவெள்ளைக்காறர் சட்டைக்காறர்கள்சிப்பாயிகள் கற்னட்டக சேவுகர்கள் வகையறு ஆயிரதன்னூறு பறங்கிதுப்பாக்கிகளும் இரண்டுபீறங்கிகள் வகையிறு ஆயுதங்களும் விஸ்தாரமான மருந்து குண்டுமிவர்களுக் கெல்லாம் சம்பளமிந்தமட்டுக்கும் பதினையிரம் ரூபாமட்டுக்கும் கொடுத்ததுமல்லாமல் சுத்துப்பட்டுலே யிருக்கிற பாளையக்காறர்கள் ஊத்தங்கால் காங்கயநயினர் பிழைநாலாயிரம் பொருதாபிள்ளை சிறிது ருணுவுகூட்டிக்கொண்டு யிப்படி ஹோமத்துடனே றங்கோபண்டிதன் என்கிற நாமுறுததிருட்டுப்பாப்பானை

அனுப்பிவிச்சு கோட்டையை வாங்கவேணுமென்று சகல பிறேத்தன்மும் பண்ணின விடத்தில் யெதிரிகள் தலைப்பட்டு அடிச்சமாத்ரத்திலே மறுபடி முன்ரெண்டுதரமும் முறிஞ்சு ஓடிப்போய்மூணுவதுயிவ் டத்திலே யிருந்து-அனபது வெள்ளைக்காறர்களும் மூணு பீரங்கியும் போயும் சறுதார் ரங்கோபண்டிதன்னுன படியினாலே மூணுந்தரம் முறிஞ்சு ஓடிவந்தார்களென்றும் பீரங்கி காதிலே ஆணி அடிச்சுபோட்டு சின்ன பின்னமாய் ஓடிப்போய்விட்டதாய் சேதி கேழ்க்கப்பட்டுது இதை தொரைக்கு என்னமாய்-மறைத்துச் சொல்லுகிறார்களோ நானறியேன் யிதுயினிமேல் அறியவேண்டியது.

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் அழைப்பிச்சு தஞ்சாவூரார் செத்தப்பொல்லாதவர்கள் நாமென்ன சகாயம் பண்ணவேணுமென்று நினைத்தாலும் நமக்கு அசிறேயசேகோருகிறார்கள். மமுதல்லிகான் யிங்கிலீசுக்காறர்களுக்கு செயமே கோருகிறார்கள். அதெப்படி யென்றால் காசுத்திக்கான் காயிதம் வந்ததாகவும் அதின்பேரிலே சந்தாசாயபு காரியம் நடக்க மாட்டாது யென்றாப்போலேயும் பேசிக்கொண்டது மல்லாமல் சக்கரை வழங்கின பண்டிகை-கொண்டானதா யெழுதி வந்தது. யினிமேல் தஞ்சாவூர் கோட்டை வாங்கிக்கொள்ளுகிறதே யல்லாமல் விடத்தக்கதில்லையென்று பின்னையும் அனேகங்கோபமாய் உத்தரவு சொன்னார். அதுக்கு நான் சொன்னது சலாபத்துசங்கு-அபரங்காபாத்து போய் சேர்ந்து தக்கன சீமையெல்லாம் சுவலசமாய் முன் நிசாமுக்கு நடந்ததைப் பாற்க அதிசயமாய் சகலசமேதாரர் பாளையக்காறர் மன்சுபேதாறர் கில்லேதாறர்கள் வகையரு முன் நிசாமுக்கு அந்தவங்கைக்கு வருதவர்கள் கூடயிப்போ பிறுன்சுக்காறரிலமிருக்குதென்று சலபத்சங்குயெல்லாரும் கீழ்படிஞ்சு நடத்துறாப் போலே ஆச்சுது. யிதல்லாமல் பாதுசா பறுவானா வந்தது காசுதிகானையும் டில்லியை அழைப்பிச்சுக் கொண்டு அவரும் அனுகூலமாய்க்காகிதங்கள் சலபத்துசங்குக்கு அனுப்புகிறாப்போலே ஆச்சுது இப்படியிருக்க காசுதிக்கான் காயிதம் யெப்படி வரும் அல்லவென்று வந்தாலும் மத்தது காலம் யிருகிற காரியங்களை அனுப்பிவிச்சுயிருந்தும் தஞ்சாவூர் வெளியே பிறசித்தமாக நடப்பிப் பார்களா அதிலேயேதோ-ஒருகாரியமிருக்கவேணும். யில்லையென்றால் பொய்யாருக்கவேணும். அப்பாலும் தஞ்சாவூரார்களும் பெகுசாய் சங்கடப்பட்டுயிருக்கிறவர்களான படியினாலே அவர்கள் யெக்காயெக்கியமாய் நடத்தமாட்டார்களென்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது இங்கிலீசுக்காறர்கள் யிப்படி பிறப்பிச்சார்கள் அதையவர்கள் நம்பினார்களென்று சொல்லிப்போட்டு உள்க்காம்பிறாவிலே போனார். அப்பால் நான்காசாகச்சேரியே வந்தேன். அப்பால் சாம்பசிவறாயனை அழைப்பிச்சு ரொம்பவும் கண்டிச்சு தஞ்சாவூராருக்கு காகிதம் எழுதச் சொன்னதாய் சேதிகேழ்க்கப்பட்டுது.

## 1751-ஸு ஆகெஸ்துமீ 28உ. பிறசோத்பதிஸு ஆவணிமீ 15உ. சனிவாரம்.

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் என்னை அழைப்புச்சு பகல் வந்த நாலுகெசம் செகப்பு சகலாத்தும் பாக்கு வெத்திலை பன்னீர் மூஸ்தீதுப்பு பண்ணிக்கொண்டுவரச் சொல்லி தாமும் ரசாசாயபும்

மீர்ஷமும் அல்லிசாயபுசலக்கும் உளுக்கார்ந்திருந்து முருரியன் வக்கீல்–கோபாலராயனை யழைப்பிச்சு உளுக்காரவைத்து என்னைச் சொல்ல சொன்னது உம்மை முராரிராயன் காரியங்களை கள் சொல்லி அனுப்பினபடிக்கு நாங்களும் அவரமனதின்படிக்கு யெல்லாம் கொடுக்க சம்மதிச்சுக் கொண்டோம். நீங்களும் நாங்கள் சொன்ன சம்மதிபடிச்கு சம்மதிச்சு நடந்துக் கொள்ளுகிறுமென்று சொன்னீர்கள். யிப்போ பண்ணிக்கொண்டகறுருலே நீங்களும் தப்பக்கவையில்லை. நாங்களும் தப்பக்கவையில்லை யென்று சொல்ல அதுக்கு அவர் யெங்களைத் தொட்டு ஒருக்காலும் தப்பத்தக்க தில்லை–அது–கெட்டியாய் மனதிலே யெண்ணிக்கொள்ள வேண்டிய தென்று பதிலுத்தரம் சொன்னவுடனே துரை பாக்குவெத்திலே பன்னீர் குடுத்து சகலாத்து நாலுகெசமுங்குடுத்து முருபிருயனுக்கு காயிதமும் குடுத்து உடனே வாங்கிக்கொண்டு எழுந்து சலாம்பண்ணி அனுப்பிவிச்சுக் கொண்டுபோனுன்.

ஒடம்படிக்கையென்னவென்ருல் முருரிருயனை யெத்தனை குதிரையாள் சந்தாசாயபுக்கு மத்தத்து வருகுதோ வருகுற குதிரைகளுக்கு குதிரை சுவார் 1-க்கு யிருபது ரூபா விழுக்காடு மாதாமாதஞ் சம்பளம் ரொக்கத்திலே கொடுத்து விடுகுறது அப்பால் மொகத்து மாக்கள் தீந்தால் 100–க்கு ஏழு விழுக்காடு முருரிருயனுக்கு கொடுக்கிறது முருரி ருயன் வந்து பேட்டி ஆனவுடனே வெகுமானம் ஆனை ஒன்று கொடுக்கிறது குதிரை ஒன்று சிரோப்பா ஒன்று கொடுக்கிறது. இதல்லாமல் முராரிராயன் தம்பிமார் வந்தால் அவர்களுக்கு வெகுமானம் சிரொப்பாவும் குதிரையும் கொடுக்கிறது யிதல்லாமல் ஒரு வேளை மேவதவம் வந்தாலும் மருட்டியர் பாசிராயன் றமோசி பூன்சலா பத்தேசிங்கு வகையருக்கள் பவுன்சு வந்தாலும் ஆகுது யிங்கக் ககூபிலே யிருந்து அவர்கள் பேரிலே சண்டை பண்ணுகிறது பின்னையும் அவர்களிலேயிருந்து வஞ்சனை பண்ண வேணுமானலும் பண்ணிகிற தென்று யிதுமுதலான உடன்படிக்கை துரையவர்களும் ரசாசாயபும் கேட்டதாகவும் அவர் வைக்கில் அதுகளுக்கெல்லாம் சம்மதிச்சு அதுக்கு அவர் கைக்காகிதம் வாங்கிக்கொண்டு வரச் சொன்னதாய் அதின் பேரில் கோபாலருயனென்கிற வக்கீலும் போறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது. கோபாலருயனிதல்லாம் குவியப் பேசுகிறபடியினுலே தக்கி கொடுக்கவேணுமென்று கேட்டுக்கொண்டதாகவும் அதுவுங் குடுக்கிறோமென்று செல்லி போகச்சொன்னதாய்க் கேட்ட சேதியை எழுதி வைத்தேன்.

மறுபடி யென்னை அழைப்பிச்சு ரசாசாய மீர்ஷம் அல்லிசாயபு சலக்கு இவர்கள் மூணு பேர்களும் யிருக்கச்சே சலாபத்து சங்கு அபரங்காபாத்து போய்ச் சேர்ந்தவுடனே நிசாம் புராதன அரண் மனையிருந்துதே அந்த அரண்மனையிலே சலாபத்து சங்குவை பலவந்தமாய் அழைத்துப்போய் உளுக்கார வைத்து சயிதுலசுக ர்கான் வகையரு அமீர்களும் ராக்கள் அவ்விடத்திலேயிருந்த கில்லேதாறர்கள் மனசுபேதார்கள் வகையரு வந்து நசர்வைத்துக் கண்டார்கள் என்றும், நிசாம்சித்தப்பன் அயிவதுக்கான் வீடுபெரிய வீடு, அந்த வீடு முசியே புசிவயிராக்களுக்கு விடுதி விட்டார்கள் யென்றும் சலாபத்துசங்குயண்டையிலே ஒரு குவாருடுது

வெள்ளைக்காரர்களும் ராமதாசு பண்டிதன் அண்டையிலே ஒரு குவாடுதி வெள்ளைக்காரர்களும் சயிதுலசுக்கர்கான் அண்டையிலே ஒரு குவாடுதி வெள்ளைக்காறர்களும் காவலிருக்கிறதாகவும் நம்முட பிரான்சுக்காறர்களை நம்புகிறதேயல்லாமல் அவர்கள் கூட்டம் அதிகமாயிருக்கிறவர்களைக்கூட நம்புகிறதில்லையென்றும் அவ்விடத்திலேயிருக்கிற பாளையக்காரர் கில்லேதாறர் சமேதாறகள் மனசுபேதாகள் வகையருக்கள் மருட்டியர்கள்கூட நம்முட பவுன் சென்றால் சரீர கம்பங்களெடுத்து நிசாம் நாளையில வசவிருந்திக்கு வராத கில்லேதாறர் சமேதாறகள் பாளையக்காறர் வகையரு யிப்போ வசவிருத்திக்கு வந்துயிவர்கள் ஆணை ஆக்கினையிலே நடந்துகொள்ளுகிறதும ராச்சியத்திலே கலகம் யில்லாமல் அடங்கிப்போனதும் அவர்கள் தங்கள் தங்கள் டங்கள் தங்களுக்கு தப்பினால் போதும் மென்று நடுநடுங்கி யிருக்கிற சம்மதிகள் முதலாய் துரையவர்கள் சொல்ல ரசா சாயபு யிதெல்லாம் உம்முட பயத்தினாலே நடக்குது யிதுவுமல்லாமல் ராமதாசு பண்டிதனுக்கு குல்லேக் குத்தியாராய் சலாபத்துசங்குகூட கைகட்டிக்கொண்டு சொன்னபடி கேட்டுக்கொண்டு நடக்கத் தக்கதாக மகத்தாகிய யோகம் நடக்கிறது உங்களைக் தொட்டு அல்லவென்று ரசா சாயபு சொல்லி பின்னையும் லோகாம்பிறமமாய்ப் பேசியிருந்து சயிது லஸ்கருகான் மெத்தப் பயந்திருந்தும் அதின பிற்பாடு முசியே புசி ஆதரவான விசேஷம் சொன்ன பிற்பாடு நம்பி நின்றதும் அபரங்காபாத்துக்கு போகச்சேநிறுமல் கில்லேதாறன் வகையிரா சமேதாரர் முசியே புசி மாரிபத்திலே வந்து கைகட்டிக்கொண்டுபோய் சலாபத்துசங்குவைக் கண்டதும் அதுக்குமுன் அயிதராபாத்து சேராததுக்கு முன்னமே பட்டாணியர் வகையருக்கள் இம்மத்து பகதூர்கான் அப்துல் நபிக்கான் வகையிருக்கள் வெகு சோராயிருந்து சண்டை பேட்டதுக்கு பிரான்சுக்காரர்கள் யிருந்தபடியினாலே நிசாம் வமுசமென்று தப்பிச்சு யில்லாவிட்டால் சரிப்பிடுச்சுப் போடுவார்கள் அப்பால் மருட்டியர்கள் வந்தவர்கள் காரியமும் பிரான்சுக்காரர்கள் யில்லாமல் போனால் துலுக்கர்களையெல்லாம் சரிப்பிடிச்சு மராட்டியர் தங்கள் தேசமாக்கிப் போடுவார்கள்யென்றும் யிதுமுதலான பேச்சுக்கள் பேசியுருந்து அப்பால் மதாம் காம்பிறுவிலே ரசா சாயபு பேசப்போனான் அப்போ மீர்ஷத்தை துரையவர்கள் மீர்குலாமுசேனுடைய உடப்பிறந்தாள் பிள்ளை மீரல்வி அக்பர் வகையாறுக்கள் கும்பினியார் கடன் வாங்கின லக்ஷம் ரூபா சம்மதி சீட்டுத் தீர்த்து போடச் சொன்னால் அட்டிபண்ணிக்கொண்டுவாறுர்கள் நீர்வந்தீரே தெரியப்படச் சொல்லி தீர்த்துப் போடச்சொன்னால் தீர்த்துபோமென்றும் நல்லது அப்படியே தீர்த்துப்போடுவிக்குகிறேன். என்ன நாங்கள் அவன் அப்படியிப்படியென்று றொம்பவும் சொன்னான். அதின்பேரில் மீர்குலாமுசேன் சம்மதியில் முப்பதினாயிரம் ரூபா கும்பினீரிலே வாங்கியெனக்கு யிருவத்தாறாயிரம் ரூபாகுடுத்த சம்மதி நான் குடுத்துவிடுகிறேன் அந்த சீட்டைக் கொண்டுவரச் சொல்லி சொன்னார். நல்லது நாளைக்கு கொண்டு வருகுறேன் என்று சொல்லிப்போட்டு ரசாசாயபுயிருக்கிற மதாம் காம்பிராவிலே மீர்ஷம் போனான். துரையவர்களும் தன்னுடகபினேத்தை போனார்-நானும் காசாக் கச்சேரியே வந்தேன்.

1751-ஹு அகோஸ்துமீ 29உ பிறசோத்பதிஹு ஆவணிமீ 16உ ஆதிவாரம்.

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப்போய் பூசை கேட்டுவந்த பிற்பாடு நேத்து ராத்திரி வந்த சீரமை கப்பல் தொபேன் என்கிற பேருடையது கப்பல் கப்பித்தான்முசே பிக்காறு யென்கிற பேருடையவன் அவன் யிறங்கி வந்து துரையவர்களை காண்பிசக்கொண்டு சீமைக்காகிதங்கள் குடுத்தான். அதைப் படிக்குறவேலை வேலையிலேயும் அப்பால் மச்சிலி பந்தலுக்குப் போய் அப்பால் பங்காளத்துக்குப் போறதாயிருக்கிற கப்பலானபடியி னாலே அந்தரெண்டு யெடங்களுக்கும் அனுப்பவேண்டிய காகிதங்கள் வகையிரா-யெழுதுகிறபடியினாலே அந்த அலுவலிலேயிருந்தார் யிந்தக்கப்பலும் செவ்வாயினின்று வந்த கொம்பஞ்சிய் (Compagnie) தெசேந்து-(deindes) யென்கிற ரெண்டு கப்பலும் சோடாய் பெவிறியேர்மீ 3உ லோரியாம் விட்டுப் பிறப்பட்டு விட்டதாய் சீமைக்கப்பல்க் கப்பித்தான் யென்னுடனே சொன்னான். முசியே லபோடுதுனே பேச்சு முன்னையைப் போலே காவலிலேயிருக்கவில்லை வெளிப்பிறப்பட்டு மீனிஸ்தருக்குள் வீட்டுக்குப் போகவரயிருக்கிற தாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.

1751-ஹு அகோஸ்துமீ 30உ பிறசோத்பதிஹு ஆவணிமீ 17உ சோமவாரம்.

அப்பால் சாயங்காலம் ஆறுமணிக்கு துரையவர்கள் அழைப் பிச்சார்கள் ரசாசாயபும்யிருந்தார் அப்போ ரசாசாயபும் துரையும் யிஷ்டாலாபமாய்ப் பேசியிருந்த போது நான் யிந்திரே பேரேநாரிட் டேன் நடந்தவயணம் இத்தனுள் காலத்தாலே கோட்டையிலே காரிக்கசலவைப்பார்வையானபடியினாலே கோட்டையிலே போயி ருக்கச்சே துரை சேவகன் வந்து அழைக்க துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே மயேயிலேயிருந்து காகிதங்கள் வந்ததுடனே கூட கொல்லட்டு நாட்டு மலையாள ராச யெழுதின ஓலைவொன்று கூடவந்தது. அந்தவோலை படிச்சுக் காண்பிக்கச் சொன்னவிடத்தில் மலையாளத்துப்பேச்சும் தமிழான்யெழுத்தும் மலையாள யெழுத்துமா கலந்து எழுதியிருந்த படியினாலே மலையாளத் துக்குப் போக்குவரத்தாயிருக்கிற வயிஷ்ணவ பிருமண பெருமாளய்யன் வகையறுரெண்டு பேரை அழைபிச்சு நான் படிக்க அவர்கள் அர்த்தம் சொல்ல ஒரு விதமாய்க் காரியம் சுவாரசியமாத்திரம் அறிந்து கொண்டு துரைக்கிச் சொன்ன வயணம் நாஙகளிப்போயெங்கள் சத்துருக்கனுடனே பகைச்சு சண்டை போடுறோம் எப்போதும் அன்னியோன்னியமாய் யிங்கிரேசுக்காறருடனே சினேகமாயிருந்த எங்களை விட்டு யெங்கள் சத்ருக்களுக்கு கைகொடுத்து அவர்களுக்கு மத்தத்தும் பண்ணின படியினாலேயும் யிதல்லாமல் யெங்களை அவமானப்படுத்தினது. ஓலைமுகாந்தரத்திலே யெழுதப்போதாது. அப்படியவர்கள் நடப் பிச்சபடியினாலே யெங்களாலேயானமட்டுக்கும் சண்டை கொடுத்து அப்பாலுங்கள் ஆசராவை சேர்ந்தோம் உங்கள் பிருன்சுகும்பிஞ்ஞி றெம்ப மேனபாடுவான கும்பிஞ்ஞியென்று ராச்சியமெல்லாம்

எண்ணப்பட்டு பிறசித்தமாயிருக்கிறபடியினலே உங்கள் பிருஞ்சுக் கும்பஞ்ஞீய்வை அடைக்கலமாயடைஞ்சோம் யிப்போயெங்களுக்கு வேண்டிய சண்டை ஆயுதங்களும் மருந்து குண்டு சாமான்களும் மதத்துப்பிலனும் அனுப்பவேண்டியதுக்கும் மயே குவற்ண தோருடனே சொல்லிக்கோண்டோம். அவர் வயணமாய் யெழுதி அனுப்பின காகிதம் பார்த்துக்கொள்ளச்சே தெரியவரும் கொல்லத்துக்கும் தொள்ளாயிரத்து தொண்ணூத்தாறு ஆஷாடமாசம் பெழுதினதென்றுயெழுதியிருந்தது அந்த மத்தலப்பை துரையவர்களுடனே சொன்னதுக்கு துரையவர்கள் முசியே லெபோம்-அண்டைக்குப்போய் திராத்துக்சியோம் பண்ணிக்கொண்டு வரச்சொன்னபடிக்குப் பாய் திராதிக்குசியோம் பண்ணி அந்த பிருனசு எழுத்திலே எழுதின றசீதுக்கு-லெபோமைக்கொண்டுவந்து துரையவர்கள் கையில் கொடுத்து அவடேத்திலேயேருந்து எழுதி வந்த மலையாளமபாஷை ஓலையையும் கூடகுடுத்து அதுக்கு ஓலையை மாத்திரம் என்கையில் கொடுத்து பிருணசெழுத்திலே எழுதியிருந்த றசீதுக்கு திருதுக்குசியோமை வாங்கிக் கொண்டு கபினேத்தைப் போனர். நானந்த ஓலையை வாங்கிக்கொண்டு காசாக்கச்சேரியிலிருக்கிற மேசைப்பலகை மேலண்டையிலிருக்கிற அறையில் மேலே காகிதம் சுத்தி தெலுங்கிலே யின்றையதினம் வந்ததென்றும் யின்னர் அனுப்பினதென்றும் யெழுதி அதிலே வைத்தேன் மறுபடி பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

1751௵ அகொஸ்துமீ 31உ பிறசோத்பதி௵ ஆவனிமீ 18உ
அங்காரகவாரம்

இத்தனுள் பகலைக்கு மேலாக துறையவர்கள் நம்முடைய வீட்டுக்கு யெதிராகயிருக்கிற கோயிலிலே வந்திதிருக்கிற கொச்சிம் சீனத்துப் பீஷப்புவை வந்து சந்திச்சு பேசியிருந்துபோனர். அதன் பிறபாடு நான் காசாக்கச்சேரியய வந்தேன். சாயங்காலம் கேழ்விப்பட்ட சேதி மேஸ்தர் சாந்தரசு தீவுக்கோட்டையிலே யிருந்து திருச்சிராப்பள்ளிக்குச் சிறிது சொலுதாதுகளும் றஸ்தும் குண்டும் மருந்து வகையரு சாமானுகளும் அனுப்பினதாகவும் திருச்சிராப்பள்ளிக்கோட்டைக்கிச் சமீபத்தில் போகச்சே சந்தா சாயபு குதிரைகாறர்கள் சிறிது பேர்களும் தஞ்சாவூர் பவுன்சும் போய் தடைபண்ணினல் அவர்கள் தள்ளி திருச்சிராப் பள்ளி கோட்டை போய் சேர்ந்துபோனதாகவும் அந்தறஸ்து சண்டை சாமான வகையரு உபேஷையாயி தஞ்சாவூரார் விட்டு விட்டார்கள் யென்கிற தாய் துரையவர்களுக்கு யெழுதிவந்ததாய் துரையவர்கள் தஞ்சாவூர் வக்கீல் சாம்பசிவறுயனே அழைப்பிச்சுக் கோபிச்சுக் கொண்டதாகவும் அதுக்கு அவன் விபேஷையாய விடத்தில் விடத் தக்கதில்லை யென்று அதுக்குத்தக்கதாய் சொன்ன விடத்திலே தஞ்சாவூர்ராசாவுக்கு காகிதம் யெழுதச் சொன்னப்போலேயும் அந்தப்படிக்கு தஞ்சாவூர்ராசாவுக்கு காகிதம் எழுதினப்போலேயும் சேதி கேழ்விப்பட்டேன்.

இத்தனுள் ராத்திரி புதுசாய் வந்த சொலுதாதுகள் இருநூறு பேர்களையும் ஒபிசியால் மார்களையும் திருச்சிராப்பள்ளில் லசுக்கருக்குப் போகச் சொல்லி அவர்களுக்கு மருந்து குண்டு சாமான் வகையரு அமத்தி நாளையதினம் சூரியஉதயத்துக்குப் பயணம் போகத்தக்கதாக

கோட்டையிலே சொலுதாதுகளை யெல்லாம் கொன்சினது பண்ணி யிருக்கிறதாய் சொன்னார்கள். இவர்களுடனே கூட ரசாசாயபும் நாளைய தினம் போகச் சொன்னப்போலேயும் போறேமென்று அனுப்பிவிச்சுக் கொண்டு போனதாயும் சிப்பாய்கள் சுவார்கள் வகையிரா கறசுகளுக்கு ரெண்டுலக்ஷம் ரூபா கேட்டாப்போலேயும் அன்பதினாயிரம் ரூபா குடுக்கிறேமென்று ஆக்கிருக்கு லக்ஷம் ரூபாய் குடுக்கிறதாயிருக்கிறு ரென்றும் இதிலே அவ்விடத்திலேயிருக்கிற சிப்பாய்கள் தங்காவுக்கு அஞ்சாறுலக்ஷம் ரூபாவுண்டானால் கொடுத்து ஒரு விதமாய்ச் சமாதானம் பண்ணலாம்—அந்த மட்டுக்கும் ,, கேட்டால் போராதென்று ரெண்டு லக்ஷம் கேட்டதுக்கும்ஒரு லக்ஷமானால் யெந்தவிதத்திலே நிறுவாகமா மென்று வெகு யோசனையின்பேரிலே யிருக்குறார்—சாயபு சாதாவென்று ராத்திரி வந்து கபுறு சொன்னார்கள்.

## 1751௵ செப்தெம்பர்மீ 1உ பிறசோத்பதி௵ ஆவணிமீ 19உ புதவாரம்

இத்தனாள் காலத்தாலே நேத்துராத்திரி கோட்டையிலே சந்தா சாயபு லசுக்கருக்கு அனுப்பலஷீல் (Achille) என்கிற கப்பலில் மசுக்கரை முறீசு— சீமைவகையரா யிவிடங்களிலே யிருந்து வந்த கப்பலிலே யிறங்கிறந்த வெள்ளைக்காறர் சொலுதாதுகள் ஒபிசியால் மார்கள் வகையரா யிறநூறு யிறநூத்தன்பது மட்டுக்கும் கோன்சினதுபண்ணி யிருந்த பேர்களை அஞ்சரைமணி ஆறுமணி வேளைக்கிப்பயணப் படுத்தி அனுப்பி விச்சார்கள். பகலைக்கு மேலாக மூணரை மணிக்கு சந்தாசாயபு மகன் ரசாசாயபு சந்தாசாயபு லசுக்குருப் போறதுக்கு துரைகையிலே சிலவுவாங்கிக் கொள்ளுகிற நிமித்தம் போய் சிலவு வாங்கிக் கொண்டு போய் ஒழுகரையிலே போயிறங்கினார்கள். போகச்சே முகத்தைச் சின்னம் பண்ணிக்கொண்டு போனான் அந்த சாடை யென்ன வென்று கேட்டால் சிலவுக்கு—அஞ்சுலட்சம் கேட்டு தீர்மானம் ரெண்டுலட்சம் கேட்டதுக்கு அன்பதினாயிரம் கொடுக்கிறே மென்று துரை சொன்னதின் பேரிலேயும் பினனையும் நாலத்து ரெண்டு காரியம் யிவன் கேட்டத்துக்கு அவர் சம் மதிக்காமலும் முகம் கடுத்து பேசாமலும் போன படியினாலே யிவர் முகத்தை தொங்கப் போட்டுக் கொண்டு போனார். ஆனாலும் அன்பதி னாயிரம் ரூபா குடுக்கிதத்தே அல்லாமல் அதனங்குடுக்கிறதில்லை யென்று சொன்னது மாத்திரமேயல்லாமல் முன்னேதானே என்னுடனே லக்ஷம் ரூபா புக்கனசி காசிதாசு குமாஸ்தாவைக் கொண்டு போய் குடுப்பிக்க வேணுமென்று சொல்லியிருக்கிற படியினாலே லக்ஷம் ரூபா சரியாய் நாளையதினம் மீர்ஷம் வசம் குடுத்து அனுப்புவாரென்று தோத்துது. ஆனலிப்போ யிந்த சாயபு சாதா வந்ததும் மதாம் துப்பிளேயிக்சு மாரிபத்திலே சகல சால்சவாபு நடக்கிறதும் மதனுந்த பண்டிதன் இரெண்டு கையினாலேயும் வாங்கிப் போடுகிறது மல்லாமல் அவனுச் சாகமும் மகனூறும் காகிதத்திலே யெழுதி முடியாது. ஆனலிவனுக்கு யிது யினி மாசக்கக்ணகாக நீக்குறதேயல்லாமல் தனமிவனுக்கு வருஷக் காணக்காக நடக்கத்தக்கதில்லை. யிவன்தாய் கிழவியாய்ப் போனபடி யினாலே பெண்டாட்டி ஒருத்தியை கலியாணம் பண்ணினானே அல்லாமல் யில்லாவிட்டால் கலியாணம் பண்ணத்தக்க வனல்ல. இதிலே அவன் சுவாபமிது ரோகம்-விவேகிகள் அறிந்து கொள்வார்கள்.

## 1751-ௗ செப்தம்பர்மீ 8வ. பிரசோத்பதி ௵ ஆவணிமீ 26வ புதவாரம்.

இத்தனுள் கர்லத்தாலே பங்காருயாச்சமனுயக்கன் வகையரு அண்ணன் தம்பி மாரவக்கீல்கள் திருமலைராயன்-ராமச்சந்திரராயனை மதாம் துப்ளேயிக்சு யழைக்குறுளென்று வந்து அழைத்தார்கள். அதிலே மதனுந்த பண்டிதனும் நீங்களிருக்கிற சேதியெச்சரித்ததின் பேரிலே அழைக்கச்சொன்னார்கள். நீங்கள் வரலாமென்று சொல்லி அவர்களுக்குச் சொல்லி அனுப்பினதின் பேரிலே திருமலைராயனும்-ராமச்சந்திர ராயனும் பரியப்பய்யனும்-மூணுபேர்களும் போனார்கள். அஞ்சுரூபாய் நதீர்வைக்கப்போனார்கள். அப்போ மதாம் அண்டைக்கு அழைத்துப்போ வென்று மதனுந்தபண்டிதனுடனே துரை சொன்னதாகவும் அதன் பேரிலே அங்கே அழைத்துக்கொண்டு போனாப் போலயும் அதன்பேரிலே அவளுக்கு அஞ்சு ரூபாய் நதீர்வைத்துக்கண்டார்களாம். அதின்பேரிலே உங்கள் துரைகள் எங்கேயிருக்கிறார்களென்று கேட்டதாகவும் வெங்கட்டகிரியிலேயிருக்கிறார்களென்று சொன்னதாகவும் ஆனால் ஆற்காட்டுக்கும் வெங்கட்டகிரிக்கும் எத்தனைதூரம் உண்டென்று கேழ்க்க பதினைஞ்சாதவழி உண்டென்று சொல்ல அத்தனை தூரமா வென்று ஆச்சரியப்பட்டு நல்லது யிப்போ யிங்கிரேசுக்காறர்-சிறிது பவுன்சும் கூட்டிக்கொண்டு வந்து ஆற்காட்டை சப்த்திபண்ணப்போறார் களென்று சபுறுகேழ்க்கப்பட்டுது அதுக்கு சந்தாசாயபு பவுன்சும் நம்முட பவுன்சும் திரிச்சிராபள்ளியின் பேரிலே யிறங்கியிருக்கிறது. அதையழைப்பிக்கிறதுக்கு உக்த்தமல்ல அதினாலே நாங்களும் யிங்கே யிருந்து பவுன்சு போரார்-ம்முதல்லிக்கான்-ஆற்காட்டிலேயிருக்கிற வருக்கு மத்தத்து அனுப்புகிறோம். நீங்களும் உங்கள் துரைகளும் உங்கள் பவுன்சுடனே ஆற்காட்டுக்கு வந்து மமுதல்லிகானுக்கு மத்தந்து பண்ணச்சொல்லி எழுதியனுப்பி வைக்கவேணு மென்றும் துரை காகிதமும் என் காகிதமும் எழுதித்தாறோ மென்று சொல்லி அங்கேதானே அவர் களையும்-காயிதமெழுதச் சொல்லி தங்கள் காயிதமும் மதனுந்தபண்டிதனைக் கொண்டு யெழுதிவிச்சு மொகறு பண்ணி கொடுத்து வக்கீல் காகிதங்களையும் கொடுத்து சேவுகர்கள் கையில் இந்த க்ஷணம் அனுப்பச்சொன்னதாகவும் அந்தக்காகிதங்களையும் வாங்கிக் கொண்டு தாங்கள் யெழுதிய காகிதங்களையும் தாங்கள் சேவுகன் கையில் கொடுத்து என்னண்டைக்கு வந்து தாங்கள் போனதும் நடந்த சேதிகளும் சொல்லி சேவுகனை அனுப்புகிறோமென்று சொல்லிப் போனார்கள்.

இதல்லாமல் மேகக்ராசா முதலான பாளையக்காறர்களுக்கெல்லாம் அவரவர் பவுன்சுடனே ஆற்காட்டுக்கு வந்து போறார். மமுதல்லிகானுக்கு மத்தத்து பண்ணச்சொல்லி காகிதங்கள் எழுதி அங்கங்கே யனுப்பினார்களென்று திருமலைராயனும்-ராமச்சந்திர ராயனும் வந்து சொல்லிப்போனார்கள்.

ஆர்காடடிலிருந்து மமுதல்லிகானும் ரெண்டு காகிதம் எழுதினனும். யிங்கிரேசுக்காரருடனே பவுன்சும் பிறப்பட்டு ஆற்காட்டுக்கு வாறார்கள் யென்றுமிவடத்திலே நூறுகுதிரை – அன்பதுகுதிரையளவிலேயில்லை.

பவுன்சு சீக்கிறமத்துக்கு யனுப்பச்சொல்லி யெழுதுகிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது. அதுக்குப்பதிலுத்தரமும் பவுன்சும் அனுப்புகிறோ மென்று யெழுதியனுப்புனார்கள் என்று கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் சாயங்காலம் சோகறுக்கான் குமாரனை அழைப்பிச்சு யிங்கிரேசுக்காறர் சத்தே விசுறும்பிச்சு சிறிது ராணுவு கூட்டி ஆற்காட்டின் பேரிலே போறதாகவும் கரைதுரைமுகத்திலே யிருக்கிற கோட்டைகளை—யிங்கேலீசுக்காறர்கள் கட்டுகிறதாகவும் சேதி கேழ்க்கப் பட்டது—ஆனபடியினாலே எங்கள் கொடி போட்டிருந்தால் யிங்கிலீசுக் காறர்களைத் தொட்டு ஒன்றுஞ்செய்யக்கூடாது. ஆனபடியினாலே கோட்டையிலிருக்கிறதுக்கு ரெண்டுபேர் வெள்ளைக்காறர்களையும் யிருபதுபேர் சட்டைக்காறர்களையும் யிருபது சிப்பாய்களையும் அனுப்பி விக்கிறோம். அவர்களைக்கொண்டு யெங்கள் வெள்ளைக் கொடியைப் போட்டுவிச்சுக்கொண்டு—காரியங்கவைகள் அவர்களுக்குச் சொல்லி அவர்களைக் கொண்டு காகிதம் எழுதிவிச்சு அவ்விடத்து உத்திரபிரத்தி உத்தாரம் அழை பிச்சுக் கொண்டு காரிங்கள் யெல்லாம் நீங்கள பார்த்துக் கொண்டு நடப்பிச்சுக் கொள்ளவும் யென்று சொன்ன மாத்திரத்தில் நாங்கள் கட்டின கோட்டை மறுபடி யிந்தக்கலாபம் தீந்தாப்போலே யெங்களுக்கு குடுத்து விடுகிறோமென்று சொல்லி தலையிலே அடிச்சுக்குடுத்துப் பரவசம் சொல்லி வெள்ளைக்காறர்கள் யிருபது சிப்பாய்களிவர்களையும் கூட்டி சோகதுகான் மகனுக்குஞ் சிலவு கொடுத்து ஆலம்புறாவைக் கோட்டையிலே வெள்ளைக் கொடி போடச் சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு ராத்திரியே பிறப்பட்டார்கள் யிதல்லாமல் ஆற்காட்டின் பேரிலே யிங்கிரேசுக்காரர்கள் சென்ன பட்டணத்திலிருந்து போய் விழப்போறார்கள் யென்று அவர்கள் வந்தால் சண்டைகுடுக்கிறதுக்கு ஆற்காட்டிலிருக்கிற போளூர் மமுதல்லிக்கானுக்கு மத்தத்து அனுப்பபுகிறதுக்கு மதாம் துப்பிளவிச்சு கேசவறாயனை அழைப்பிச்சு சிப்பந்தி யெழுதச் சொல்லி ஆயிரம் ரூபாயும் குடுத்து அனுப்பினார்களாம். அதன் பேரிலே அவன் கெட்டவனையும்—பட்டவனையும் யிழுத்து வந்து நூறுபேர்களை விட்டு நூறுதுப்பாக்கியும் வாங்கிக் கொண்டு—கடுதூசுங் கொடுத்து நாளைக்கு ஆற்காட்டுக்குப் போகச்சொன்னதாய்ச் சேதிகேழ்க்கப்பட்டது.

இதல்லாமல் யாச்சமனாயக்கன் முதலான மனசுபேதாரர் மேகக்ராசா முதலான பாளயக்காறர்களுக்கெல்லாம் அவரவர்களை பவுன்சுடனே ஆற்காட்டுக்கு வந்து போனார்கள். மகம்மதுல்லிகானுக்கு மத்தத்தர்ய்வரச சொல்லி காகிதங்களெழுதி அனுப்பிவிச்சார்கள் என்றும் சேதிகேழ்விப்பட்டேன்.

## 1751௵ செப்தாம்பேர்மீ 9௨ பிறசோத்பதி௵ ஆவனிமீ 27௨ குருவாரம்

இதல்லாமல் கேழ்விப்பட்டசேதி சந்தாசாயபுக்கு யெழுதியனுப் பினது இரண்டாயிரம் சுவார்களை அதிசீக்கறமாய் ஆற்காட்டு நாயபு சுபா போளூர் மமுதல்லிகானுக்கு அனுப்பச் சொல்லி யெழுதினது மல்லாமல் முன்தாட்டி பத்திரி சயிதுமகம்மது யென்கிறவனை யிருபது

நாளேயும் போதுயிறுநூறு துப்பாக்கிக்காறர்களேயும் கூட்டிமுசர்பாக்கம் கில்லாவிலேயிருக்கிற யிம்மத்துபாதூராக்கான் தம்பி முன்வர்க்கான் பெண்சாதி பிள்ளேகளேப் பிடிச்சு வரச்சொல்லி யனுப்பின விட்டத்தில் முன்வர்கான் குஞ்சு குழந்தைகள் யிருந்தவர்கள் தப்பிச்சுக்கொண்டு அப்பால் போனபடியினலே—அந்தக்கில்லாயிலே தாட்டிபத்திரி சயிது மகம்மது யென்கிறவன் அந்த யிறநூறுபேர் துப்பாக்கிக்காறர்களுடனே இருந்தானிப்போ அந்த யிறு நூறு துப்பாக்கிக்காரர்களேயும் ஆற்காட்டுக்கு மகம்மதுமதல்லிக்கானுக்கு மத்தத்துபோகச் சொல்லியும் அதுக்குப் பதிலாக யவடத்தில் சிறிது சேவுகரை வைத்துக் கொள்ளச் சொல்லியும் கர்ட்டி பத்திரி சயிது மகம்மது பேருக்கு காகிதம் யெழுதி அனுப்புவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. இத்தனேள் சாயங்கர்லம் அழைப்பிச்சு சேலம் டங்கா சாலே குண்டூர் பாலிசெட்டிக்கு குத்தகை குடுக்கச் சொல்லி மயிசூரார் பேருக்கு காகிதமெழுதி யனுப்புவோம்அவர்கள் வக்கீல் வந்திருக்கானே அவனேக் கொண்டும் ஒரு காகிதம் மெழுதியனுப்ப சொல்லென்று சொன்னர். நல்லது சொல்லுகிறேன்என்று சொன்னேன். அப்பர்லே யவர் கர்ம்பிராவே போனர். நான்காசாக்கச்சேரியே வந்தேன். இத்தனுள் ராத்திரி ஆற்காட்டிலிருந்து. யெழுதி வந்த காகிதத்திலே சென்னப்பட்டணத்திலிருத்து சாவுக்காறர்களுக்கு இங்கிலிசுக்காறர்கள் ஆற்காட்டு கட்டிக்கொள்ள வருகிறுர்கள் என்று எழுதிவந்ததன்பேரிலே யவரவர் தங்கள் தங்கள் சாமான்களே யப்பால் படுத்துகிறுர்கள் என்று சேதி வந்தது.

## 1751— செப்தம்பர்மீ 10உ பிறசோத்பதிஸு ஆவனிமீ 28உ

இதிலே தாம் துப்பிளேக்சு மணியன் யென்கிற சேவுகனே சென்னப்பட்டணத்துக்கு யனுப்பியிருந்தாள். அவன் சொன்ன கபுறு ஏழெட்டு பிறங்கியும் வெள்ளேக்காரர்கள் சட்டைக்காரர்கள் சிப்பாய்கள் கற்ஞடக சேவுகரகள் வெகையறு ஆயிரத்தன்னூறுக்கு உண்டு யிதுவுமல்லாமல் யெருதுக்காறர் கூலிக்காறர் வகையறு ஆயிரத்துக்கு உண்டு இவர்கள் சென்னப்பட்டணம் விட்டுப் பிறப்பட்டு ஆற்காட்டு கட்டவேணுமென்று பிறயாணமாய் பெரும்புதூர்—வென்று மணிமங்கலம் என்றும் தெரியாது. அந்தயிடத்திலே போயிறங்கினர்கள் யென்றும் அதிலே ரெண்டுபேர் சென்னப்பட்டணம் கோன்சேர்காறர் கூடப்போறதாக சேதியறிந்து வந்து மதாமுடனே சொன்னன்.

அந்தச் சேதியை துரையவர்களுக்கு அறிவித்தார்கள் அதன் பேரிலே மீர்ஷத்தை அழைப்பிச்சு லசுக்கருக்குப் போகச்சொல்லி தண்டு சிலவுக்கு லக்ஷம் ரூபாய குடுக்கிறேம் என்று சொல்லியும் லசுக்கரிலிருந்து ரெண்டாயிரம் குதிரை ஆற்காட்டுக்கு சீக்கிறமத்துக்கு அனுப்பச் சொல்லியும் கில்லேதாறர்களுக்கெல்லாம் அவரவர் பவுன்சைச் கூட்டி ஆற்காட்டுக்கு அனுப்பச்சொல்லியும் காகிதங்களெழுதி அனுப்பச் சொல்லியும் தம்முட தரபிலேயும் காயிதம் யெழுதியனுப்பச்சொல்லி மதனுந்த பண்டிதனுக்கும் உத்தாரங் குடுத்ததாய் சேதி கேழ்க்கப்பட்டது. கோசா கொலங் தாகானுக்கு—துரையவர்கள் சொன்னது—நீர் எங்கள் காரியத்தில் ரொம்பவும் பிறயாசப்பட்டீர் அதுக்கு உங்கள் நிமித்தியம் சலாபத்து சங்குக்கும் ராமதாசு பண்டிதனுக்கு மெழுதியனுப்பிவிச்

சிருக்குது சுவாமிதயவினாலே உம்முட காரியங்கள் அனுகூலமா வென்று சொன்னதுக்கு உங்கள் தயவும் சினேகமும் பரிபூறணமா யென்பேரிலே யிருக்கச்சேயென காரியமானதும்வ யல்லாம அதுக்குத் தடையென்ன யிருக்குது யென்று சொல்லி ரெண்டிலே மூணிலே தறுபாறுக்கு வரப்போகு யிருக்குறதுக்கு உத்தாரங் குடுக்கவேணுமென்று கேட்டதுக்கு வீட்டேயும் மதாமிருக்குது-- யெப்போ வேணுமானாலும் அப்போ தடையில்லையென்று சொல்லி கோட்டையிலே கட்டியிருக்கிற குவற்ணமா முதலான யிடங்களும் கோட்டையும் பட்டணமும் பட்டணத்து சுத்திலுமிருக்கிற சாறபனாவும் பார்க்கச்சொல்லிச் சொல்ல அவசியம் பார்க்கிறே னென்று சொன்னாரென்று சேதி கேழ்க்கப்பட்டது

## 1751-ஆ செப்த்தேம்பர்மீ 11உ பிறசோத்பதிஆ ஆவணிமீ 29உ பவிசாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி முன்னாலே தேசூர் கில்லே பழஞ்செஞ்சியாருதாக யிருந்ததை சந்தாசாயபு தன் வயித்தியன் போ விலங்கனுக்கு குடுத்தானென்று பழஞ்செஞ்சி ராசாவி னுடைய பிள்ளை சிறு பிள்ளையும் குப்பிநாயக்கன் வகையிருவர்கள் முத்தாலிக்கருமாக நாலுமாசமாக வந்து காத்துக்கொண்டிருந்து துரையவர்களுக்கு நாறபதுனாயிரம் ரூபா குடுக்க யிதல்லாமல் மதாமுக்கு அய்யாயிரம் ரூபா கொடுக்க இந்தப் படிக்குத் தீந்து பணமும் சம்மதியாய் அந்த அக்கீமுக்கு தேசூர கிலலேவும் அந்த சாகீரும் யெழுதிக்குடுத்து யிப்போ கலார வேளையாயிருக்குதே சிப்பந்தியை வைத்து கோட்டையைக் காப்பாத்திக் கொள்ளச் சொன்னார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டது. மத்தப்படி கேசவருபனுக்கும் சிறிது ரூபாய்க் குடுத்தார்களென்று கேழ்க்கப் பட்டது. இத்தனாள் ராத்திரி மதனாந்த பண்டிதனும் யாச்சமநாயக் கன் பிள்ளைகள் அண்ணன் தம்பி மார்கள் வக்கீல்கள் திருமலைராயன் ராமச்சந்திர ராயன் வகையரு ரெண்டுபேர்களும் கூடவந்து யென்னுடனே சொன்னது. நாசறுசங்குவைக் கொண்டு யிதாயித்து மொகதின் கானிவிடத்துக்கு வந்தபோது நாயக்கமா அண்ணன் தம்பி ரெண்டு பேர்களுக்கும் இரண்டு லட்சம் ரூபாயி யிதாயத்து மொகதின் கானுககு குடுக்கவும் லக்ஷம் ரூபா சந்தா சாயபுக்கு குடுக்கவும் தீர்ந்து -- அப்பால் யிதாயித்து மொகதின் கானுக்கு ரெண்டு லட்சம் ரூபாயும் ராமதாசு பண்டிதன் மாரிபத் திலே செலுத்தி பஞ்ச ஆசாரி மனசுபேயென்று பேரமாத்திரமே யல்லாமல் நாலாயிரம் குதிரைக்கு மாத்திரம்மே சாகீர் விட்டு யிருந்து தாம் மத்த ஆயிரம் சுவாருக்கு சாகீர் விட்டு யிருக்குது. தாம் மத்த ஆயிரம் சுவாருக்கு சாகீர்களுக்கு சன்னது முசபர்சங்கும் சலாபத்துசங்கும் ரெண்டு பேர்களும் யெழுதிக்கொடுத்ததாகவும் அந்த சன்னத்தை காண பிச்சு சந்தாசாயபுக்கு குடுக்கிறோமென்று லஷ்ஷம் ரூபாயும் குடுக்கிறோம் சாகீருக்கு பரவானா யெழுதிக் கொடுக்கச் சொல்லி கேட்டதுக்கு அவர் மூணு லக்ஷம் ரூபா யெனக்கும் குடுத்தால் யெழுதிக்குடுப்போம் யில்லாவிட்டால் யெழுதிக்குடுக்கிறதில்லை யென்று சொன்னதின்பேரிலே முன்னை சிட்டத்தையில் துரையவர்கள் மொறட்டாண்டிச்சாவடியிலே

யிருக்கச்சே யென்மாரிபத்தில் திருமலைராயன் வகையிரு பேருக்கு யிருபத்தையாயிரம் ரூபா துரையவர்களுக்கு அன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கவும் சந்தாசாயபுக்கு லட்சம் ரூபாயும் யிவடத்தில் துரையவர்கள் வசத்தில் தானே செலுத்திப் போடவும் ஆசாரம் சுவார் மன்சுபைக்கு சாகீர்சன்னது சந்தாசாயபுக்கு யெழுதி யனுப்பிவிச்சு பர்வானா பிறப்பிச்சு அழைப்பிச்சு கொடுக்கப்பேசி யிருந்ததும் அல்லாமல் துரையவர்களுக்கு ரெண்டு பேர்களும் சிறெப்பாவும் ஆணையும் அனுப்பிவிக்க பேசியிருந்த சம்மதியிப்போ மதாம் முன்னிலையாய் அந்த நாலாயிரம் ரூபாய்க் கொண்டுபோய் முதலிட்டு சந்தாசாயபு சம்மதி லக்ஷம் ரூபாய்க்கும் ரெண்டு மாசத்திலே துரையவர்களுக்கு குடுக்க துரையவர்கள் பேருக்கு வக்கில்கள் ரெண்டு போகளும் சீட்டெழுதி கொடுக்கவும் துரையவர்கள் சந்தாசாயபுக்கு மீரஷம்வசமாய் அனுப்பிவிச்ச லக்ஷம் ரூபாயும் யாச்சமனாயக்கன் சம்மதியென்று சந்தாசாயபுக்கு காயிதமெழுதி அனுப்பி சாகீர்களுக்கு பர்வானாவும் லக்ஷம் ரூபாயுக்கு றசீதும் அங்கே யிருந்து யழைப்பிச்சு குடுக்கிறதுமல்லாமல் மூணுலக்ஷம் ரூபா குடுக்கவேணுமென்று சந்தாசாயபுச் சாவல் அனுப்பிவிச்சு யிருக்கிறாரே அந்தச் சாவலுகள் நாயக்கமாரண்டைக்குப் போயிருக்கிறார்கள் அவர்களை வந்துவிடச்சொல்லி அவர்களுக்கு சன்னது மழைப்பிச்சு கொடுக்கப் பேசிதீர்ந்து சந்தாசாயபுக்கும் காகிதம் யெழுதிப்போச்சுது. வக்கில்களும் லக்ஷம் ரூபாயிக்கு ரெண்டு மாசத்திலே குடுக்க துரையவர்கள் பேருக்கு சீட்டெழுதி கொடுத்தார்களென்றும் மதனாந்த பண்டிதனுஞ் சொன்னான். வக்கில்களும் மெய்தானென்று கூடச்சொன்னார்கள்.

ஆனாலிவர்கள் சொன்னதிலே அப்போ துரைக்கி குடுக்கிறோமென்று பேசின அன்பதினாயிரம் ரூபா சம்மதி சொல்லவில்லை. சொல்லாதெபோனால் நான் துரையவர்கள் அந்த சாடை விடப் போறதில்லை யிப்போ அந்தத் துகையை துரைக்கும் மதாமுக்கும் ஆகச்சொல்லி யிருப்பார்கள்போலே தோத்துது. மதனாந்த பண்டிதனுக்கு யாச்சமனாயக்கன் சீமைகளுக்கு ஊர் கணக்கும் மிராசியும் யெழுதிக்கொடுத்து ஒரு கிருமமும் கொடுக்க முன்பேசி யிருந்தது யிப்போ யென்னவாய்ப் பேசிக்கொண்டானோ தெரியவில்லை.

எனக்கு ஆயிரம் விராகனிலே ஒரு கிருமம் யினாமாயெழுதிக் கொடுத்து ஒரு ருசுமு ஒன்று நூத்துக்கு ஒன்று அவர் எழுதிக் குடுக்கிறோமென்று சொல்லியிருந்த பேச்சுயென மாரிபத்திலே நடவாததைத் தொட்டு எனக்கு மாத்திரம் யில்லாமல்ப்போச்சுது.

## 1751—ளு செத்தேம்பர்மீ 12வ. பிறசோத்பதிளு ஆவணிமீ 30வ. ஆதிவாரம்.

இத்தனாள் ஆற்காட்டுக்கு மமுதல்லிகானுக்கு சிறிது மருந்து குண்டு வகையிரு சண்டைசாமான்கள் அனுப்பினார்கள். பாப்பய்ய பிள்ளைக்கு சிறிது மருந்து குண்டு துப்பாக்கி வகையிரு சாமான்கள் அவன் மகன் வசம் கொடுத்து சிப்பந்திவைச்சுக் கொண்டு யிங்கிரேசுக் கர்நாட மனுஷர்கள் வரார்தபடிக்கு சண்டை பண்ணச்சொல்லி யெழுதி யனுப்பிவிச்சார்கள்.

இதல்லாமல் இங்கிலீசுக்காறர் காஞ்சிபுரஞ் சேர்ந்து தோறணம் கட்டி, அப்பால் முச்சர்பாக்கம் காவேரிபாக்கம் அந்தயிடங்களுக்கு தோறணங்கள் வைக்கப்போறதாய் சேதி காஞ்சிபுரத்திலிருந்து மொகதின்கான் சாயபுக்கு யெழுதிவந்து அவரும் துரையவர்களுக்கு சேதி சொல்லி சிறிது மருந்துகுண்டு கடுதாசு—கொஞ்சம் துப்பாக்கிகூட வாங்கிக்கொண்டார்.

றங்கோ பண்டுதன்—ஆயிரம் பேர் கூட்டத்துடனே கொபுருபுரத்திலிருந்து அவன்—அவ்விடம் விட்டு வந்து விறுத்தாசலம் கோட்டையே வந்து சுத்திக்கொண்டதாகவும் விறுத்தாசலங்கோட்டையிலேயும் யிங்கிலீசுக்காறர் மனுஷர்கள் நூத்தன்பது சிப்பாயிகளும் அன்பதுபேர் வெள்ளைக்காறரும் சட்டைக்காறர்களுமாக யிருக்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது. யிதல்லாமல் கூடலூரிலே கோபாலநாறணப்பயன் வகையறு சிறிது அமுலதாறர்கள் பிறப்பட்டு பஞ்சமாலு கட்டப்பிறப்பட்டு வருகிறார்களென்ற கபுறு கேழ்க்கப்பட்டது.

போளூர் மமுதல்லிக்கான் உத்தாரத்தின் பேரிலே அயிவத்துக்கான் பட்டாணி அசனுதிக்கான் தூலுக்கு கோவிந்தருயன் சறுதாறுகான் மகன் சாயதுக்கானுக்கு சிறிது குதிரை சுவார்களுக்கு உத்தாரங்குடுத்து அவன்கூட யேகத்துக்கு சிறிதுகுதிரை சுவார்களும் சிறிது துலுக்க சிப்பாயிகள் கற்னுட்டக சிப்பாயிகள்—துப்பாக்கிகாறர்களும் கூடப்பிறப்பட்டு திருமறலே அண்டையிலே யிங்கிலீசுக்காறர்களுக்கு யெதிர் பாளையம் வந்து இறங்கினதாய் சேதிகேழ்க்கப்பட்டது.

## 1751—ரு செத்தேம்பர்மீ 14உ. பிறசோத்பதிரு புறட்டாசிமீ முதல்உ. செவ்வாக்கிழமை

இத்தனாள் காலத்தாலே பத்துமணிக்கு துரையவர்களண்டைக்கும் போனவிடத்திலே -சாவடிக்கபுறும்-கும்பினீரவற்த்தகர் கிட்டங்கி-முதலான பட்டணத்து கபுறு சொல்லியானபிற்பாடு சந்தாசாயபு-காகிதம் வந்ததே-அதிலென்ன யெழுதியிருக்குதென்றும்-மதுனுநந பண்டிதனைக் கொண்டு வரச்சொல்லி கேட்டார். அதுக்குத் தாங்களனுப்பின அன்பதினாயிரம்ரூபா வந்து சேர்ந்தது என்றும் கொள்ளிடம் கடந்து சீரங்கம் போயி சேருகிறதாயிருக்குறோமென்றும் யெழுதியிருக்குதென்று சொன்னான். நல்லது அபறங்காபாத்துக்கு சலாபத்து சங்கு வகையறுக்களுக்கும் எழுதுகிற காகிதங்களுக்கு நேத்தயதினம் தெலுங்கிலெழுதிவிச்சமே அதடுத்து பாரிசிலே யெழுதியாச்சுதாவென்று கேட்டார். சாயங்காலத்துக்குள்ளாக முடியுமென்று சொன்னான். அப்பால் துரையுடனே பாச்சக்கடை செல்லா—வந்ததில் முப்பத்திநாலு முப்பத்தஞ்சு கோடி நனைந்து போச்சுது—மத்தது அஞ்சுகட்டுப்போட்டுக் கொண்டார்கள். நனைஞ்சதை மறுபடி பாச்சக்கடைக்கு யனுப்பி சலவைப் பண்ணிக்கொண்டு வரச்சொன்னார்கள் நாளையதினம் போற படகிலேத்தி யனுப்பிவிப்பார்களென்று சொன்னேன். அவ்விடத்திலிருந்து யனுப்பினவர்கள் திசுக்கு யிதர்தாயம் மாத்தபடியினாலே யிப்படி நடந்தது. நீயந்தவர்த்தகருக்கு தாக்கீதர் யெழுதி யனுப்பு நானும் சின்னதுரையுடனே சொல்லி முசியே ரிஷிக்குயெழுதி யனுப்புகிறதாக—காகிதத்தில் எழுதியனுப்புகிறேன் யென்றுசொன்னார். அந்தமட்டுக்கும் காசாக்கச்சேரிக்கு வந்தேன்

மறுபடி பனிரெண்டு மணிவேளைக்கு அழைச்சனுப்பிவிச்சு துரை சொன்னது நேத்தியத்தினம் திருச்சிராப்பள்ளியிலிருந்து தேவனும்படடணத்துக்கு யெழுதினகாகிதங்களை நம்முட மனுஷர்கள் வழியிலே பிடிச்சு வந்தார்கள் அந்தக்காகிதத்தில் அவ்விடத்திலிருக்கிற இங்கிலீசுக்காரன் தேவனும்பட்டனம் துரைக்கு யெழுதின காகிதத்தி லிருந்து அந்தமட்டுக்கும் மயிசூரார் பவுன்சு வந்ததில்லை அது வந்தால் நாங்களும் அவர்களும் போய் சத்துருக்கள்தளத்தின் பேரிலே பேரிலே போயிறங்கி சண்டைபண்ணுகிறோமென்று யெழுதியிருந்தது. அந்தக்காகித சாடைபாரத்தால் மயிசூராருக்கும் மமுதல்லிக்கானுக்கும் சிறிது ஒப்பு உடன்படிக்கை நடந்தல்லோ யவர்கள் பவுன்சு யினிமேல் வருகிறசாடைகாணுது. ஆனாலிந்தமட்டுக்கும் வந்ததில்லை. யினிமேல் வருகிற யேஷ்யுமுண்டாயிருக்குதேயானபடியினாலே யவர் களுக்குள்ளே உடனேபடிக்கையில்லாமல் அதுயெழுதப்படாது ஆன படியினாலே நீ வீட்டுக்குப்போனாபோல மயிசூரார் வக்கீலை அழைப்பிச்சு நீங்களெங்கள் சினேகங்கோரி வெகுமதிகள் கட்டி வக்கீலையும் அனுப்புவிச்சபடியினாலே நாங்களும் அதேசினேகம் கோரி நடப்பிக்குறபடியினாலே யிப்படி யெங்கள் சத்துருவுடைய அனுகூலத்துக்கு மத்தத்துபண்ண பவுசுன்சு யனுப்பி யெங்கள் பேரிலே சண்டைபண்ணுகிறதாய்ச் சாடைகாணப்பட்டுது. அப்படி யேதாகிலும் உங்கள் பவுன்சு வந்து சண்டைகுடுத்தாலும் அல்லது சத்துருவுக்கனுகூலமாயந்தறங்கத்திலே மத்தத்து அனுப்பினாலும் நாங்களப்பாலுங்கள் ராச்சியத்தையும் கட்டிக் கொண்டு உங்கள் கோட்டையையும் வாங்கிக்கொள்ளுவோம் யென்று சொல்லச் சொன்னதாய் அவர்கள் வக்கீலைக் கொண்டு காகிதம் யெழுதி யனுப்பச்சொன்னார். அவசியமந்தப்படிக்குச் சொல்லி காகிதமு மெழுதிவிக்குறேன் என்று சொல்லிப் போட்டு வந்து, அந்தச்சினம் வீட்டுக்குப்போனவுடனே யழைப்பிச்சு சொல்லி அந்தஷ்ணம் காயித மெழுதிவிச்சு சாயங்காலத்துக்கு றவானாபண்ணிப்போட்டு அந்தச்சேதி யாறுமணிக்கு துரையவர்களுக்கு கபுறு சோன்னேன்.

மறுபடியழைச்சனுப்பிவிச்சு ஏழுமணி ராத்திரிவேளையிலே சொன்னது வக்கீலுடனே சொல்லியெழுதிவைத்து அனுப்பிவிச்சுப் போட்டயே வக்கீல் யென்ன சொன்னானென்று கேட்டார். அவன் சொன்னது யென்னை அனுப்புகிற வேளையில் மமுதல்லிகானுக்கும் மத்தத்து அனுப்புகிறயோசனை யிருந்தானால் யென்னை யனுப்பி விப்பார்களா. அப்போயந்தயோசனையில்லை ஆனாலவர்கள் சமஸ்தானா பதிகள் காபந்துள்ளவர்கள் முன்னாலே யென்னையப்படி யனுப்பி விச்சு யிப்போயிப்படி நடப்பிச்சார்களே ஆனாலதனாலேயென் பேரிலே குத்தஞ்சொல்லத் தேவையில்லையே முன் துரையவர்கள் சொன்ன தாய் நீங்கள் வந்து மயிசூரார் மகமதல்லிகானுக்கு மத்தத்து அனுப்புகிறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது. அதென்ன அவர் களப்படி நடப்பிக்கலாமாவென்று நீங்கள் கேட்டதுக்கு அந்த வயணத்துக்கு அந்தஷ்ஷணம் நாங்கள் யெங்கள் காபந்துக்கு யெழுதியனுப்பிவிச்சதுக்கு அவர்கள் பதிலெனக்கெழுதியனுப்பி னதிலே நாங்களொருக்காலும் மமுதல்லிக்கானுக்கு மத்தத்து அனுப்பத்தக்கதில்லை யெங்கள் வரசத்திலே மாத்திரம் பவுன்சை அனுப்பிவிச்சு ராசகாரியத்துடனே சேர்ந்த வேலையானபடியினாலே

பத்திரமாயிருக்கச் சொல்லியனுப்பிவிக்குறதேயல்லாமல் ம தப்படி மமுதல்லிக்கானுக்கு சறுவாத்துமனாக மத்தத்து அனுப்பத்தக்கதில்லையென்று உங்களுடனே செல்லவுமென்றெழுதின காகிதமென்கையிலிருக்குது ஆனால் சந்தா சாயபு யண்டை யெங்கள் வைக்கிலிருக்கிறவனுடனே சந்தாசாயபு யென்னேரமும் மயிசூராரப்படிப் பட்டவர்களிப்படிப்பட்டவர்கள் சிமையெல்லாம் சப்தி பண்ணவேணுமவர்கள் சமஸ்தானத்தையும் வாங்கிப் போடவேணுமென்றிப்படியாகச் சொல்லிக்கொண்டிருக்கிறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது.

அதினாலே அந்த வக்கில் அவ்விடத்துக்கென்னையெழுதியனுப்பிவிச்சானோ அதென்னமோ தெரியாதென்று சொன்னான் யென்று துரையுடனே சொன்னதுக்கு சந்தாசாயபு மனதிலே மயிசூரார் பேரிலே குறையாயிருக்கிறது மெய்தான் ஆனால் அவன் குறையாயிருக்கிறதினாலே யென்ன நடக்கப்போகுது நாம் காசு வைத்து நடத்தினாலல்லோ சாதகத்துக்கு வரும் அப்படியிருக்க மயிசூரார் நம்முட சினேகம் கோரி நடத்துகிறமட்டுக்கும் நாமப்படி வஞ்சனை பண்ணியவர்கள் பேரிலே ராசக்காரியம் பண்ணத்தக்கதில்லையென்றிப்படியாக துரையவர்கள் சொன்னார்கள் ஆனபடியினாலே அப்பால் ராத்திரி ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்து மயிசூரார் வக்கில் நாறசிங்கதாசுவை யழைப்பிச்சு யிந்தவாணமும் அவருடனே சொன்னதுக்கு மறுபடியும் அவர் ஒரு காகிதமெழுதிரவானா பண்ணி நாளைய சூரிய உதயத்துக்கு அனுப்பிவிக்கிறார் இத்தனால் துரையவர்கள் கும்பினீர் வர்த்தகர் பிடவையேன் யின்னம் வந்து சேரவில்லை யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது யிங்கிரேசுக்காறர்கள் பிறப்பட்டு ஆற்காட்டு முதலானயிடங்கள் சப்திபண்ணவாரதும் அல்லாமல் கொள்ளையுமிடப்போனார்கள் யென்றுவர்த்தகருக்கு அங்கங்கேயிருக்குதெழுதிப்போனபடியினாலேமுன்னாலேயும் பத்து விசை அஞ்சுவிசை சகல சோபாரமும் கொள்ளைகொடுத்துப்போட்டு அவதியை அடைஞ்சுயிருக்கிறவர்களான படியினாலே அவர்கள் சாமான்களையெடுத்துக்கொண்டு மூலைக்குமூலை ஓடிப்போய்விட்டார்கள் அதினாலே பிடவைவந்துசேருகிறது பிறயாசையாயிருக்குமென்று சொன்னதுக்கு துரை சொன்னது நீயும் வரத்தகருங் கூடயிருந்துக்கொண்டுயிப்படி புதுச்சேரி கோட்டையிலிருந்து இரண்டாயிரஞ் சொலுதாதுகளும் ரெண்டாயிரம் சட்டைக்காறர்களும் ஆறாயிரம் அய்யாயிரம் சிப்பாய்களும் ஆயிரம் பேர் காப்பிரிகளும் அன்பது பீரங்கியும் பொம்பாய் பீரங்கியிருபதும் விஸ்தாரமான மருந்து குண்டு சண்டை சாமானுடனே பிறப்படுகிறார்கள் அவர்கள் வந்து யெந்தெந்த கோட்டையை வாங்குவார்களோ யாராரை நிக்கிறகம் பண்ணுவார்களோ தெரியவராதென்று யங்கேயிருக்கிறபேருக்கெழுதி யனுப்பச்சொன்னார் அந்தப்படிக்கு அறணாசலசெட்டி சின்னய்யசெட்டி குண்டூர் வெங்கிடாசலசெட்டி முதலானபெருடனேஞ்சொல்லி நூறுவோலை மட்டுக்குமெழுதி அனுப்பச் சொல்லி சொன்னேன். அவர்களும் அந்தபடிக்கு யெழுதி அனுப்புகிறார்கள்.

## 1751-஌ செப்தேம்பேர்மீ 15உ பிரசோத்பதி஌ புரட்டாசிமீ உ புதன்வாரம்

இத்தனுள் சாயங்காலம் ஆற்காட்டிலே வந்தசேதியென்ன வென்றால் நாளது மீ முதல் உதிச்ச அஞ்சு நாழிகைக்கு அன்பது பேர் யிங்கிலீசுசொல்தாதுகளுமொரு ஒபீசியாலும் போய் ஆற்காட்டுத்தெவடியிலே சண்டாபோட்டு கில்லாவும் கட்டிக் கொண்டதாகவும் அப்பால் பத்து நாழிகைக்கு யிரநூறுபேர் யிங்கிலீசு சொலுதாதுகளும் நூறுபேர் சட்டைக்காறர்களும் யிறநூறுபேர் சிப்பாயிளும் போய் சேர்ந்ததாகவும் இரண்டு பெரிய பீரங்கியும் இரண்டு சின்ன பீரங்கியும் மருந்து பெட்டுபெட்டி சருபம் ரெண்டுபெட்டி தறுபேஷம் மகம்மது மச்சான் சேக்கும்மது வென்கிறவனும் போய்ச் சேர்ந்தார்களென்றும் மத்தப்படிபிதுக்கு முதல் நாள்த்தானே அவ்விடத்திலேயிருந்து போனார். மமுதல்லிகான் கோவிந்தராயன் திருமலைராயன் முதலானவர்கள் யிருந்தவர்கள் பிறப்பட்டு ஓடிப்போய் வேலூர் போய்ச்சேர்ந்தார்களென்று யிப்படியாக யெழுதி வந்தது.

## 1751-஌ செப்தேம்பர்மீ 17உ பிறசோத்பதி஌ புரட்டாசிமீ 4உ சுக்கிறவாரம்

இத்தனுள் சாயங்காலம் அஞ்சாறு காகிதம் சந்தாசாயபு காகிதம் ஒன்று பிறகேயொன்றாய் நாலுமணி துவக்கி ஆறுமணிக்குள்ளே வந்ததாகவும் அந்தக்காகித மத்தலபுகள நாங்கள் கொள்ளிட மிறங்கி ஸ்ரீரங்கம் போறோம் உங்கள் பவுன்சுமுசியே தொத்தேல் வகையிரு பரிசசேதம் வாரதில்லை நாம் புதுச்சேரிக்கு போறோ மென்று சொல்லுகிறது மல்லாமல் பவுன்சு கொள்ளிடத்துக்கிக் கரையிலிருந்கிறதேயல்லாமல் அக்கரைக்கனுப்பிகிறதில்லை யென்று சொல்லுகிறார்களென்று முசியே தொத்தேல் யிவடத்துக்குவந்தால் முசியே லாசுவுக்கு கொம்பந்தம் யிடம் குடுத்து அனுப்பவேணு மென்று அப்துல் ஙபிபேக்கு யென்கிற சமேதாரன் பிறகே ஆயிரம் குதிரை கூட்டிவெனுப்பி விச்சோமென்று மமுதல்லிகான் ஆணை சத்திய பிறமாணிக்கமாய் யெப்படி சொல்லியனுப்பிக்கவேணுமோ யத்தனை நம்பிக்கையாய்ச் சொல்லியனுப்பி முன் அனுப்பின கவில் படிக்கு நடப்பிக்குறோமென்று நம்பிக்கையுஞ்சொல்லி கவிலும் அனுப்பிவிச்சால் யிருபது நாளையிலே எங்கள் சாஞ்சாமிகளை தாணடவிச்சுப்போட்டு கில்லாவையுங்கள் வசத்திலே ஒப்பிச்சுப் போடுகிறோமென்று ஸ்தானபதிகளை யனுப்பிவிச்சு காகிதமெழுதி யனுப்பினான்.

முன்னீங்கள் அனுப்பின கவில் முசியே தொத்தேல் வசத்திலே யிருந்து கொண்டிருக்குது அதைக் குடுக்கச்சொல்லி அவருக்கு காகிதமெழுதி யிந்த உடன்படிக்கைப்படிக்கி பேசச் சொல்லி யெனக்கு மெழுதியனுப்பிவிச்சால் நானுமந்தக் கவிலை வாங்கிக் கொண்டு உடனபடிக்கையும் கவிலையும் கொடுத்தனுப்புகிறே னென்று சந்தாசாயபு யெழுதின காகிதங்களுக்கு பதிலுத்தரவு

துரையவர்கள் யெழுதினது மமுதல்லிகான் பேச்சை நம்பவேண்டாம் அவன் யிருபது நாள் வாயிதா கேட்டது யிதுக்குள்ளே ஆற்காட்டிலே கலாபஞ் சுறுக்காய் நடக்கிறதுக்கு பெலன் பண்ணிக் கொள்ளலாமென்றும் திரிச்சிராப்பள்ளிக்கு ரஸ்து முதலான சாமான்களும் அல்லாமல் பெலனுஞ்சேத்துக் கொள்ளலாமென்று யிருபதுநாள் வாயிதா கேட்டானே அல்லாமல் மனப்பூர்வமாய் கோட்டையை விட்டுப்போறதாய்க் கேட்டவனல்ல ஆனபடியினாலே காவேரியுந்தாண்டி திரிச்சிராப்பள்ளி கோட்டையின்பேரிலே போயிறங்கிப்போடச் சொல்லியும் சண்டை குடுக்கச்சொல்லி யெழுதினானென்றும் ஆயிரங்குதிரையும் மீர்சா மமுதல்லிபேக்கும் வரா்ப்போலேதானுச்சுதே யின்னமாயிரங்குதிரையும் உம்முட குமாரன் ரசாசாயபையும் சீக்கிறமத்துக்கு வந்து ஆற்காடு சேர அனுப்பச்சொல்லியும் முசியே லாசுக்கு கொம்மாந்தாங் குடுத்து அனுப்பினதுமல்லாமல் உங்கள் பவுன்சுக்கு முன்னே அவர்களைக் காவேரி கூடதாண்டி திரிச்சிராப்பள்ளி கோட்டையை வாங்கச் சொல்லியும் உம்முட ஆலோசனையின்பேரிலே நடந்துகொள்ளச் சொல்லி யெழுதினேமென்று மினிமேல் அரை நாழிகையாகிலும் தாமசம் பண்ணத்தேவையில்லை கொள்ளிடந்தாண்டி காவேரியுந் தாண்டி அக்கரை சேர்ந்து சண்டை பண்ணச் சொல்லியும் யிந்தப்படிக்கு சந்தாசாயபுக்கு காகிதமெழுதினது மல்லாமல் ரசா சாயபுக்கும் பவுன்சைக்கூட டிக்கொண்டு ஆற்காட்டின்பேரிலே வந்து யிறங்கச்சொல்லிக் காகிதமெழுதி முசியே லாசுக்கு அறமாதுக்கு கொம்மாந்தாரிடச்சொல்லி யெழுதினது மல்லாமல் சாந்தாசாயபு ஆலோசனையுங்கேட்டுக்கொண்டு அவர்கள் பவுன் சுடனே கூடப்போய் திரிச்சிராப்பள்ளி கோட்டையின்பேரிலே போய் சண்டை குடுக்கச்சொல்லி அப்பால் முசியே தொத்தேலையும் முசியே புறுனேவையும் வந்துவிடச்சொல்லி காகிதங்களேயழுதி யனுப்பினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

திருப்பதி அமீலுக்கு ராசகோபாலபண்டிதனை மதாம் அமீல் குடுத்து அனுப்பினாளே அவரிடத்திலே வாசுதேவாச்சாரி அமீலாக வொட்டாமல் துரத்திவிட்டதாய்யின்று வந்து ராசகோபாலன் அண்ணன் வந்து கபுறுஞ்சொல்லிக்கொண்டதாக கேழ்விப்பட்டது.

சாயுங்காலம் ஆறுமணிக்குப்போய் திருவாங்கோட்டு ராசாவினுடைய வோலைகொப்பி காகிதத்தின்பேரிலே யெழுதினதைக் கொடுத்துப்போட்டு வந்தேன். அப்பாலும் பிடவை வரவில்லை யென்று கோபதாபம் பண்ணினார்.

1751-ஆம் செப்த்தேம்பர்மீ 18உ பிறசோத்பதிஷு பிறட்டாசிமீ 5உ சனிவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்டசேதி துரையவர்களுக்கு போளூர் மமுதல்லிகான் யெழுதின காகிதம் வந்ததில் யெழுதியிருந்தசேதி ஆற்காட்டிலேயிறங்கின இங்கிலீசுக்காறர் பவுன்சு பிறப்பட்டு

திமிரிக்கோட்டை வாங்கவேணுமென்று பிறப்பட்டதாகவும யதிலே போளூர் மமுதல்லிக்கான் வேலூருக்கு ஓடிப்போனவன் தனாகணேயுங்கூட்டி சிறிது பவுன்சு வேலூர் மிறுதி சல்லிக் கானுதும் கோவிந்தராவு அயிவத்துக்கான் வகையருக்கள் பவுன சுக்ளும் அவர்களேயுங் கூடக்கூட்டி அனுப்பிவிச்சதாகவும் அவர்கள் ஆங்கிலீசுக்காறர்கள் பவுன்சு திமிரியின்பேரிலே வந்ததை அடிச்சு சிகாக்கு ஆக்கினவிடத்திலே நாலஞ்சு வெள்ளேக்காறர்களும் யேழட்டு சிப்பாயிகளும் செத்தார்களேன்றுஞ் சிறிது வெள்ளேக் காறர்கள் சிப்பாயிகளுக்கு காயங்கள் பட்டு வோடிப்போய் ஆற்காட்டிலே மோய்ச்சேர்ந்தார்கள் யென்று மிவர்கள் கையில் யிங்கிலீசுக்காறர் நிசானென்றும் ஒரு ஒட்டகம் மருந்து குண்டு வகையரு ஆயுத சாமான்கூட யகப்பட்டதாகவும் சிக்கிறமத்துக்குத் தளம் வந்தால் ஆற்காட்டு கில்லாவிலே யிருக்கவொட்டாமல் யோட்டி விடுகிறோமென்றும் காகிதம் யெழுதியனுப்பினதாகவும் வந்தவர்களுக்கு ஆறுரூபா யினும் கொடுத்து பதிலு தம்யெழுதி யனுப்பினது நல்லகாரியம் பண்ணினீர் நாங்களும் மத்தத்து அனுப்புகிறோம் நீங்களும் பிறப்பட்டு யிருக்கிற பிலனும் பின்னேயும் மிறுதசல்லிக்கான் முதலான கில்லேதாறர் மன்சுபேதார் பவுன் சுகளேக் கூட்டச்சொல்லி பலக்காயிச்சு சத்துருக்களேச் சரிடபிடிக் கவும் யென்று யெழுதியனுப்பினதாய் சேதி கேழ்க்கப்பாட்டுது யிதனுல் சாயங்காலம் மயேயிலேயிருந்து காகிதம் வந்ததில் கோலத்துநாட்டு ராசாவுக்கு யிவர்கள் மத்தத்து பண்ணினுர்களே கோலத்துநாட்டு ராசா சந்துருவுக்கு இங்கிலீசுக்காறர் மத்தத்து பண்ணதுமல்லாமல் யிக்கேரியாரும் மத்தத்துவ பண்ணினபடியின லே அவர்கள் பெலத்துக் கொண்டிருக்கிறதாகவும் இதுக்கு குமுக்கு அனுப்பச்சொல்லி யெழுதிவந்ததாய்ச்சேதி கேழ்க்கப் பட்டுது.

## 1751-ஹ செப்தெம்பர்மீ 16உ. பிறசோத்பதிஹ பிறட்டாசிமீ 6உ ஆதிவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போய் வந்தபிற்பாடு நான்போய் றப்போடுது (Report) சொல்லிப்போட்டு வந்தேன். மத்தப்படி யித்தனுள் கேழ்விப்பட்ட காசாக்கச்சேரியே சேதி வேலூர் மிறுதசல்லிகான் துரையவர்களுக்கு ரெண்டு சோடா அறுசாறுகள் கையில் காயிதமனுப்பிவிச்சான். நாங்களும் மமுதல்லிக்கான் பவுசுன்டனே கூடபவுன்சுகூட்டி யிங்கிலீசுக்காறர் பேரிலே சன்டைபண்ணுகிறேம் யிதல்லாமல் காசுதின்கான் நிசான் ரெண்டு மூணுயிடத்திலே போட்டதை நாம் மனுஷர்களேயனுப்பி வெட்டித்தள்ளிப் போடுவிச்சோமென்று மின்னம் சத்துருக்கள் பிலக்காயிச்சுக் கொள்ளுதுறதுக்கு முன்னமே தங்கள் பவுன்சுக்கும் குமுக்கு வந்தால் ஆற்காட்டிலே யிருக்கவெட்டாமல் யிங்கிலீசுக் காறர்களே திரத்திவிடுகுறேமென்றும் யிதுக்கு தங்கள் அட்டிப்பண்ணமல்-அதிதுரையாயப் பவுன்சையனுப்பச் சொல்லி யெழுதியிருந்தாதாகவும் அதக்குப்பதிலுத்தரம் நல்லது நாங்களும் உடனே பவுன்சை யனுப்பிவிக்கிறேம் நீங்களும் சத்துருவை நாசம்

பண்ணுகிறயோசனை யென்னமோ அந்தயோசனைப்பண்ணி சத்துருவை யெல்லாம் பெலக்கவொட்டாமல் துரத்திவிடச் சொல்லியும் பின்னையும் கில்லேதாறரர்கள் பாளையக்காறர்களுக்கு யெல்லாம் தாக்கீதுகளெழுதியனுப்பினதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது. ஸ்மத்தப்படி விசேஷச்சு சேதிகேழ்க்கப்படயில்லே.

துரையவர்களானல் கலாபவேசாறைத் தொட்டு வெகுகோபம் கொண்டிருக்கிறதைத் தொட்டு யென்னைப்போலொத்தவனுக்குத் தானே அவர்முகத்துக்குப்போறது வருத்தமாய்க்கண்டால் மைத்தப் பேர்களுக்குக் சொல்லவேண்டியதென்ன————————————

1751—ஸு செப்தேம்பர் மீ 24உ. பிறசோத்பதி ஸு
புறட்டாசிமீ 11உ. வெள்ளிக்கிழமை

இத்தனள் காலத்தாலே கோட்டையிலே காரி கஞ்சலவைப் பாருவையானபடியினலே கோட்டையிலே போயிருந்து பதினென்றரை மணிக்குத் துறையவர்கள் வீட்டுக்கு வந்து முப்பத்தொரு கட்டுப்போட்டார்கள் யென்றும் மத்தக்கபுறுஞ் சொல்லிப் போட்டு காசாக்கச்சேரியே வந்தேன். பகலைக்குமேலாக ஆறரைமணிக்கு சந்தாசாயபு மகன் ரசாசாயபு பத்துப்பதினஞ்சு குதிரை சுவார்களும் நூறு சேவுகருமாக வந்து துரையவர்களைக் கண்டு சந்திச்சு யெட்டுமணிமட்டுக்கும் பேசியிருத்து வீட்டுக்குப் போனன்.

நான் போக வேணுமின்றிருந்தேனிதிலே மழைவார சாடையாயிருந்தபடியினலே போகர்மல் சலாஞ்சொல்லி அனுப்பிப் போட்டு வீட்டுக்கு வந்தேன். இராத்திரி பத்துமணிக்கு கேழ்விப் பட்டகபுறு துறையவர்கள் ரசாசாயபை—யிப்பதானே ஆற்காட்டு கோட்டையிலே யிறங்கியிருக்கிற யிங்கிறேசுக்காறர் போய் சண்டைப் பண்ணிதுரத்தி விடச்சொல்லி யனுப்பிவிட்டதாகவும் நாளையதினம் போதாது நாளையநன்றைக்குப் போறேனென்று சொல்லிப்போட்டு வந்ததாகவும் கேழ்க்கப்பட்டுதுமல்லாமல் யிப்போ வாலிகொண்டாபுரத்து அண்டையிலே விட்டுப்போட்டு வந்த மூவாயிரம் குதிரையுஞ் செஞ்சி வந்து சேருமே—நான் செஞ்சிக்குப் போய் சேர்ந்து அவர்களைக்கூட்டிக் கொண்டு ஆற்காட்டுக்குப் போறமட்டுக்கும் அவர்களுக்கு—சத்தியாய் சோத்துச்சிலவுக்காகிலும் கொடுத்தாலல்லோ சண்டை போடுவார்கள். ஆனபடியினலே ரெண்டு லட்சம் ரூபாயி வாங்கிக் கொடுக்கவேணுமென்று மதாமுடனே சொல்லிக்கொண்டதாகவும் யிப்போ சொன்னல் கோபிச்சுக் கொள்ளுவர்ர் நாளைக்கி சமயம்பார்த்துச் சொல்லுகிறேனென்று சொல்லிப்போகச் சொன்னதர்ய்ச் கேழ்க்கப்பட்டுது.

1751-ஹு டிசெம்பர்மீ 11உ பிறசோத்பதிஹு பிறட்டாசிமீ 28உ சோமவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்டசேதி கோபால நாருயணப்பைய்யன் சிவருகுரெட்டி விசுவனுத ரெட்டி சந்திரசேகர பண்டிதன் வகையிருக்கள் சிறிது கும்பலைக் கூட்டிக்கொண்டு திருவதி—புவனகிரி வகையிரு கொள்ளையிட்டார்களே யிதின்பேரிலே கோபால நாருயண பய்யன் பேரிலே தேவனும் பட்டணம் துரை கோபம் பண்ணி பதினுயிரம் ரூபா வாங்கிப்போட்டதின் பேரிலே அசந்து நிற்கிறதாய் சேதிகேழ்க்கப்பட்டது.

இத்தனுள் காலத்தாலே கோட்டையிலே கட்டுப் போட்டபடியினுலே கோட்டைக்குப் போயிருந்தவிடத்திலே சின்னதுரை சொன்னது கப்பலிலே கப்பித்தானிடமில்லை யென்று சொல்லுகிறுன். நாளையதினம் மாத்திரம் யிறநூறு (200) கட்டுக்கு உளக்குறையாமல் பாத்துத் தித்துப்போட்டு அப்பால் கப்பல்ப் பாயெடுத்துப்போட்டு பிற்பாடு பார்வை பார்க்குறதென்று சொன்னுர். அதின் பேரிலே கட்டுப்போட்டது கையை தெரிஞ்சுக் கொண்டு துரைக்குப்போய் கபுறு சொல்லிப்போட்டு நான்காசாக் கச்சேரிக்கு வந்தேன். இத்தனுள் குத்தபதின்கான் (qutb-ub-dinkhan) வாங்கிக்கொண்ட நாற்பதினுயிரம் (40000) ரூபாயுமெடுப்பிச்சுக் கொண்டு ஆற்காட்டுக்கு சாகிப்போனுனென்று கபுறு சொன்னுர்கள்.

திரிச்சிராப்பள்ளி கோட்டையைச் சுத்தினுப்போலே செருக்குவார-பாளையத்திலே சந்தாசாயபு பவுனசுயிறங்கியிருக்கிறதாகவும் ஆலம்கானும் சிறிது பாளையக்காறர்களும் சந்தாசாயபுக்கு மத்தத்து வருகுருர்கள் யென்றும் ஆலம்கான்—சந்தாசாயபுக்கு சிலவுக்கு அறுபதினுயிரம் ரூபா யனுப்பிவிச்சானென்றும் மயிசூர் ராசாவுக்கும் சந்தாசாயபுக்கும் மனது ஒருமையில்லாமலிருக்கிறதாகவும் யிப்படியாக யெழுதிவந்தசேதி.

1751-ஹு நொவேம்பர்மீ 8உ பிறசோத்பதிஹு அற்பிசிமீ 26உ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்கு போனவிடத்திலே நடந்த சமாச்சாரம் திரிச்சிராப்பள்ளியிலிருந்து சந்தாசாயபு காகிதம் வந்தது அந்தக் காகிதம் படித்து துரைக்குச் சொன்னது-தாங்களெழுதின காகிதம் வந்து சேர்ந்து. பார்த்துக் கொண்டு சகலமுந் தெரிய வந்தது. திரிச்சிராப்பள்ளி கோட்டையிலிருக்கிற மமுதல்லிக்கானுக்கு சலபத்து சங்கு தாக்கீது பறவானுவும் நான் பார்த்துக்கொள்ளுகிறதுக்கு தேவனும்பட்டணம் கோவறணதோர்ரேருக்கு யெழுதிவந்த காகித தாக்கீது பறவானுவுக்கு நக்கலும் வந்து சேர்ந்து பார்த்துக்கொண்டேன்.

அவர்களுக்கு சலாபத்து சங்கு யெழுத வேண்டியதாக்கீது. யெப்படியோ அந்தப்படிக்கு திட்டமாய் யெழுதியனுப்பினர்கள் மமுதல்லிக்கான் பேருக்கு தாக்கீது பறவாணு கொண்டுவந்த அறுக்காறுகளே அனுப்பிவிச்சார்களே அவர்களைப் பறஸ்பரமாய்த்தானே கொண்டு போய்கொண்டு போய்க் கொடுக்கச்சொல்லி திரிச்சிராப்பள்ளி கோட்டையே போகச்சொன்னோம். அவர்கள் கோட்டையே போனார்கள். யிவர்கள் கொண்டுபோய்க் கொடுத்து நடந்த சேதிபின்னம் மனுஷர்கபுறு கொண்டிவரவில்லை வந்தவுடனே தங்களுக்கு யெழுதியனுப்பிவிக்குறோம். மத்தப்படி யிப்போவந்த சலாபத்துசங்கு ஓறதுப்படி (order)சகு மமுதல்லிக்கான் சம்மதிச்சு கவில் வாங்கிக்கொண்டு பிறப்பட்டாகுனல் சுகப்படுகிறுன். இல்லாவிட்டால் திரிச்சிராப்பள்ளி கோட்டையிலே யிருக்கிற சிப்பாயிகள் வந்து பேசி உடன்படிக்கை பண்ணிக்கொண்டு போயிருக்கிறுர்கள் அப்பால் கோட்டையை யேமுட்டு நாளையிலே வாங்கித்தீத்துப் போட்டு அந்தச் சமாசாரமும் உமக்கு யெழுதியனுப்பிவிக்குறோம் என்று யிங்கிலீசுக்காரரிந்த சலாபத்துசங்கு ஓறதி வந்துதேயந்த மட்டிலே அவர்கள் காரியத்தைப் பார்த்துக்கொண்டு அடங்கி அவர்கள் மட்டிலே வியாபாரம் பண்ணிக்கொண்டு யிருந்தார்களேயானுல் சுகப்படுகிறுர்களில்ல; விட்டால் அவர்களுக்கு பொல்லாத காலந்தான்யென்று அறியவேண்டியது யென்றும் யிதல்லாமல் மயிசூராருக்கும் நமக்கும்ஞ் சினேகம் ஆச்சுது அவாகள் வைகில் வந்து சிறிது உடம்படிக்கை கேட்டான்.

அந்த உடம்படிக்கைக்கு சம்மதிச்சு கையெழுத்துப்போட்டு கொடுத்தேன் எதினுலேயென்றுல் யிந்த வேளைக்கு அவர்கள் பெலவானுன படியினுலே கையின் கீழே வைத்துக்கொண்டால் அப்பால் பார்த்துக் கொள்ளலாமென்று எழுதிக்கொடுத்தேன். அவரகளே யெழுதிக்கொடுத்த பிருதிலே தஸ்க்கத்துப்பண்ணிக் குடுத்தபடிக்கு அலாயிதாபறுத்திலே யெழுதி யனுப்பிவிச்சேன். அது பார்த்துக்கொண்டுதான் தெரியவரும் தாங்களும் மயிசூர் தளவாய்ப்பேருக்கு சந்தாசாயபு யெழுதிக்கொடுத்த உடன்படிக்கை படிக்கு நாம் நடப்பிச்சுக்கொடுக்கிறோம். அதைப் பார்த்துக் கொள்ளச்சொல்லி -பரவசமாயெண்ணி - உபசாரமாயெழுதியனுப்பி விச்சால் அந்துடனே கூடயென் காகிதமும் கொடுத்து அவர்கள் வக்கீல் மாரிபத்திலே அனுப்பிவிக்குமேறனென்று யெழுதியிருந்தது உடன்படிக்கை பருதிலே என்னயிருக்குது பார்த்துச் சொல்லென்று சொன்னர் ஓடம்படிக்கை பருதிலே எழுதியிருந்த நாலுகாரியத் துக்கு வயணம் முதல்காரியம்—உங்களுக்கும் நமக்கும் தினந்-தினம் பிறவற்த்தமானமாய் சினேகம் பிவிருத்தியாய் நடந்துவருகிறது.

2-வது காரியம்—திரிச்சிராப்பள்ளி சீமையில் சிறிது சீமைகள் வெகுநாளா யெங்கள் சமஸ்தானத்தை சேர்ந்திருக்குது.

ஆகையால் அந்த சோலி நீங்கள் பேசக்கவையில்லை.

3-வது:— எங்களைச் சேர்ந்திருக்கிற பாளையக்காறர் சோலி போகக்கவையில்லை.

1-வது— உங்களுக்கு மத்ததாயி ரெண்டாயிரம் குதிரையும் அய்யாயிரம் ஹோமும் உங்களண்டையிலாசிலாயிருக்கிறது யிதுக்கு நீங்கள் மூணு லக்ஷம் ரூபாய் சீமை யெங்களெல்லை சாதைச் சேர்ந்தா போலே யிருக்கிறதிலே யெங்களுக்கு கொடுக்கிறதென்று யெழுதிக் கொடுத்தார்கள் யிதுக்குப் பதிலுத்தரவு யெழுதிக்கொடுத்தது.

முதலாவதுக்கு பதிலுத்தரம் தினம் தினம் பிறவற்தமானமாய் சினேகம் அபிவிறுத்தியாய் நடப்பிக்க வேண்டியதென்று யெழுதி யிருந்ததுக்குப் பதிலுத்தரம் அந்தப்படி தினதின பிறவற்தமான மாக சினேகம் நடப்பிக்குறோமென்று யெழுதினது.

2-வது திரிச்சிராப்பள்ளியுடனே சேர்ந்த சீமையில் சிறிது யெங்கள் சமஸ்தானத்தை அடைந்து சேர்ந்திருக்குது. அந்த சீமைப் பேச்சுகள் யெடுக்கத்தேவையில்லை யெனறெழுதினக்குப் பதிலுத்தரம் அந்தப் பிறகாறம் பிறசங்கமெடுக்கக்கவையில்லை யென்றும் எடுக்கிறதில்லை யென்றும் தஸ்த்துவாச்சுது.

3-வது நாங்களெந்த பாளையக்காறர் சோலி போகக்கவையில்லை யென்று யெழுதினதுக்குப் பதிலுத்தரவு–துறையூர் பாளையக்காறர் தவிர மத்தப் பாளையக்காறர் வழியே போறதில்லையென்று தஸ்கத்து.

4-வது இரண்டாயிரம் குதிரையும் அய்யாயிரம் ஹோமமும் வாங்காமலுங்களுக்கு நாங்கள் மத்தத்தாய் வந்திருக்கிறது. அதுக்கு மூணு லடசம் சீமை அந்தச் சிப்பந்திக்காக யெங்கள் சாகத்தைச் சேர்ந்த சீர்மையாய் விடுகிறதென்று யெழுதிக் கொடுத்ததுக்குச் சொணடிக்குப்பம் வகையரு சிறிது சீமை களும் தொண்டமான் கட்டிக்கொண்டிருக்கிற சீமையிலேயுமாய் மூணு லடசம் பொன்னுக்கு விடுகிறோமென்று தஸ்கத்து இந்தப் படிக்கு தஸ்கத்துப் போட்டு ஆச்சுதென்று மிந்தப்படி மயிசூர வக்கில் யெழுதிக்கொடுத்த காரியங்களுக்கு சம்மதிச்சு கையெழுத்துப போட்டேனென்றும் அலாயிதாய்ப் பநியெழுதி யிருந்ததை படிச்சு சொல்லி ஆனபிற்பாடு அதுக்குத் துரையவர்கள் சொன்னது சந்தாசாயபு சாகிதங்களுக்குப் பதிலுத்தரம் யெழுதச் சொன்னதும் மயிசூராருடைய சோலி ராசகாரியத்துடனே சேர்ந்தது. யிந்தவேளைக்கு தக்காப்போலே ஒருசக்குப் பண்ணிக் கொண்டீர். அது நல்லதுதான். ஆனால் மூணு நாலு லட்சம் ரூபாயிந்த வேளைக்கு மௌள் — பொறு — உபாயமாயிருந்தவேளை சிலவுக்கு உதவுகிறாப்போலே பேசாதேபோனீர். ஆனாலும் யென்ன இனிமேல் ஆகிலும் பேசியெவ்வளவு ஆகிலும் சிலவுக்கு இந்த வேளைக்கு உதவத்தக்கதாக யெனம் பண்ணிக்கொள்ளவும் யென்று தளவாய்க்கு–நீர் யெழுதியனுப்பிவிக்கச் சொன்னபடிக்குக் காகித மெழுதி அனுப்பிவிச்சோம் யென்றும் கோட்டை சீக்கிறமாய் வாங்கிற காரியத்திலே ரூப்பகலாய் பிறயாசப்பட்டு வாங்கச்சொல்லி அப்பால் மயிசூரார் தளவாயக்கு ஒரு காகிதம் சந்தாசாயபு எழுதிக் கொடுத்த உடம்படிக்கைப்படிக்கு நாமே நடப்பிச்சுக் கொடுக்கிறோ மென்று உபசாரமாய் யெழுதவேண்டியபடிக்கு யெழுதி சந்தாசாயபு காயிதத்திலே வைத்து அனுப்பச்சொன்னார். அந்தப் படிக்கி மதனுந்த பண்டிதனுடனே சொல்லி யெழுதி அனுப்பச்சொல்லிப் போட்டு நான் காசாக்கச்சேரியே வந்தேன்.

1751ௐ நொவம்பர்மீ 9உ பிறசோத்பதிௐ அற்பிசிமீ 27உ
செவ்வாய் வாரம்

இத்தனாள் காலத்திலே துரையவர்களிடத்திலே போன விடத்திலே நடந்த சேதியென்னவென்றால் பிதனூர் ராணிமனுஷர் அறுக்காறுகள் வகையறு காலுபேர்களையும் அழைப்பிச்சு உங்கள் துரைக்குச் சொல்ல வேண்டியது இப்போது என் காரியம் நிமித்தியம உங்கள் துரைகளெழுதினார்களோ அந்தக் காரியத்தை விட்டுவிட்டு இனிமேலுங்களுக்கு மெங்களுக்கு சினேகம் நடக்கும் பொருட்டு ஒரு ஸ்தன உங்கள் சீமையிலே எங்களுக்கு குடுக்கச் சொல்லி யெங்கள் சினேகம் அபிவிறுத்தியாய் நடப்பிக்கச் சொல்லியுஞ் சொல்லுங்கோன் இதல்லாமல் எங்களுடனே பகைச்ச—நாசறுசங்கு வகையிருக்களுக்கு நடந்த காரியமது களுக்கு யெங்களை சினேகிச்ச சந்தாசாயபு—யித யத்து மொகதின் கான்—சலாபத்துசங்கு வகையராக்களுக்கு மகத்தான தவுலத்து வந்ததும் நன்றாய் யெண்ணிப்பார்த்துக் கொள்ளச்சொல்லியும் பின்னியும் யிப்படிப்பட்ட பேச்சு கரையச்சொல்லி நூறு ரூபாய் பரசுராமபிள்ளை கையில் வாங்கிக்குடுக்கச் சொன்னார் அந்த சேதி யெல்லாம் அறுக்காறுகளுக்கு சொன்னவிடத்திலே அவாகள் சொன்னது எங்கள் வசமாயிருந்த சீமையை உங்கள் மனுஷர் பலவந்தமாய் வந்து கட்டினார்களென்று மதை அரைநாழிகையிலே நாங்கள் வாங்கிக்கொள்ளுவோம் ஆனாலுங்கள் சினேகம் நிமித்தியம் திஷ்ட்டிவைத்து உங்களுடனே சினேகம் விறுத்தம் பண்ணிக் கொள்ளுவானே. நாங்கள் மனுஷருங்களுக்கு யென்னென்ன மறுபொருளாயெழுதினார்களோ அதினாலே நீங்கள் உத்தாரம் குடுத்து யிருப்பீர்கள் அந்த மத்தலப்பெல்லாம் சவிஸ்தாரமாய் தினத்தியர்தம் நடந்த பூருவோத்ர மெல்லாம் எழுதியனுப்பிவிச் சாலும் உங்களுக்கு தாக்கீதுகள் யெழுதிவீரகளென்று யோசனை பண்ணி யெங்கள் யெசமான்களுககு காகிதமெழுதியனுப்பினார்களே ஆனால் நீங்களிப்போது எந்தக் காரியத்தைக் குறுச்சு வந்தீர்களோ அந்தக் காரியத்தைச் குறிச்சு வந்தீர்களோ அந்தக் காரியத்தை விட்டுவிடச் சொன்னால் நாங்கள் சொல்லவேண்டியதென்ன யிப்போ யிங்கிலீசுக்காறர்கள் யெங்களுக்கு மத்தத்து பண்ணுகிறூ மென்று சொன்னார்கள் அதைப் பாராமல் உங்கள் சினேகத்தை தானே எண்ணி உங்களண்டைக்கு வந்தோமென்று சொன்னார்கள் அதுக்குத் துரையவர்கள் சொன்னது யிங்கிரேசுக்காறர்கள் பெங்கே யெவர்களுக்குச் செயித்துக்குடுத்தார்கள் அவர்களிங்கே அன்வறதிகானை முன்னே மோசம் பண்ணினார்கள். அப்பால் நாசறுசங்குவையும் மோசம் பண்ணினார்கள் யிப்போ திரிச்சிராப் பள்ளிங் கோட்டையில் மாமுதல்லிகானை மோசம் பண்ணி திரியுரார் கள். ஆனாலவர்களிடத்தில் ஒரு சமத்து யெதிராளிகளை தங்களை நம்பப் பண்ணிக்கொண்டு காரியத்தைப் பேறுபண்ணினபிற்பாடு பணத்தை உள்ளதெல்லாம் உறிஞ்சிப்போட்டு நடுவாத்திலே கைவிட்டுவிட்டால்போலே விட்டு நீத்துப்போட்டு தாங்களப்பாலே போய் நிற்பார்கள். அந்த வல்லமை யிருக்குதென்று துரைசொல்லி அப்பால் அவர்களுக்கு நூறு ரூபாய் கொடுக்கச்சொல்லி பிதனூர் ராணிக்கும் தளவாயிருக்கு மெழுதின காகிதங்களைக் கொடுத்து போகச் சொல்லி என்னைப் பார்த்து பிதனூர் ராணிக்கு ஏதாகிலும்

வெகுமானம் அனுப்ப வேணுமாவென்று கேட்டார் இவர்கள் வெகுமானம் கொண்டுவந்த அறுக்காறுகள் கையிலேதான் கொடுத்து அனுப்பப்போகாது. நாம் நம்முட மனுஷர் கையிலே கொடுத்து யிந்த அறுக்காறுகள் போனபிற்பாடு கொடுத்தனுப்ப வேணும் இல்லாவிட்டால் முசியே லுவேத் (M. Louet) மயே தலைவனுக்கு யெழுதி அனுப்பி அங்கேயிருந்து கொடுத்தனுப்பினால் அதுமெத்த நல்லதுயென்று சொன்னேன் மெய்தானென்று மயேயிக்கு காகிதங்கள் போகச்சே யெச்சரித்தால் யெழுதி யனுப்பிவிக்குறேன் என்று சொன்னார். நல்லதுயென்று சொல்லி வெளியே வந்து சின்ன பரசுராமபிள்ளைக்கு கும்பினீர் சேவுக னுடனே பித்தனூர் (Bidanur) அறுக்காறுகளுக்கு நூறு ரூபாக் குடுக்கச்சொல்லி அனுப்பிப்போட்டு காசாக்கச்சேரிக்கு வந்தேன்.

### *1751-ஹு நொவாம்பர்மீ 27உ பிறசோத்பதிஹு கார்த்திகைமீ 15உ சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டையிலே கும்பினீர் வற்தகர் செல்லாவும் காரைக்கால் ரவைசெல்லாவும் கும்பனீர் வர்த்தக ருடையது வற்ணத்ர முதலானதுகூட முப்பது கட்டுப்போட்டார் கள் மைத்தப்படி யித்தனாள் கேட்டசேதி திரிச்சிராப்பள்ளியிலே யிருந்து துரையவர்களுக்கு சந்தாசாயபு காகிதமும் வந்துதாம் அதிலே யெழுதியிருந்த சேதி மேஸ்தாகோப்பு மோறசா—திருச்சி ராப்பள்ளிக் கோட்டை வாசலுக்கு வெளியே போட்டிருந்த மொறசாவிலே அசனத்திகான் ரவுன்சும் அசனத்திகானும் போய் சண்டை பண்ணி அந்த மொறசாவிலே யிருந்த ஒரு யிங்கிலீசு ஒபிசியாலு ஒருத்தனையும் பத்துப் பதினஞ்சு வெள்ளைக்காரர்களை யும் பிடிச்சுக்கொண்டு அதிலே யிருந்த துப்பாக்கி முதலானதுகளை யெல்லாங் கொள்ளையிட்டு யெடுத்துக்கொண்டு பிறப்பட்டு வந்த சேதி யெழுதி வந்ததாகவும் கோட்டையும் கொஞ்ச நாளையிலே பத்தே ஆம் – மேஸ்தர் கோப்புக்கும் – மேஸ்தர் சின்சென் யென்கிற வனுக்கும் ஆகாமலிருக்குதாம் மேஸ்தர் சின்சேன் (Mr. Gingens) மமுதல்லிகானுக்கு அனுகூலமாயிருக்கிறான் ஆனபடியினாலே கோப்பி பிகாடிச்சு யிருக்கிறான் ஆனபடியினாலே கோட்டை நமக்கு கைவசமாகுமென்றாப்போலே யெழுதி சிலவு சித்தாயத்துக்கு வேணும் போனமாசம் அனுப்பின லக்ஷம் ரூபா போதாது. இந்த வேளை பணத்தைப் பாராமல் சில வழிச்சு காரியமனுகூலம்பண்ணிக் கொள்ளவேண்டிய சமையமான படியினாலே இந்த வேளைக்கு இரண்டு லெட்சம் ரூபாய் மாத்திரம் அனுப்பிவிக்கச் சொல்லிக் காகிதமெழுதி வந்ததாகவும் அந்தக் காகிதம் பார்த்துக்கொண்டு காகிதம் கொண்டுவந்தவர்களுக்கு யிருபது ரூபா யினாம் கொடுக்கச் சொல்லி சந்தோஷமாய்ப் பதில் காகிதமெழுதி யனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் பகலைக்கு மேலாக தொம்பரை கூத்தாடிகள் ஆடின தாய் சேதிகேழ்க்கப்பட்டுது. ஆனைக்கு கவாடமின்று முதல் பவ்வாதி போடச்சொல்லி நேத்து துரை சொன்னதாய் சாம்பயன் வந்து சொன்னான். யித்தனை நாளும் எட்டு வராகனும் பதினாறு

பணத்துக்கு கவாடம் போடுகிறது வழக்கம் அதுக்கு பாதிஞலே சில்லரை வராகளிலே போடச்சொல்லி உத்தாரங் குடுத்ததாய் வந்து சொன்ஞன். இத்தனுள் பாப்பயப்பிள்ளையைக் கணக் கெடுத்துக்கொண்டு சீக்கிறமத்துக்கு வரச்சொல்லி செங்கல்ப் பேட்டுக்கு யெழுதினதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது.

1751-ஹு தெசம்பர்மீ 13உ பிறசோத்பதிஹு மார்கழிமீ 2உ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போன விடத்திலே சலவைப்பார்வை யென்றைக் கென்று கேட்டார். நாலே நூறுகட்டு மட்டுக்கும் விழுமென்று சொன்னேன் அப்பால் துரையவர்கள் மைசூர் ராசா செத்தசேதி யென்ன தளவாயஞ் செத்தானென்று சொன்ஞர்களே இரண்டும் பொய்யாய்க் காணுதென்று கேட்டார் அப்படி தான் சேதிவந்தது யென்று மயிசூர வக்கில் சொன்ஞன். நாம் சொன்ன பிறகாரம் பிறப்பாடு மனுஷர்களை அனுடபிஞனே அவன போய் தற்மபுரி யென்று செங்கமா கேட்டத்து மேலே யிருக்குதாம் அங்கே சறுவாதிகாரம் பண்ணுகிற மயிசூர் ராசாவினுடைய தளவாயினுட தம்பி நந்திராசா வென்கிறவன் ரெண்டாயிரம் மூவாயிரம் குதிரையும் அய்யாயிரம் ஆராயிரம் ஹோமத்துடனேயும் வந்தான் முராரிராயனும் இரண்டாயிரங் குதிரையுடனே அவ்விடம் வந்து சேர்ந்து ஒருத்தருக கொருத்தர் மிலாகத்தாய் அங்கே யிருந்தும் யிரண்டுபோர்களும் சேலத்துக்கு அப்பிரம் போய் யிப்பிறமோ மூனுச்சாவடி போய் சேர்ந்து அங்கேயிருந்து மகரு ஊர் போய் சேர்ந்து அங்கே யிருந்து மகம்மதல்லிக்கானுக்கு மத்தத்தாய சந்தாசாயபின் பேரிலே சண்டைக்குப்போறதாய்ச்சேதி வந்ததென்றும் நான் ஏதாகிலு மவர்கள் காரியக் காறனல்ல அவர்கள் பட்டணத்திலே குடியிருக் கிறவன் வறத்தகன் முனசம்புதாசுடனே யெங்கள் பெரிய தகப்பனும் நானும் வந்து உங்களைக்கணடு சந்திச்சுப்போனசேதி அறிந்தபடியிஞலே நீ போய் பெகுமானத்தைக் குடுத்து எங்கள் சினேகம் அபிவிருத்தியாயிருக்கச்சே இது கொண்டுவாவென்று அனுப்பிஞர்கள் அதின்பேரிலே யிது முன்னில்லையாய்ப் போயிச் சிறிது வறத்தகங்களுக்குங்கூடப் பேசிக்கொண்டு வரலாமென்று வந்ததேயல்லாமல் மத்தப்படி அப்பால் அவர்கள் வக்கிலாக்கியாய் வந்ததனுனல்ல அவர்கள் சம்பளக்காறனல்ல. அவர்கள் கொடுத்த பெகுமானத்தைக்கொண்டு வந்து உங்களுக்குக் கொடுத்தேன் அந்த பெகுமான சம்மதிக்கு இவ்வடத்துக்கு வந்த பிற்பாடு றங்கப்பனிப்ப்டி நடக்கலாமென்று சொன்னதின்பேரிலே யிருபதிஞயிரம் ரூபா கவில் பண்ணி அது அழைப்பிச்சுக் கொடுத்து போகலாமென்று அழைப்பிச்சுக்கொடுத்துப் போட்டுப் பயணம் அனுப்பிவைக்கச்சொல்லி கேட்டால் யென்னைப் போகப் போகாது. பத்து நாள் பொறுத்து அனுப்பிவிக்குறே மென்று சொன்னீர்கள் அப்படியும் பார்த்தேன். அதின் பிறப்பாடு ரெண்டு சேவுகர்களைக்கொண்டு வந்து நான் ஓடிப்போய் விடாமல் காவல் பண்ணினீர்களென்று சொல்லி யிப்பவும் அனுப்பிவிச்சால்

யெனசரீரம் நிற்கும் யில்லாவிட்டால் யெனக்குத் திகலினாலே சரீரம் விழுந்துபோமென்றும் அழுதானென்று சொன்னேன் அதுக்குத் துரை சொன்னது யிவனைக் காவல் வைத்தது போலே அவர்களுக்கு யென்ன பரவாயிருக்குமோ அவர்கள் கொஞ்ச சாதியல்லவா அந்தப் புத்தியினாலேயிப்படி யோசனை இல்லாமல் நடக்குறார் கள்ளென்று சொல்லி நல்லது அனுப்பிவிடுவோமிவனைத் தொட்டு டென்ன ஆகப்போறகாரியம் அவனுந்தயிரியமாயிருக்கும்படி அனுப்பிவிடுவோமென்று சொல்லென்று சொல்லி அப்பால் சந்தா சாயபுக்கு கற்னாட்டகத்திலே ஆற்காட்டு திரிச்சிராப்பள்ளி தஞ்சாவூர் பேஷ்களுயிது சுபையாயிருந்தாரே அவருக்குத்தகிரும்-என்பேருக்கு பாலியும் வந்தது. நான் மொறட்டாண்டிச்சாவடி யிலே போனமாசம் யுருக்கச்சேதானே வந்தது. நம்முட கும்பினியார் பேருக்கு — ராச்சியம் தோறணங்கட்டச் சொல்லுவோமென்று யோசனைப் பண்ணினேன் இதிலே யிந்த மருட்டியர் வந்தார்களே அதைத் தொட்டு மெள்ளவாகட்டும் மென்றிருக்கிறேன். இனிமேல் சந்தாசாயபு வசம் சீமையிருந்தால் கெட்டுப்போம் அவனுக்கொரு காரியமும்ன் கூலிச்சுவரயில்லை. சமஸ்தான பேர்களுடனேயும் திவேஷிச்சுக் கொண்டுயிருக்கிறது ஒருத்தருக்கும் பேசினபடிக்கு நடக்கிறதில்லை முன்னே ஒருத்தனுடனே பேசிதீர்த்து அவனை அனுப்பிவிச்சு சீமையிலேபோய் உளுக்காருகிறதுக்கு முன்னே பின்னை ஒருத்தன்வந்து கேட்டால் அப்போதும் அவனுக்கு யெழுதி கொடுத்து அனுப்பிவிடுகிறது யிப்படி மயிசூர் ராசா தஞ்சாவூர் ராசா முதலான பேர்களுடனே யெல்லாம் திவேஷம் பண்ணிக் கொண்டபடியினாலே திரிச்சிராப்பள்ளியைச் சாதிக்க கட்டாமல் மமுதல்லிக்கானுக்கு மத்தத்து பண்ணுகிறார்கள் யிவ்விடத்திலே பாளையக் காறர்களுடனேயும் அப்படிதான் அதிலேஷம்தினாலே பாளையக்காறர்களுடனே எல்லாரும் யிங்கலீசுக் காறருடனே கூடிக்கொண்டு ஆற்காடு முதலான யிடங்களேல்லாம் கட்டிக்கொண்டு ராச்சியமெல்லாம் சாகுபடியாக வொட்டுகிறதில்லை கலகம் வளர்ந்துகொண்டே யிருக்குது ஆனபடியினாலே சந்தா சாயபை தனகா பண்ணி கொஞ்சமாய் ஒரு சாகீர் கொடுத்து சாப்பிட்டுக்கொண்டு கூப்பிடாமல் யிருவென்கிறது. சத்தே சிலுமிஷங் கண்டால் பிடிச்சுக் கப்பலின்மேலேத்தி மக்கத்திலே போய் செபம் பண்ணிக்கொண்டு ஆத்துமலாபமான காரியத்தைப் பார்த்துக்கொண்டு யிருக்கச்சொல்லி சொல்லுகிறதென்று சொன்னார். அப்படியாவென்று சொல்லிப்போட்டு பின்னையும் லோகாபிறமமாய் பேசியிருந்து அனுப்பிவிச்சுக்கொண்டு காசாக் கச்சேரியே வந்தேன்.

ஆனால் சந்தாசாயபு எனக்கு வஞ்சனை பண்ணி நடப்பிச்சதுக்கு சுவாமியவனை வஞ்சனைப்பானெண்பிச்சு அப்பால் அந்த ஞாயம் பனிரெண்டு மாசத்தைக் குள்ளாக தீத்துப் போட்டார் யின்னம் லோகத்திலே பிறசித்தமாகயில்லை பிறசித்தமாகுறகாலம் வருகுது அதுவும் சமீபத்திலே யிருக்குது வெளியாய்ப்போகுது. மத்தப்பேர் களுக்கு மிந்தக்கெதி யிப்படியே அவரவருக்கு காணப்போது காணாமல் போகத்தக்கதில்லை சுவாமிக்கு பஷ்ஷப பிறதி பஷ்ஷம் யில்லை ஞாயம் போனபடி நடப்பிப்பார்.

1751ஸு டிசம்பர்மீ 17வ பிறசோத்பதிஸு மார்கழிமீ 6வ சுக்குறவாரம்

இத்தனுள் துரையவர்களுக்கு வந்த சேதி ரசாசாயபுக்கும் யிங்கிரீசுக்காறருக்கும் ஆறணிக்கப்புறம் வெள்ளரிக்கிட்ட ரசாசாயபு லசுக்கர் யிறங்கியிருக்கச்சே மறுபடி பாரும் யிங்கிரீசுக்காறரும் பவுன்சுடனே வந்து சண்டைபோட்டதின்பேரிலே ரசாசாயபு லசுக்கரிலே மிகுதியும் சேதமானபடியினாலே லசுக்கர் முறிஞ்சு ரசாசாயபு சேத்துப்பேட்டு வந்து சேர்ந்தானென்று யெழுதி வந்தது.

இத்தனுள் வந்தவாசி சீர்மை அமீல் நாருயன சாஸ்திரியாருக்கு தனகாபண்ணி சிவருமபண்டிதனுக்கு துரையவர்கள் கருரு பண்ணி சிறுப்பாகுடுத்தார்கள்.

திண்டிவனம் சிமைனட்டு முத்துமல்லாரெட்டி துரையவர்கள் பேட்டி பண்ணிக்கொண்டு நதீர் பதினொரு அசாபியும் யிருப்பதோரு விராகனும் வைத்துக் கொண்டு—கண்டான் அம்மாளுக்கு அஞ்சு அசர்பியும் யிருபத்தோரு விராகனும் நதீர்வைத்துக் கண்டான் யென்கிற சேதி கேழ்க்கப்பட்டது.

1751ஸு டிசம்பர்மீ 16வ பிறசோத்பதிஸு மார்கழிமீ 8வ ஆதிவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப்போய் சலாம் பண்ணி கபுறுசொல்லிப்போட்டு அங்கே யிருக்கச்சே மீர்ஷம் வந்து சேந்தான். சேர்ந்து துரையைக்கண்டு ரசாசாயபு வந்து மறுபடி போகவேணும் முன்னே போகச்சே செகுனம் விறுத்தமாயிருந்தது. ஆனபடியினாலே ஒருதரம் வந்துபோகவேணுமென்று வருகிறன். அதுக்கு நீங்கள் உத்தாரம் குடுக்கவேணுமென்று கேட்டதுக்கு மராட்டியர் திருடர் அவர்கள் குதிரை ஆயிரம் குதிரை வந்த மட்டுக்கும் அதுக்குப் பயந்து வேலூரே வோடிப் போனீர்கள். அங்கே யிந்தப்படிக்கி சேத்துப்பேட்டுக்கு வந்து சேரச்சே அவர்கள் கையிலகப்பட்டு ஓடிவந்து சகலமுங் கொள்ளை கொடுத்துப்போட்டு சேத்துப்பேட்டுக்கு வந்து சேர்ந்து அங்கேயுமிராமல் யிப்புறம் வருகுறதென்ன மெத்த அபகீர்த்திக்கு யிடம்பண்ணிப்போட்டு விட்டீர்கள் யென்று மிகுதியும் கோபம் பண்ணினதுக்கு பவுஞ்சுயெல்லாம் செஞ்சி சேர்ந்தது. சாயபுசதா மாத்திரம் நூறு குதிரையுடனே வந்து மறுபடி போற தாயுங்களுக்குத் தெரியப்படச் சொல்லச் சொன்னர் யென்று சொன்னதின் பேரிலே துரையவர்கள் கோபம் பண்ணி மறுபடி சேத்துப்போட்டுக்குச் சேரச்சொல்லி தாக்கீதாய் யெழுதி அனுப்பச்சொல்லி தாமும் காகிதமெழுதி அனுப்பினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் நேத்து ராத்திரி பத்துமணிக்கு மதனந்த பண்டிதனுக்கும் பாப்பய்யபிள்ளைக்கும் உடன் படிக்கையாய் பதினாயிரம் ரூபாய் பாப்பானுக்கு கொடுக்கவும் பாப்பய்ய பிள்ளைக்கு யெப்போதும் போலே தாசிலுத்தியோகம் வாங்கிக் கொடுத்து அனுப்பிவிட பேசிதீர்ந்து பாப்பய்யபிள்ளை வீட்டுக்கு மதனந்தபண்டிதன் நேத்து ராத்திரி பத்து பணிக்கு வந்து யிறநூறு ரூபாய் சிரோப்பா வாங்கிக்கொண்டு போனதாய் சேதி வந்தது சொன்னார்கள்.

## 1751ஸ்ரீ டிசம்பர்மீ 21உ பிறசோத்பதிஸ்ரீ மார்கழிமீ 10உ ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போன விடத்தில் துரையவர்கள் குத்தபத்திக்கான்—மீர்ஷம் வந்தார்கள். வந்தவர்கள் அவடத்திலே முசியே புறுனேயென்கிற ஓபிசியால் மசமானாயிருக்கிறவன் ஓடிவந்ததினாலே நாங்களும் ஓடிவந்து சேத்துப்பேட்டு வந்து சேர்ந்தோம் என்று வெள்ளைக்காறன் பேரிலே குத்தத்தை டருயிச்சு மீரஷமும் குத்தபத்தி கானும் சொல்லி பேசியிருந்தார்கள். அப்பால் அவனுக்குத் தாக்கீது எழுதியனுப்பிவிக்கிறேன் நீ போய் ரசாசாயபுக்குச் சொல்லி மராட்டியர் யிங்கிலீசுக்காறர் பேரிலே போயிறங்கி சண்டை குடுக்கச் சொல்லி திருப்பாசூர் சீர்மையும் குத்தபுத்திகானுக்கு பாலிபண்ணிக் குடுத்துப் போட்டுபோகச் சொன்னதாய் குத்துப் புத்திக்கான் அனுப்பிவிச்சுக் கொண்டுபோனதாய்ச் சேதி கேழ்க்கப் பட்டுது.

இதல்லாமல் துறையூர் வைக்கில் கவீசுவர் கஸ்த்தூரி றங்கப்பனை யழைப்பிச்சு திரிச்சிராப்பள்ளிக் கோட்டைக்குப்போற ரஸ்த்துவை தடை பண்ணச் சொல்லியும் மயிசூர் சீமை தோறணம் கட்டச் சொல்லியும் முசியே லாசு சேக்கசேன்—சந்தாசாயபு வகையிராக்கள் பவுன்சுக்கு ரஸ்த்து கொண்டுபோடச் சொல்லியும் யெழுதியனுப்பச் சொல்லி தாங்களும் காகித மெழுதிக்கொடுத்த தாய்ச் சேதி சொன்னார்கள்.

## 1751ஸ்ரீ தெசம்பர்மீ 23உ பிறசோத்பதிஸ்ரீ மார்கழிமீ 12உ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே நானையேதாகிலுங் கட்டுப்போடுவார்களாவென்று கேட்டார். காங்கு கட்டு கூட நூறு கட்டு போடுவார்களென்று சொன்னேன் அப்பால் துரையவர்களிடமிருந்துக்கொண்டு மயிசூர் தளவாய் செத்துப்போய் விட்டானென்று முன்னே பிறந்தபேச்சு மெய்தான் அதைத்தொட்டு நந்திராசாவென்கிறவன வந்தானே அவன் பிறப்பட்டு மயிசூருக்குப் போயிவிட்டானும் முராரி முழுச்சுக் குடுத்துக்கொண்டு மயிசூர சீர்மையெல்லாம் கொள்ளையிட்டு தீர்த்துப் போட்டானுமென்று சொன்னார். யிந்தச்சேதி வந்ததில்லை.

கும்பினீர் வற்த்தகநக்காறுல் சேலத்திலிருந்து யெழுதி வந்தது கும்பனீருக்கு வருகிற போற ஒரு நாள் பயணம் பிறப்பட்டாப் போலேயும் இதிலே முராரி ராயனும் நந்திராசாவும் நாலாயிரம் அய்யாயிறம் குதிரை சுவார்களும் பதினாயிரம் ஷேறாம்மூம் வந்து சேலம் டங்காசாலையுங் கோட்டையுமிரெண்டு மூனுபெலத்த வற்த்தகர்கள் வீடு தவிர மத்ததெல்லாம் கொள்ளையிட்டாப்போலே யும் நந்திராசாவுக்கு ஸ்நானத்துக்குத் தண்ணீர் யெடுத்துக் கொண்டு வருகிற வெள்ளிக் கிடங்கணைக்கூட பிடுங்கிக்கொண்டு போனதாகவும் கும்பினீர் பொதி மறுபடி திருப்பி கோட்டையிலே கொண்டுபோய் போட்டதினுலே தப்பிச் சென்றும் அப்பால் அவர்கள் கருவூரே போனுர்களென்றும் யெழுதி வந்தசேதி முன்னுங்களுடனே சொன்னேன். அந்த சேதியே யல்லாமல் வேறே சேதி கேழ்க்கப்படவில்லையென்று சொல்லி யிதுவும் உண்டானுல் பிறக்குமென்று சொன்னேன் மத்தப்படி லோகாப்பிறமமாய்ப் பேசியிருந்து காசாக்கச்சேரியே வநதேன்.

## *1751*ஹு தெசம்பர்மீ 26உ பிறசோத்பதிஹு மார்கழிமீ 11உ ஆதிவாரம்

இத்தனை காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போய் வந்த பிற்பாடு கேழ்விப்பட்ட சேதியன்ன வென்றுல் திரிச்சிராப்பள்ளி யிலே இங்கிலீசுக்காறருக்கும் அசனுதிக்கானுக்கும் சண்டையான தாய் அசனுதிக்கான் நல்ல சண்டை குடுத்து சத்துப் பின்வாங்கின வேளையிலே முசியே லாசு பவுன்சும் ஆலமுகானும் போய்உதவியாய் சேக்கசேனையும் தப்பின பவுன்சையும் காப்பாத்திக்கொண்டு அசனுதிக்கானிருந்த மொறசாவிட்டு சந்தாசாயபு யிறங்கியிருந்த பாளையம் வந்து சேர்ந்ததாய் சேதி சொன்னுர்கள்.

அப்பால் கேழ்விப்பட்ட சேதி மதாம் துப்பிளேயிக்சு துறையூர் வைக்கில் கஸ்தூரிறங்கப்பனை அழைப்பிச்சு நாங்கள் மயிசூர் சீரமையும் கோட்டையுங் கட்டிக்கொள்ளுகிறது நிச்சயம் தொண்டமான் தலைவெட்டிப் போடுகிறது நிச்சயம் தஞ்சாவூர் கோட்டையும் வாங்கிக்கொண்டு சீர்மையுங் கட்டிக்கொள்ளுகிறது நிச்சயம் யிது சத்தியமாயுன் மனதிலே யெண்ணிக்கவும் யென்று நான் சத்தியம் பண்ணினதாய் யெண்ணிக்கொள்ளுங்கள் யெந்த விதமும் மூன்று காரியமும் செய்யாவிட்டால் விடத்தக்கதில்லை. யெப்படியாகிலும் யெங்களை சீவனிருந்தால் நடத்தாமல் போகத் தக்கதில்லை.

## *1751*ஹு தெசம்பர்மீ 31உ பிறசோத்பதிஹு மார்கழிமீ 20உ சுக்கிறவாரம்

இத்தனை கானுபாதூருக்கு அவர் வைக்கில் போனுர் நாருயண ராயன் திரிச்சிராப்பள்ளி பேரிலே போயிருக்கிற சந்தாசாயபு லசுக்கரிலே யிருந்தெழுதி வைச்ச விபரமென்னவென்றுல் திரிச்சிராப் பள்ளிக்கோட்டையிலே யிருக்கிற மமுதல்லீகானு தாலூக்கு

அப்துல் சலீலுக்கானுடப் பிறந்தான் அப்துல் ராயிமான்கான் என்கிறவன் அசனுதிகானுக்கு சொல்லி அனுப்பி விபரம் தனக்கும் மமுதல்லிகானுக்கும் ஒத்துவரயில்லை யென்றும் தான் பிறப்பட்டு உங்களிடத்திலே வந்து சேருகிறேனென்றுமதான் வருகிறத்துக்கு அடையாளம் நீங்கள் பவுன்சுடனே வரக்கவையில்லை கொஞ்சம் பவுன்சுடனே கோட்டைக்குத் தென்னண்டையிலே பார்க்ரை மண்டபத்துக்கு வந்தால் அந்த சமாச்சாரம் தனக்குத் தெரியுறதுக்கு கோட்டை புருசும் பேரிலே ஒரு ஆளைவைத்து அறிஞ்சுக்கொண்டு அப்பால்தான் ஒண்டியாய் ஒரு வெள்ளைக் குதிரையின்பேரிலே ஏரிக்கொண்டு வருகிறேன் அப்பால் நீரும் நாமும் மிலாகத்து ஆவோமென்று யெழுதி அனுப்பிவிச்சதாகவும் அதை அசனுதிக்கான் மெய்யென்று எண்ணி நூறு நூத்தன்பது குதிரை சுவார்களும் யிறநூறு சிப்பாயகளுடனேயும் பிறப்பட்டு சந்தா சாயபு முசியே லாசு முதலான பேருடனேயும் சொல்லாமல் மோறசாயி மரிகுத்துக்கு வருகிற சாடையாய் வந்து அந்த மண்டபத்திலே யிறங்கினதாகவும் அந்த சாடை அப்துல் ரயிமான் கான் கண்டுதான் வெள்ளைக் குதிரையின் பேரிலேறிக்கொண்டு பத்துப் பனிரெண்டு குதிரை சுவார்களுடனே பிறப்பட்டு வஞ்சனை யாய் அன்னூறு குதிரை சுவார்களையும் யிரண்டாயிரம் சிப்பாயி களையும் ஒரு வாய்க்கால் மறவிலே மூணு பவுன்சாய் வைத்துப் போட்டு வரச்சே இந்த வஞ்சனை அசனுதிகான் அறியாமல் அவனுக்கெதிராகப்போய் அவன் பிறகாலே வந்துப் பத்துப் பனிரெண்டு குதிரைக் காறர்களை துப்பாக்கிகளினாலே சுட்டுப் போட்டதாகவும் அதின்பேரிலே மறவிலேயிருந்த மமுதல்லிக்கான் தானுக்கு அன்னூறு குதிரை சுவார்கள் இரண்டாயிரம் சிப்பாயி களும் வெளியே வந்து அசனுதிகான் பேரிலேயுமவன் பிறகாலே போன நூறு நூத்தன்பது குதிரை சுவார்கள் பேரிலேயும் துப்பாக்கிகளினாலே சுட்டு நல்ல சண்டை குடுத்ததாகவும் அசனுத்திக்கானும் நல்ல சண்டை கொடுத்த விடத்தில் யிவர்கள் நூறு நூத்தன்பது சுவார்களிலேயும் நாற்பது அன்பது குதிரை சுவார்கள் சண்டையிலே அறுதிபாய் விழுந்து போனதாகவும் அவர்களிலேயும் விஸ்தாரமாய் விழுந்ததாப் போலேயும் அந்தச் சேதி யிவர்கள் மொறசாக்காறர் கண்டு முன்னூறு பேர் சிப்பாயிகள் போய் அசனுதிக்கானுக்கு மத்தத்துவானுப்போலே யுமப்பால் சந்தாசாயபு முசியே லசு ஆலமுகான் வகையராக்கள் கேட்டு சந்தா சாயபு அன்னூரு குதிரை சுவார்களையும் ஆலமுகான் முன்னூறு குதிரை சுவார்களையும் முசியே லாசு சிறிது பேர் வெள்ளைக்காறர் சிப்பாயிகளுடனே ரெண்டு பீரங்கியும் கொண்டு கொண்டுயிந்த பவுன்சுடனே பிறப்பட்டுப்போய் அசனுதிக் கானுக்கு மத்தத்து ஒத்தி மமுதல்லிக்கான் பவுன்சுடனே நல்ல சண்டை கொடுத்ததாகவும் யிதுக்கு முன்பாகத்தானே அவர்கள் கோட்டை புருசுகளின் பேரிலேயிருக்கிற யிருபது பீரங்கியிலே ரெட்டை குண்டுகள் போட்டு கெடிச்சு தயாராயிருந்து யிவர்கள் பவுன்சும் பேரிலே சுட்டமாத்திரத்திலே யிவர்கள் பவுன்சிலே பத்துப் பனிரெண்டு சொலுதாதுகளும் கொஞ்சம் சிப்பாயிகள் வகையிராக்களுக்கு சாவும் கொஞ்சம் பேருக்கு காயமும் ஆச்சுதுயென்றும் அவர்களிலேயும் விஸ்தாரமாய் சாவும் காயமும்

ஆச்சுதென்றும் அந்த மட்டிலே யிவர்களும் பின்வாங்கிப் போனதாகவும்நம் முடவர்களும் பிறப்பட்டு முன்னிருந்த மொறசாவிட்டுப் போட்டு சந்தாசாயபு லஸ்க்கோர் வந்து சேர்ந்தார்களென்று எழுதி வந்ததாய் கிஷ்ணராயன் வந்து சொன்னான்.

இதல்லாமல் காஞ்சிபுரம் யிங்கிரேசுக்காறர் கட்டிக் கொண்டார்களென்றும் அவ்விடத்திலேயிருந்த சயிது அசாம் முதலான பேர் பிறப்பிட்டு செங்கல்ப்பட்டு வந்து சேர்ந்தார்கள் யென்கிற சமாச்சாரம் பாப்பய்யப் பிள்ளைக்கு வந்து அவன் போய் துரைக்குச் சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது பாப்பய்யப்பிள்ளையுங் கேசவராயனும் துரையவர்கள் சமாகறுசு கணக்கு கொண்டு வரச் சொல்லி முந்தாம் நாள் நாம் நேத்தும் யில் றைக்கும் பெகுசாய் தாக்கீதாய் கண்டிப்பாய் சொன்னது மல்லாமல் டிக்கப் போறமட்டுக்கும் வந்து தென்றும் சொன்னார்களினிமேல் யென்ன நடக்குதோ அரியவேண்டியது.

## 1752௵ சனேரிமீ 1௨ பிதசோத்பதி௵ மார்க்ழிமீ 21௨ சனிவாரம்

இத்தனாள் யிராசந்துக்கான் சாத்துக்கடையிலிருந்து துரைக்கெழுதின காகிதத்தில் ஆற்காட்டு மேலே வந்து சண்டை பண்ண புசங்கரராயன் வகையரா மராட்டிய பவுன்சுகள் கனமைமேலே யேறிப் போகுது இன்ன விடத்துக்குப் போறார்களென்கிற கபுறு தாக்கீத்தாய் வந்தவுடனே எழுதி யனுப்பி வைக்கிறோம் என்று எழுதினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

மராட்டியர் இந்த சீர்மையை விட்டுப்போனது குடிப்படைகள் போய் மறுபடி அந்தந்தக்கிராமங்களைப் போயிச்சேருவார்கள்.

இத்தனாள் நடந்த சேதி அதிசெயமென்ன வென்றால் கோவனத்திலே யிருந்து முன்னாலே தொப்பை முதலி மகன் அருணசலம் யென்கிறவன் வீரமராசா பிரகாலே அம்மாளவர்கள் உத்தாரத்தின் பேரிலே போயிறந்தவன் வீரமராசர் மணிமங்கலத்துக்குப் போயிருந்தவிடத்திலே சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன் மல்லுராசர் யிவர்களண்டைக்கு வைக்கீலுகளை அனுப்பிவைத்து காகித பத்திரங்களெழுதி அனுப்பி ஒன்றுக்கொன்று அனுகூலமாய் வீரமராசா இங்கிலீசுக்காறருக்கு உபராலாய் நடத்துகிறானென்றும் இப்படியாக அம்மாள் அவர்களுக்கும் நமக்கும் யெழுதியனுப்பிவைத்திருந்தான். இந்த சேதி முசியே பிளாமும் துரையவர்களுக்கு யெழுதி அனுப்பி வைத்திருந்தான். அதின்பேரிலே முசியேபிளாமுக கெழுதியனுப்பி வீரமராசாவை உபாயமாய் கோவனத்திற்கு அழைப்பிச்சு பிடிச்சு இவ்விடத்துக்கு அனுப்பிவிடச்சொல்லி எழுதியிருந்தார்கள் அப்படியிருக்கச்சே முசியே பிளாமுக்கும் முசியே மிலோமுக்கும் ஒருத்தருக்கொருத்தர் ஆகாமலிருக்கிற படியினாலே இது சந்து கட்டென்று யோசனைபண்ணி முசியே மிலோமை ஒரு அபாண்டம்

போட்டான். இப்படி ஒரு அபாண்டம் போட்டோமேயானால் முசியே மிலோமை வூரைவிட்டு யெடுத்து துரத்தி விடுகிறதுமல்லாமல் ஆக்கினை அபராதமும் வருமென்று தானே நினைத்து அவனொரு அடியெடுத்தான் அதென்னவென்றால் வீரமராசர் இங்கிலீசுக்காறருக்கு அனுகூலமா யிருக்கிறபடியினாலே முசியே மிலோமுக்கும் வீரமராசாவுக்கும் ஓலை தாளி நடக்குதென்றும் அதிலே ஒருவோலையைப்பிடிச்சுப் போட்டோ மென்றும் அந்தவோலையை துரையவர்கள் அண்டைக்கு அனுப்பி வைத்ததின் பேரிலே அதை துரையவர்கள் பார்த்துக்கொண்டு மறு படியும் முத்திரை போட்டு முசியே பிளாமண்டைக்கு அனுப்பிவிச்சு முசியே மிலோமின் பேரிலே எமை அழைப்பிச்சு விளங்கச்சொல்லி யெழுதி யனுப்பிவைத்ததாகவும் அந்தப்படி விளங்கத்தக்கதாக முசியே மிலோமையும் அருணாசலத்தையும் ஓலைக்கொண்டு வந்த தலையாரி யையும் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு கோட்டைக்கு வரச்சொல்லி யுமிதல்லாமல் அமுல் தாறர்குடி படைகள் நாட்டார் அவர் யாவரை யும் கூடசாஷ்ஷிவைத்துக் கொண்டு விளங்கவேணுமென்று சொன்ன தின் பேரிலே அருணாசலமென்கிறவன் யோசனை பண்ணி யிதேதோ மடிப்பாயிருக்கு தென்று ஒருத்தருடனேயுஞ் சொல்லாமல்ப்பிறப்பட்டு வந்து விட்டான். அவ்விடத்தில் நடந்த சேதியும் கேழ்கப் போறதுக்கு சமயம் அப்போதே அருணாசலம் மென்கிறவன் சொல்லாமல் பிறப்பட்டு வந்து விட்டானென்று. முசியே மிலோமும் நமக்கு யெழுதியனுப்பி விச்சான். அதின் பேரிலே அருணாசல மென்கிறவன் இவ்விடத்துக்கு வந்தவுடனே எனச்சியப்பனை அனுப்பி அவனென்ன சொல்லுறான் அதை விஸ்தாரமாய்த் தெரிந்து கொண்டு வாயென்று சொல்லியனுப் பினேன் அவன் போய் அருணாசலத்தைக் கண்டு பேசி யிவ்வடத்திலே அருணாசலஞ் சொன்ன வாய்விசேஷம் ஆதியிலே வீரமராசாவை விடுதலைபண்ணி அனுப்புறபோர்து அம்மாளண்டையிருக்கிற கிருஸ்துனா யென்கிற சட்டைக் காறச்சிக்கி இறநூறுரூபாய் கொர்டுத்து அவள் முகாந்திரமாய் அம்மாள் பேட்டிப்பண்ணிக் கொண்டு அனுப்பிவிச்சுக் கொண்டு போறபோது என்னைத்தங்கள் பிறகே கூட்டி யனுப்பச் சொல்லி அம்மாளவர்களுடனே சொன்னதின் பேரிலே அம்மாளவர்கள் என்னைக் கூட்டிப்போகச் சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள் அந்தப் படிக்கி வீரமராசா பிறகே தானே போனேன். அவ்விடத்துக்குப் போன விடத்திலே அவனுடைய பொல்லாத நினைப்பைக் கண்டு இங்கிலீசுக் காறருக் கனுகூலமாய் நடத்துகிறதையும் பார்த்து யினிமேல் நாமி விடத்திலே யிருந்தால் நம்மைக்கூட மோசம் பண்ணிவிடப் போறான் யென்கிறதினாலே பயந்து நான் கோவணத்துக்கு வந்து விட்டேன். அப்படியிருக்கச்சே முசியே பிளாமுக்கும் முசியே மிலோமுக்கும் ஆகாமலிருக்கிறதை தொட்டு முசியே பிளாம் மிசியே மிலோமின் பேரிலே ஒரு அபாண்டம் போட நினைத்தான். அதெப்படி யென்றால் ஒரு ஓலையொன்று தப்புவோலையாயெழுதி அந்த வோலை மேல் விலாசம் போடாமல் க்கட்டி அதுக்கொரு சீட்டொன்றெழுதி அந்த சீட்டிலே தலையாரிக்கும் வீரமராசா அரியானவாக்காட்டின காரியம் இந்த வோலையைக் கொண்டு போய் இரண்டாம்பேர் அரியாமல் முசியே மிலோம் கையில் கொடுக்கவும் இரண்டாம்பேர் அறிந்தால் தலையை வெட்டிப் போடுவேன் யென்றெழுதியிருந்ததாகவும் அந்த வோலையைக் கொண்டு வந்த சேவுகன் [illegible] கையிற் கொடுத்து இது யாருக்கு யெழுதி[illegible] பாரும்





யென்று தலையாரி யெங்கேயிருக்கிற தென்றுங்கேட்டவுடனே நான் புத்திமயங்கி யெனக் கொன்றுந்தெரியாமல் மெய்யென்று தானே அந்த வேலையைப் பிடித்துக் கொண்டு போய் முசியே பிளாங்கையிற் கொடுத்தேன். அதை அவர்வாங்கி வாசித்துப்பார்த்து அந்தப்படிக்கு ஒரு பிறதி யென்னை எழுதச் சொல்லி வாங்கிக் கட்டி துரையவர்களுக்கனுப்பிவிட்டான். அதின் பேரிலே இவ்விடத்திலேயிருந்து மறுபடியும் முத்திரை போட்டு அவ்விடத்துக்கு வந்து விளங்க என்வாயினலேவுண்டு பண்ணி எழுதத்தக்கதாக அனுப்பித்ததாகவும் மடிப்பு பண்ணிவைக்க நினைத்தான். அது அறிஞ்சு நான் பிறப்பட்டுவந்து விட்டேனென்றும் முசியே பிளாமிப்படி அபாண்டம் போட்டானே என்றும் அந்தவோலை யிவடத்துக்கு வந்தவுடனே துரையவர்கள் பார்த்துக் கொண்டவுடனே அம்மாளவர்களை அழைப்பித்து பார்த்தயா முசியே மீலோமிப்பிடி வீரமராசாவுக்கு உள்க்கையாயிருந்து இங்கிலீசுக்காரகளுக்கு அனுகூலமாய் நடந்துகிருன். அந்த வோலை வந்தது. பாத்தியாவென்று ரெம்பவும் கோபித்துக் கொண்டதுக்கு உத்தரவு முசியே மிலாம்— வீரமராசாவுக்கு யெழுதியனுப்பிவிச்சு பெத்துனயக்கனையும் மல்லுராசாவையும் நம்முடைய மனுஷராகத்தக்கதாக அவன் யெழுதி அனுப்பிவிச்சான். அதுக்கு நமக்கு ஆகிறகாரியமும் தெரியாது அவனை அனுப்பிவிடச் சொல்லியெழுதிப்போடுமென்று மார்க்கமாய்ச் சொன்னுளாம் அந்தப்படிக்குத்தானே என்னை வரச்சொல்லி யெழுதிப்போட்டார்கள் நானும் பிறப்பட்டு வந்து விட்டேன் என்னை வீட்டிலேதானே யிருக்கச்சொல்லியும் நானெப்போ அழைச்சனுப்புகிறேனே அப்போ வந்து கண்டு பேசென்று சொன்னுள். அந்த மட்டிலே வீட்டிலேதானேயிருக்கிறேன் நான்போய் அம்மாளைக்கண்டு பேசச்சே அதுகளெல்லாம் வயணமாய்ச் சொல்லிப்போடுகிறேன் யென்று சொன்னுனென்று எனச்சியப்பன் வந்து சொன்னுன்.

## 1752-ளு சனேரிமீ பிறசோத்பதிளு மார்கழிமீ 22உ ஆதிவாரம்

இத்தனுள் காலத்தாலே———————— கும்பினீர் வற்த்தகர் சனேரி பண்டிகை சந்திப்புக்கு வந்து கண்டுகொள்வார்களென்று சொன்னேன். இதுக்குமுன் நேத்து முந்தாம்நாள் இந்தபண்டிகை பேட்டி சம்மதிக்கி வற்த்தகர் முசியே திலாஷசுடனே என்னென்னமோ சொல்லிக்கொண் அவனையுங்கூட துறையவர்களண்டையிலே வந்திருக்க வேணுமென்று சொல்லிக்கொண்டதினலே அவனும் அதுக்கு முன்பாகத்தானே வந்திருந்தான், இதிலே கும்பினீர் வற்த்தகர்களும் துரையவர்கள் பேட்டிக்கு வந்து நதிர் வைத்தார்கள். அந்த நதீரை வாங்கிக் கொண்டு வற்த்தகருக்குச் சந்தனம் பன்னீர் பாக்கு வெத்திலை கொடுக்கச் சொன்னுர்கள். அந்தப்படிக்கு கொண்டு வந்து கொடுக்க வற்த்தகர்கள் வாங்கிக்கொண்டு முசே திலார்சுமாரிபத்திலே வற்த்தகர் துரையவர்ளுடனே ஒரு மனு யிருக்குது யென்று சொல்லிக் கொண்ட விபரமென்ன வென்முல் வில்லியநெல்லூர்க் கோவிலைக் கோட்டையாக்கி கொத்தளங்கள் போடுவிக்குறு மென்று சொன்னீர்களே அப்படிச்செய்தால் அவ்விடத்திலே செனங்கள் வந்து சேர்ந்து மாமூருகிறது பிறயாசமாயிருக்கும் அப்படி

நடப்பிக்கலாகாது அவ்விடத்திலேதானே சின்னகோட்டையாய்ப் போடுவிக்குரோமென்று சொல்லியிருக்கிறீர்களே அந்தப்படிக்குத் தெயவுபண்ணி சிலவுக்கு குடுத்து நடப்பிக்க வேணுமென்று கேட்டுக் கொண்டதுக்கு—துரையவர்கள் சொன்னது கோயிலைக்கோட்டை செய்தால் பின்னையும் பத்திரமேயல்லாமல் மத்தப்படி அல்லவே உள்பிரகாரமட்டுக்கும் உங்களுடைய சஞ்சாரம் யிருந்தால் இப்பால் வெளிப்பிறகாரம் அதிலே சொலுதாதுகள் சிப்பாயிகள் இருக்கலா மென்று சொல்ல பின்னையுமிவர்கள் மனுவாய்க்கேட்டுக்கொள்ள அப்பால் துரையவர்கள் நல்லதென்று வெளியிலே ஒரு சின்ன கோட்டையும் கோயில் பிறகாரமும் நீங்கள்தானே கட்டிவியுங்க ளென்று சொன்னுர். நாங்கள் யெங்கே கட்டிவிக்கப்போரோமென்று சொல்ல ஆனுல் நான் கோட்டை போடுவிக்கிறேன் நீங்கள் கோயில் மதில் யெழுப்பி வாசற்படியிலே இரண்டு சுவறு போடுவியுங்கோள் யென்று சொல்ல வற்த்தகர் நல்லதென்றும் சம்மதித்துக்கொண்டார்கள். அப்பால் துரையவர்கள் யென்னைப் பார்த்து என்ன ரங்கப்பா வென்று கேட்டார். அய்யா அப்படிதான் செய்யவேண்டியதென்று சொன்னேன். ஆனுல் சுதாமத்து நடந்தப் பிற்பாடு அந்தப் பிறகாறம் நடவாமல் வெள்ளைக்காறன் மாரிபத்திலே பேட்டியானதினுலேயும் அப்பால் நதிருடனே சேர்ந்ததும் யெப்போதையும் போலே நடவாமல்ப்போனதினுலேயும் துரையவர்கள் மனதிலே குறையா யெண்ணியிருக்கிருரே யல்லாமல் சந்தோஷமா யிருந்ததாய்க்காணவில்லை.

## 1752-ஸு சனேரிமீ 6உ பிறசோத்பதிஸு மார்கழிமீ 26உ குருவாரம்

இத்தனுள் காலத்தாலே பிறபுவண்டைக்குப் போய் சலாம பண்ணிக்கொண்டு வருவோமென்று போனவிடத்திலே அப்போ திரிச்சிராப்பள்ளி தண்டிலே யிருந்து காகிதம் வந்து மதனுந்த பண்டிதன் படித்துச்சொல்ல மதாம் துரையவர்களுக்கு காகிதம் மத்த லப்பு சொல்லிக்கொண்டிருந்தபடியினுலே வெளிச்சாலையிலேயிருந்தேன்—அப்பால் துரையவர்கள்—பிஸப்பு வந்தாரென்று நடுசாலையிலே வந்தார். மதாம் தன் காம்பிருவிலே போர்னுள். மதனுந்தபண்டிதன் வெளியே வந்தான். அப்பால் மதாமை அழைப்பித்து பிஸப்பு அண்டையிலே பேசிக்கொண்டிருக்கச்சொல்லிப்போட்டு இவர் முன் சாலையிலே நானிருக்கிறயிடத்துக்கு வந்து அப்போ மதனுந்தபண்டிதனென் கிட்ட நின்றுகொண்டான். அப்போ வந்து யிப்போ சந்தாசாயபு எழுதினகாயிதம் மந்தலப்பு மயிசூரார் ராசாவினுடையதளவாய் செத்துப்போனுனென்றும் யிருபது யிருபத்தஞ்சு நாள் மட்டுக்கும் வெளிவிடாமல் பத்திரம்பண்ணிவிச்சு அப்பால் காந்தப்பரார்சா வென்கிறவன் முன் தளக்கறத்தனம் பண்ணவனும் அவனைப்பட்டங் கட்டிவிச்சு வெளிக்கு பத்து பதினஞ்சு நாள் மட்டுக்கும் சொல் பிறக்காமல் அடங்கியிருந்து அப்பால் சேதி வெளியாக்கினுர்கள் யென்றும் யிப்போ நந்திரர்சா வென்கிற சறுவாதிகாறம் பண்ணுகிறவன் கருவூரிலே வந்திருக்கிருனென்கிருர்கள்ளே. மயிசூர் ராசாவினுடைய தளவாய் தம்பி அல்லவென்றும் இப்போ தளக்கர்த்தர் உத்தியோகத்துக்கு வைத்த காந்தப்பராசா வென்கிறவனுக்கும் சந்தாசாயபுக்கும் பெகுசினேக மென்றும்

யெழுதி வந்தது இப்படி இரண்டு மாதமாய் தளவாய் செத்துப் போனது சேதி எழுதி வந்திருக்கச்சேயும் அவர்கள் வைக்கீலாகியாய் வந்திருக்கிற குச்சிராத்தி வந்தகன் செத்தது பரிச்சேதம் பொய்யென்று சொன்னுனே பொல்லாத நாய் இவன் பெரிய திருடன் பொல்லாத மனத்தையுடையவன் இவன் மறைத்தாப்போல் செத்தவனெழுந்திருந்து வருவானு சொல்லென்று கேட்டார். அவன் சொல்லுகிற தாலுல் நானும் மெய்யென்று சொன்னுல் இனிமேலிந்தப் பேச்சு பொய்யாமே.

### 1752வரு சனேரிமீ 31வ பிறசோத்பதிவரு தைமீ 21வ சோமவாரம்.

இத்தனுள் மதாம் துப்பிளேயிக்சு துரையவர்களுடனே சொல்லி மயிசூர் வைக்கில் நரசிங்கதாசையும் இவ்விடத்து வைக்கிலாய் மச்சிலி பந்தர் கானுகோ நறசிங்கராயனேயும் பயணம் பண்ணி மயிசூர் ராசா வினுடைய சபைக்கும் போய் அவர்கள் மமுதலிகானுக்கு மத்தத்துப் பண்ணுமல் இவர்களுக்கு மத்தத்துப் பண்ணத்தக்கதாக திட்டமாய்ச் சொல்லி காகிதப்பத்திரங்களும் யெழுதிக்குடுத்து பெகுமதியுங் குடுத்து கூடப்போற நரசிங்கராயனுக்கும் அறநூறு ரூபாய் சிலவுக்கு குடுத்து சிப்பாயிகளை கும்பினீர் சேவுகர்களேயும் டயினுத்து கொடுத்து பல்லக்கும் குடுத்து அனுப்பிவிச்சார்கள்.

### 1752வரு பிப்ரவரிமீ 12வ பிறசோத்பதிவரு மாசிமீ 4வ சனிவாரம்

இத்தனுள் காலத்தாலே ——— ஆனந்தறங்கப்பன் துரைக்கு நதீர் வைத்துது. இருபத்தொருவிராகன் மதாம் துப்பிளேயிக்சுக்குப் பதினேரு விராகன் வைத்தது. கும்பினீர் வற்த்தகர் நாற்பத்தி நாலு விராகன் துரைக்கும் மதாமுக்கு பதினேரு விராகனும் மதனுந்த பண்டிதன் வகையரு மத்தப்பேரெல்லாம் துரைக்கும் மதாமுக்கும் அவ்வஞ்சுரூபா நதீர்வைத்து முபாரகு பாதி சொன்னபோது, தன்மகன் முசியே லெஸ்சாம் ஒருத்தனும் இரண்டாயிரத்தனூரு பேர்கள் முவாயிரம் பேர்களே வெட்டினுன். மத்தப்பேர் முசியே புசி முசியே கெஷாம் அவர்கள் பெரியத்தனம் பண்ணினுர்கள் யென்றும் தன் மகன் ஒருத்தனுல் நாளுவுடைய தண்டு முறிஞ்சு ஓடிப்போய் கடைசி மட்டுக்குப் அனுப்பிவிச்சுக் கொண்டு வருகிறமட்டுக்கும் தன் மகன் சவுரிய பராக்கிறமமே வற்ணிச்சு சொன்னுன். அப்பால் அவரவர் அதுக்குத்தக்காப் போலே முகத்துக்கு முன்னே முகப்போதாவாய் சொல்லிப் போட்டுவந்தோம்.

### 1752வரு பிப்றவரிமீ 13வ பிறசோத்பதிவரு மாசி 5வ ஆதிவாரம்

இத்தனுள் காலத்தாலேதுரையவர்கள் கோயிலுக்குப் போய் வந்தவுடனே போய் சந்திச்சு ஆசாரம் பண்ணி வூர்க்கபுறுகள் தானியக் கபுறுகள் வகையறு சொல்லி ஆன பிறபாடு துரையவர்கள் நம்முடைய

றசாசாயபுவகையரு நம்முடைய பவுன்சுகள் சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப்போனுர்களே பூந்தமல்லி சீரமைவகையிரு மயிலாப்பூர் உள்பட பறங்கிமலே பெரியமலே சின்னமலே வகையரு கொள்ளேயிட்டவர்களுக்கு விஸ்தாரமாய் தினிசுகள் தானியங்கள் மாடுகள் வகையரு அகப்பட்டதெல்லாம் அங்கங்கேதானே சரிப்போன படிக்கெல்லாம் வித்துப்போடுகிறுர்களாம். ஆனுல்நம்முடையவர்களுக்கு கொள்ளே நன்ருய் வாய்க்குது. ஒவ்வொருத்தன் கூலிக்காறன் கூட ஆஸ்திக்காறனுக சுகப்பட்டார்கள் யென்று யிது முதலான பேச்சுகள் சொன்னுர் அதின்பேரிலே சயிதாபேட்டையென்று சென்னப்பட்டணத் துக்கு நாலு நாழிகை வழியிலேயிருக்கிறது அதிலே வெகுபேர் வற்த்தகர்கள் ஆஸ்திகாறர்களாக யிருந்தார்கள். அவர்களுது மிகுதியும் சேதமென்றும் சொல்லிக்கொண்டார்கள் இதல்லாமல் குன்னத்தூ ரென்று அதுக்கு இரண்டாந்தரம் அதுவுங் கொள்ளேபோச்சுது சென்னப் பட்டணத்துக்கு ஆபறணம் போனபடியினுலே சென்னப்பட்டணத்து வற்த்தகர் பெகுபேர் திரவியங்கள் கோட்டையிலே கொண்டு போய் வைத்தவர்களும் பழவேற்காட்டை அனுப்பிவிச்சவர்களும்சிறிதுபேர்கள் தினிசுகூட அனிப்பிவைத்தவர்களும் குடிபோனவர்களும் சதுறங்க பட்டணம் வந்து சேர்ந்தவர்களுமானுர்கள். மத்தப்பேரிருக்கிறவர் களுக்கும் முன் ஒருதரம் சூடுண்டவர்களான படியினுலே பழையகதை யாய் வந்து எங்கே சம்பவிக்குதோ வென்று தாமறையிலேயிலே யிருக்கிற சலம் மூலேக்கு மூலே ஆதரவன்னியிலே ஓடிதளும்புகிறுப் போலே சனங்களும் அலேயுறுர்களென்று சொல்லி இந்த வேளேயிலே கோவளத்திலேயிருக்கிற முசியே பிளாம்—சத்தே விவேகியாயி சனங்களே ஆதரிக்க வல்லமையுண்டானுல் பெகு சனங்கள் சென்ன பட்டணம் மயிலாப்பூர் சேர்வார்கள். யிவன் யிருக்கிறபோகளுக்கு நடத்துகிற உபத்திரவம்தைத்தொட்டு வருகிறபேர்களும் பயஞ்செனிச்சு பழவேர்க்காடும் சதுரங்கப் பட்டணமும் போய்ச் சேருகிறுர்கள் யென்று சொன்னேன். மெயிதான் நல்லதென்று சமயம் பார்த்து வாங்கிப்போட்டு வேறே அனுப்பி விப்போ மென்று சொன்னுர். அப்பால் திரிச்சிராப்பள்ளி சேதி யென்ன வென்று கேட்டார். மயிசூர் ராசா தளவாய் தம்பி நந்திராசா வென்கிறவன் முராரிராயன் வகை யிராக்கள் வகையரா. பவுன்சு பந்துபஸ்து பண்ணிக்கொண்டு கருஊரிலே யிறங்கி யிருந்தவர்கள் மமுதல்லிக்கானுக்கு மந்தத்தாய் ஆறு ஆயிரங் குதிரையும் யிருபது முப்பதுனுயிரம் ஹோமத்துடனே திரிச்சிராப்பள்ளிக் கோட்டையிலே வந்து சேர்ந்தார்கள் யென்றும் றஸ்துகளுங்கூட கொண்டுவந்து சேர்த்தார்கள் யென்றும் சொல்லிக்கொள்ளுகிறுர்கள் யென்றும் சொன்னதுக்கு மெயிதான் மயிசூரார் ஒத்திகை யில்லாமல் போனுல் இத்தனேநாள் மமுதல்லி கானிருந்தயிடம் தெரியாமல் போயிவிடுவான் யென்றும் சொன்னுர். அது மெயிதான் சொல்லச்சே கபினேத்திலே யெழுதப்போனுர். நான் காசாக்கச்சேரியே வந்தேன் தெய்வத்து வல்லமையே அல்லா மல் மனுஷர்—வல்லமை கவைக்கு வராது. நாசறுசங்குவைப் போலேக் கொத்த—தக்கன் (Deccan) பாதுசா பட்டுப்போன விடத்திலே ஒரு மமுதல்லிக்கான் மிஸ்க்கீனுயிருந்து சண்டை ஒரு வருஷம் பண்ணத்தக்கினவன் ஆனபடியினுலே தெய்வபலனேபெலன் அல்லாமல் மனுஷர்கள் யெத்தனே பலவந்தமாயிருந்தாலும் கவைக்கு வராதென்று சமஸ்த்த செனங்களுக்கும் சுவாமி திஷட்டாந்திரங்காண்பிக்கிறார்.

1752௵ மாயுமீ 12௳ ஆங்கிரசு௵ வையாசிமீ 3௳
சுக்கிறவாரம்

இத்தனுள் காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் சொன்னது கோசா நேமத்துல்லாகானும் – முசபர்கானும் பாரிபவுன்சுடனே கந்தனூர் வந்து சேர்ந்தார்கள். இவ்விடத்துக்கு வருகிறார்களென்று இப்போ மூணு சோடா வந்தது என்று சொல்லி யங்கேயிருந்து வந்த பிறான்சுக் காகிதங்கள் பாரிசுக் காகிதங்கள் முதலானதுகளை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நான் காசாக்கச்சேரியே வந்தேன். காசிதாசுபுக்கன்சி குமாஸ்தா ஆசாரம் தறுவாடி வந்து எங்கள் மனுஷர்கள் தாமே காகிதம் – சலாபத்து சங்கு லசுக்கரிலே யிருந்தும் கொண்டுவந்தார்கள். இவர்கள் பிறப்பட்ட இருபத்தோராம் நாள் வந்திவடஞ் சேர்ந்தார்கள் யென்று சொன்னான். சலாபத்துசங்கு யெங்கே யிருக்கிறார் அவர் பவுன்சு யெங்கே யிருக்குது யென்று கேட்டதுக்கு தறுவாடி சொன்னது பாலக்கியென்று அயிதராபாத்துக்கு அப்பாலே நாற்பது கோசுவுண்டு அங்கே நாசறுசங்கு தமபி சலாபத்துசங்கு பவுன்சும் சலாபத்து சங்கும் யிருக்கிறார்கள். யிப்போது அவ்விடம் மழைக்காலம் ஆனபடியினாலே அயிதராபத்திலே சாவணி பண்ணுவார்கள் போலே காணுதென்று சொன்னதுமல்லாமல் கோசா நேமத்துல்லா கானுக்கு ஆற்காடு சுபா குடுத்து கந்தனூரிலே கலகம் பண்ணிக் கொண்டிருக்கிற மூனவர்க்கான் பட்டாணிகள் வகையராக்களை தம்பி போசாயிச்சு அப்பால் ஆற்காட்டுக்குப் போயங்கே இங்கிலீசுக்காறர்கள் மமுதல்லிக்கான் மயிசூரார் வகையிராக்கள் கலகம் பண்ணிக்கொண்டிருக்கிறத்தையும் நிவாறணம் பண்ணி ஆற்காட்டு சுபாகட்டி புதுச்சேரி சென்றுலவர்கள் சொன்னபடி கேட்டு நடந்துக்கொள்ளச் சொல்லி சலாபத்துசங்கு யனுப்பினார் கோசா–நேமத்துல்லாக்கான் அய்யாயிரம் சுவார்களுடனேயும் முசபர்கான் ஆயிரம் குவாடுதிகளும் முன்னூறு சுவார்களுடனேயும் வந்து கிஷ்ணா நதிக்கு யிப்புறம் இருக்கிற கதவால் என்கிற பட்டணம் வந்துசேர்ந்தார்கள் கதவாலுக்கும் கந்தனூருக்குற நாற்காதவழியுண்டு அங்கே யிருந்தும் கந்தனூரண்டையிலிறங்கி யிருக்கிற மூனவர்கான் பட்டாணிகள் வகையராபேரிலே வந்து மோறசா போட்டு சண்டை பண்ணுகிற அவசரமாயிருக்கச்சே யெங்கள் மனுஷர் பிறப்பட்டு வந்து விட்டார்கள் என்று மினிமேல் அவர்களுக்கும் யிவாகளுக்கும் சண்டையாயி அவர்களை முறிய அடிச்சு அவர்கள் வசமாயிருக்கிற சீமைகளைக் கட்டிக்கொண்டு அப்பால் ஆற்காடு வந்து சேருவதாக யிருக்கிறதாகவும் அப்பால் திரிச்சிராப்பள்ளியின் பேரிலேபோயி மமுதல்லிக்கான் பேரிலே சண்டை பண்ணப்போறதாகவும் கோசா நேமத்துல்லாக்கான் சுவல்ப்ப பெலனுடனே வருகிற சேதி மமுதல்லிக்கான் மயிசூரார் இங்கிலீசுக்காறர்களுக்கும் வந்து கோசா நேமத்துல்லாகான் முசபர்கான் வந்தாலும் ஒரு கைபார்க்குறது தானு யென்று யோசனை பண்ணியிருக்குறார்கள் யிதல்லாமல் முசபர்கான் கோசா நேமத்

துல்லாகான் வகையராக்களும் வந்து சீர்மை கப்பல்களும் வந்து அதிலே சிறிது பெலன் வந்து இதுகளதுகளெல்லாம் கூடினலே பிறயாசம் ஸ்ரீரங்கத்திலே யிருக்கிறபேர்களை வோட்டுகிறதென்று இவர்கள் வந்து சேராதத்துக்கு முன்னமேதானே ஸ்ரீரங்கத்திலே யிருக்கிற சந்தாசாயபு வகையரா துலுக்கபவுன்சையும் முசியே லாசு சேக்கசேன் முதலான பிருன்சு பவுன்சையும் புதுச்சேரி கொண்டுபோய்ச் சேத்துப்போடவேணும் அல்லது சரிக்கட்டி யாகிலும் போடவேணும் என்றிப்படி நிஷ்கருஷை பண்ணியிருக் கிறார்கள் என்று அரிசங்கர் தறுவாடி திரிச்சிராப்பள்ளியிலிருக் கிறானே அவனிந்தப்படிக்கியெழுதியனுப்பினனென்றும் யிங்கிரேசுக் காறர் எந்த மட்டுக்கும் விடக்கத்தக்கதில்லை யென்று நிஷகருஷை பண்ணி மமுதல்லிக்கான் ஒரு வேளை சிலவு சித்தாயங்களுக்கு ஒரு வேளை விட்டாலும் கும்பினீர் பணத்தைப்போட்டு சிலவு நடத்துகிறதாகவுமிந்தப்படியவர்கள் கூறுறு பண்ணிக்கொண்டு இந்தமட்டுக்குஞ் துணிஞ்சு நடத்தின பேர்கள் யினிமேலு மென் மேலும் விறுத்தியாய் நடத்துகிறதேயல்லாமல் சறுவாத்துமனுக விடத்தக்கதில்லை. யிதல்லாமல் சலாபத்துசங்கு தாக்கிதுபரவான யிங்கிலீசுக்காறர்களுக்கும் மமுதல்லிக்கானுடனே கூடிக்கொண்டு சலாபம் பண்ணக்கவையில்லை யென்ன யிருக்குது யினிமேல் அப்படி செய்யவேண்டாமென்றும் அதைத்தொட்டுப் பொல்லாப்பு வருமென்றும் எழுதின காகிதத்தைப் படிச்சுப் பார்த்து சப்பாத் தாலே உதைச்சுக் கிழிச்சுப்போட்டு வந்தக் காசிதுகளைகளையுங் காவல் வைத்து துரத்திவிட்டார்கள். யிதல்லாமல் சலாபத்துசங்கு சைக்கர் சமாச்சாரம் ஆனல் நிசாம் நாசறுசங்கு வைத்தக் கசான வெல்லாம் சரியாயிப்போச்சுது யெவ்வடத்து தஸ்த்து அவடத்திலே பந்தாயிருக்கிற படியினலேயுஞ் சிலவு விஸ்தாரமானபடியினலே யுஞ் சிலவு நிசாம் கசான சிறிது நாசறுசங்கு பெண்சாதி பிள்ளைகளைச் சேந்தும் பாதுசா யிப்பங்கியாயி கீழுக்கிறங்கித தவுலத்து நாளுக்குநாள் குறைஞ்சு வருகிறபடியினலேயும் காசுதின்கான் அவரவருக்கு சலாபத்சங்குவை தக்கன (Deccan) சுபாதாறர் — அன்று அறியக்கவையில்லை யென்றும் அவன் பிறருகு துரோகியானவர்களைச் சேர்த்துக் கொண்டு இவனும் துரோகி யானனென்று யவனைச் சரிக்கட்டிப்போட்டு தக்கன் (Deccan) சுபாக் கட்டிக்கொண்டால் பாதுசா பர்வான அனுப்புகிறே மென்றும் பின்னையும் அனேக விதமாயெழுதுகிற படியினலேயும் அங்கங்கே யிருக்கிற கசானயிவர் கைக்கு அகப்பட்டாலும் அவரவர் கில்லேதாறர வகையருக்கள் கொடுக்கிற பேஸ்க்கஷ்குடாமலும் பணத்துக்கு வெகு கடிசையாயிருக்குது. அதைத் தொட்டு சிலவு களுக்கு கொடுக்கிறதுக்கு யில்லாததைத் தொட்டு சிப்பாய்கள் வெள்ளைக்காறர்கள் தங்கா பண்ணுகிறார்களென்றுஞ் சவா பா சிருயன் பேரிலே சண்டைககுப்போனபோது ராசாசந்திரசேனன் குமாரன் சண்டை பண்ணமல் பிறமமா னின்ருப்போலேயும் அதினலே சலாபத்துசங்கு ராசா சந்திரசேனன் ராவைப் பாத்துப் பிடிச்சு கையிது பண்ண நினைத்தாப் போலேயும் அதின்பேரிலே

அவனெச்சரிக்கைப்பட்டு சண்டை பண்ணுகிறதுக்கு எத்தனம் பண்ணுப்போலேயும் மத்தியே யிருக்கிறவர்கள் நமக்குள்ளே ஒன்றுக்கொன்று சண்டைப்பட்டால் காரியங்கெட்டுப்போமென்று சமாதானம் பண்ணி அன்னேர்த்துக்கு சண்டை பண்ணாமல் நிறுத்திப்போட்டாலும் நாளது வரைக்கும் மனதிலே குரோதமும் வெளிக்கு சமாதானமுமாக யிருக்கிறார்களிதல்லாமல் பாசிராய னுடனே சமாதானம் பண்ணிக்கொண்டபோது அவனிவர்கள் கையில் வாங்கின நாற்பதுலக்ஷம் அன்பதுலக்ஷம் மறுபடிக்குப் குடுக்க உடம்படிக்கையென்று சொன்னது மாத்திரமேயல்லாமல் பாசிராயன் ஒருபலைகரை அளவிலே கொடுத்ததில்லை யென்று மிப்போ யங்கேயிருந்தாலும் பாதுசாவுக்குப் பட்டாணியரைத் தொட்டுயிருக்கிற இக்கட்டுக்கு அழைச்சனுப்பினால் டில்லிக்குப் போகவேண்டியிருக்கும் அல்லது பாசிராயன் தளங்கூட்டிக் கொண்டுவந்து சண்டை பண்ணினால் முன்னையைப்போலே நிறுவாகத்துக்கு வரமாட்டாதென்கிறதைத் தொட்டும் சிலவுக்கு மில்லாத பிக்கிரைத் தொட்டும் கோல்கொண்டையிலே வந்தும் மழைகாலத்துக்குச் சாவணிபண்ணுகிறதாய் பிறப்பட்டு அபறங் காபாத்துக்கு தெற்கு கோல்கொண்டாக்கு வடக்கு பதிங்காத வழியிலே பாலங்கியென்கிற சகா—அதினுடைய சீமையும் ராசாசந்திரசேன் குமாரன் ராமச்சந்திர ராவுடைய சாகீர்—ஆன படியினாலே யங்கேவந்து யிறங்கி அங்கே ராமச்சந்திரராவைச் சமாதானம் பண்ணிப்போட்டு அங்கேயிருந்தும் கோல்கொண் டைக்கு வருகிறதாகவும் டில்லியிலே கமராத்திங்கான் குமாரன் மீரமுனுவையும் பட்டாணியர்களை வெட்டிப்போட்டு பட்டாணியர் கள் பண்ணுகிற சோறு சொல்லப்போகாது. டில்லியிலே சொல்லிக் கொள்ளுகிறதானால் யித்தனை நாளும் டில்லி தக்குத்து மொகுலரு தாயிருந்துதே இனிப்பட்டாணியர்களுதாகுமென்று வெகுசனங்கள் பேசிக்கொள்ளுகிறார்கள் டில்லி முதலான சீமையெல்லாம் அதலகுதலமாயிருக்கிறபடியினாலே எதாகிலும் நூதனமாய்க்கெதி நடக்குமேயல்லாமல் மொகலருக்குள்ளே செகத்தேசாகிக்கு ஆங்காட்டுது தக்கது. நடந்து வந்தது. யினிமேல் பட்டாணிகளுக்கு நடக்கப்போகுதென்றும் அப்பால் யிந்துஸ்தான் ராசாக்கள் உதயபூரராணு முதலான ராசாக்களுதாகுதோ வென்று பேசிக் கொள்ளுகிறார்கள் யென்று ஆசாரம் தறுவாடி. சொல்லிப்போட்டு நாளையதினம் வருகிறேனென்று சொல்லிப்போட்டு போனான்.

இத்தனாள் பகலைக்கு மேலாக துரையவர்களழைச்சனுப்பிவீச்சு முசே தொத்தேல் ஊத்தட்டுரிலே ஊட்டத்தூரிலேயிருந்து எழுதின காகிதத்திலே மருட்டியர்களும் மயிசூராருக்கும் மமுதல்லிக் கானுக்கும் மனது போதாமல் வாங்கிப்போய்விட்டதாயெழுதினான் யென்று சொன்னார் அப்பால் சத்தாவுக்கு பங்காளத்திலிருந்து பிறப்பட்ட ரெண்டு கப்பல்களும் மோசம் தப்பிபோக மாட்டாமல் இவ்விடம் வந்து சேர்ந்ததுக்கு அவர்கள் கொண்டுவந்த அரிசி சர்க்கரை வகையிரா விக்கிறயம் பண்ணிக்குடுத்து யவர்களுக்கு நூறுகேரிசை உப்புவாங்கிக் குடென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

1752௵ மாயுமீ 14௳ ஆங்கிரசஷு வையாசிமீ 5௳ ஆதிவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்டசேதி என்னவென்றால் ஊட்டத்தூரி லேயிருந்து முசே தொத்தேல் பேரிலே மமுதலிக்கான் பவுன்சும் யிங்கிலீசுக்காறர் பவுன்சும் மயிசூராருடைய பவுன்சும் வந்து விழுந்து சண்டை பண்ணுகிறதாயிருந்தாபோலேயும் அதிலே நிறுவாககுல்லாமல் பிறப்பட்டு முசே தொத்தேல் சேக்கு மகம்மது சரீபு வகையரு சறுதார்களும் பவுன்சும் கசானுவும் வாலிகொண்டாபுரம் வந்து சேர்ந்தார்கள் யென்கிற கபுறு கேழ்க்கப்பட்டதுமல்லாமல் ஸ்ரீரங்கத்திலேயிருக்கிற முசே லாசு சந்தாசாயபு வகையிராவும் யிவர்களுடைய பவுன்சுக்கும் சிலவுக்கு மில்லாமல் ரஸ்த்துமில்லாமல் வெகு சங்கடப்படுகிறார்கள் யென்று மிங்கேயிருந்து போனபணம் அவிடம்போயி சேருகிறத்துக்கு யில்லாமலிருக்கிறதினாலேயும் அவ்விடத்திலே கொள்ளையிட்டு கொள்ளையிட்டு தின்றத்தினாலேயுமிருக்கிற சிப்பாயிகளுக்கு மூணுமாசமாயி சிப்பாயிகளுக்கு சுவார்களுக்கும் ஒருகாசு அளவிலே செல்லாத்தினாலே நிறுவாகமில்லாமல் வெகு பேர்கள் சிப்பாயிகளும் சுவார்களும் சத்துருக்களிடமாய் போய் சேர்ந்து போனதினாலேயும் சத்துருக்கள் பெலம் அதிகமுஞ் சந்தாசாயபு பவுன்சுக்கு பெலகீனம் கண்டதுக்கு ஸ்ரீரங்கம் கோயிலிலே யிருக்கிறபடியினாலேயும் இருபுறமும் காவேரி கொள்ளிடம் தண்ணீர் வருகிறபடியினாலேயும் கோயிலிலேயிருக்கிற தானியங்களை சாப்பிட்டுக்கொண்டுயிருக்கிறார்கள் என்றும் கோயிலடியிலே சேக்சே பட்டாணுயிருந்துதே அதைத் துரத்திவிட்டு இங்கிலீசுக்காறர்கள் பட்டாணுவந்து பிறவேசிச் சாப்போலேயும் அங்கேயிருந்தவர்கள் முன்னூறு நானூறு பேர்களுக் குண்டு அதிலே சிறிது பேர்கள் அவர்களிட்மாய்ச் சேர்ந்துப் போனைப் போலேயும் சிறிதுபேர்கள் கவில் வாங்கிக் கொண்டு ஆயுதமாத்திரத் துடனே பிறப்பட்டு புதுச்சேரிக்கு வாரதாயும் சேதி கேழ்க்கப்பட்டுது.

நான் துரையவர்களண்டைக்குப் போய் நாளைதினம் பிடவைப் பாருவை யென்று சொல்லி அப்பால் சென்னப்பட்டணத்திலே யிருக்கிற டெழுத்துப் பிடவை லம்பாசு சீட்டிகள் வகையிரா விட மாட்டமென்று சொல்லி வைத்துக்கொண்டிருக்கிறதுக்கு சறுவ பிரயத்தனமும் பண்ணி ஆயிரம் விராகன் மட்டுக்கும் பரிதானங் கூடப்பேசி யிருக்கிறார்கள் அவர்களும் உத்தாரங் குடுக்கிறோமென்று சொன்னதாய்ச் சேதி வந்ததென்று சொல்லிப்போட்டு யென் காசாகச் சேரியே வந்தேன்.

1752௵ மாயுமீ 15௳ ஆங்கிரசஷு வையாசிமீ 16௳ சோமவாரம்

௸ ஏழாந்தேதி முதல் 15௳ வரையில் யெழுதின தினசரி காகிதங்களும் காணாதே போனபடியினாலே யெழுதப்பட வில்லை அகப்பட்டால் எழுத வேண்டியது.

இத்தனுள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு மதனுந்த பண்டிதனையுமழைப்பிவிச்சு சலாபத்து சங்கு அண்டையிலிருந்து வந்த காகிதத்தைப் படிச்சுச் சொல்லென்று சொன்னுர். அவர் படிக்க நான் யிந்திரபிரேத்தேரிட்டு சொன்னது சலாபத்துசங்கு காகிதத்தில் யெழுதியிருந்த வயணமாவது தாங்களனுப்பின காகிதங்கள் வந்து சேர்ந்து வாசித்துக்கொண்டு சகலமுந் தெரியவந்தது. இவ்விடத்திலே ஒரு சமே தாரன் தன் சம்பளங்குடாமல் அறிக்கத்துப்பண்ணினுனென்று ராசாறகுனுததாசை வெட்டிப்போட்டான் அவர் காரியம் அப்படியிருக்குது. தெய்வசங்கல்பத்துக்கு செய்ய வேண்டியது என்ன யிருக்குது அவரிருக்கச்சேயும் உங்களாதரவுதான் அவர் போனுலும் யிப்போ உங்களாதரவுதான் மைத்தப்படி இவ்விடத்து சமாசாரங்களெல்லாம் முசியே புசியெழுதியனுப்பின காகிதத்தின் பேரிலே தெரியவரு மென்றும் என்னை ராத்திரி பகலாய் பத்திரமாய்க் காப்பாத்தச் சொல்லி முசியே புசிக்கும் சேக்குயிபராமுக்கும் எழுதியனுப்ப வேணுமென்றும் யிந்தநவுலத்து தங்களுதென்றும் உபசாரமா யெழுதியனுப்பிவிச்சாரென்று சொன்னதுக்கு பதிலுத்தரம் யெழுதச் சொன்ன வயணம் தாங்களனுப்பின காகிதமும் வந்து சேர்ந்தது அதிலே ராசாறகுனுத தாசுவுக்கு சம்பவிச்சங்கதி முதலானதெழுதி வந்ததெல்லாம் பார்த்துக் கொண்டு மிகுதியும் மனஸ்தாபமாச்சுது. ஆனுல் சுவாமியுடைய சித்தம் ராசாறகுனுததாசுக்கு அந்தப்படிக்கு கத்தியினுலே மறணம் வரசித்து மிருந்தால் மனுஷராலே விலக்கப்போகாதே நடந்து போனகாரியத்துக்கு யினிமேல் செய்யலாவதில்லையே. இப்பவும் அவ்விடத்திலே நடக்க வேண்டியதுகளுக்குயெல்லாம் சகல சும்மதிகளும் முசியே புசிபேருக்கு யெழுதி யனுப்பிவிச்சேன். அவரெப்படி நடந்து கொள்ளச் சொல்லி எழுதியனுப்புவாரோ அந்தப்படிக்கி தப்பாமல் நீர் நடந்து கொண்டால் உம்முடைய காரியம் நீர் நினைத்தப்படி நடக்கும். மைத்தப்படி முசியே புசி சொல்லுகிறதெல்லாம் மகாவுக்த்தமாயிக் கேட்டு மனதிலே வைத்துக்கொண்டு அந்தப்படி நடந்துக் கொள்ளவும் உம்முடைய சரிரத்தையும் உம்முடைய நவுலத்தையும் பத்திரமாய்ப் பார்க்கச்சொல்லி யெப்படியெழுதவேணுமோ அப்படி யெழுதியனுப்பிவிச்சேன். அவர்களும் ராத்திரி பகலாய் சாக்கிறதையாய் உம்முடைய சீவனைக்காப்பாத்திக்கொண்டு வருவார்கள். யென்று திஷ்டியும் என்மனதும் உம்முடபேரிலேதானே யிருக்குதென்று உபசாரமாயெழுதியனுப்பச் சொன்னுர். அந்தபடிக்கு மதனுந்த பண்டிதருடனே சொல்லியெழுதச்சொன்னேன். ராசாறகுனுத தாசுவுக்குப்பதிலாக தீவான்கிரி குடுத்துவைக்கப் போற அப்துல் பக்கர்கான் சாயபு பேருக்கு யெழுதசொன்னேன். அதன் வயணம். இப்பவும் தாம் விசுவாசியென்று மதாம் நிறைமனுஷரென்றும் முன்னுங்கேழ்விப்பட்டிருந்தோம் இப்பவும் முசியே புசியெழுதியனுப்பினதினுலேயும் மிகுதியும் தம்முடபேரிலே பிறீதியுண்டாயி ராசாறகுனுததாசுடைய தீவானகீரிகிசுமத்து தமக்கு நேமிச்சோம். ஆனபடியினுலே தாம் அந்த தீவானகீரி உத்தியோகத்திலே யிருக்கிறமட்டுக்கும் தாமிரண்டு காரியத்திலே சாக்கிறதயாய் நடந்துகொள்ள வேண்டியது. அதுயென்னவென்றுல் ஒரு காரியம் வந்து சலாபத்து சங்கு அவர்கள் காரியத்திலே மணப்பூர்வமாய் விசுவாசமாய் நடந்து கொண்டு வருகிறது. அப்பாலினிமேல் யொருகாரியம் எங்கள் மனிதராயிருந்து எங்கள் காரியம் பார்க்கிறது மல்லாமல் எங்கள் காரியத்திலே முழுமனதுடனே விசுவாசமாய் நடந்துகொள்ள வேண்டியது. ஆகையால்

யிந்த ரெண்டு காரியத்திலேயும் நீர் நன்றாய் நடந்துக் கொண்டால் நீர் எங்களவனாய் யெங்கள் ஆசிராவிலே யிருக்கிற படியினாலே உமக்கு யாதொருகாரியத்துக்கும் சிந்தனை வரத்தக்கதில்லை யுமக்கும் தவுலத்து தாக்கியதாய் வருமென்றும் ராசாறகுனாததாசு யெங்கள் காரியத்திலே நடந்துக் கொண்ட சங்கி தியுமக்குத்தெரியுமே யென்றும் மத்தக்காரிய முதலான அந்தரங்க ளெல்லாம் முசியே புசிக்கு யெழுதனுப்பிவிச்சோம் அவர் சொல்லத் தெரிய வரும் அந்தப்படி நடந்து கொள்ளவும் உம்முட காசா காரியமும் நவாபு சலாபத்து சங்கு காரியமும் நன்றாய் நடக்கு மென்று யெழுதச்சொன்னார். அந்தபடிக்கி மதனாந்த பண்டிதனுடனே சொன்னேன்.

அப்பால் சேக்குயிபராமுக்கு யெழுதச் சொன்ன வயணம் தான னுப்பின காகிதமும் வந்து சேர்ந்தது. ராசாறகுனாததாசுவுக்கு சம்ப விச்ச துர்மறணம் யெழுதினது பார்த்துக்கொண்டுமிகுதியும் மனஸ் தாபமாச்சுது சுவாமியுடைய சித்தமப்படியிருந்தால் செய்யலாவ தென்ன இப்பவும் சலாபத்து சங்குவைப் பத்திரமாய் ராப்பகலாய் காக்கிறது மல்லாமல் முசியே புசியெந்தப்படி நடந்து கொள்ளச் சொல்லி யெழுதுகிறானோ அந்தப்படிக்கி அனுரோனுவையாயிலும் பிசகாமல் நடந்து கொள்ளவும் என்றெழுதச் சொன்னார். அந்தப்படி மதனாந்த பண்டிதனுடனே சொல்லி யெழுதச்சொல்லிப்போட்டு நான் காசாக்கச்சேரியே வந்தேன். அப்பாலெழுதி ஆச்சுதென்று மதனாந்தபண்டிதன் போய் துரையுடனே சொன்னவுடனே துரையென்னை யழைச்சு அனுப்பிவிச்சு அவரைப் படிக்கச்சொல்லி சரிபார்க்கச்சொன்னார். அந்தபடிக்கி கேட்டு முன் சொன்னபடிக்கு துரையுடனே பறங்கி வார்த்தையிலே சொன்னதின் பேரிலே சரிதான் லக்—கோட்டா பண்ணிமொகறுபண்ணி முசே பெடுத்துராம் கையிலே குடென்று சொன்னவுடனே மதனாந்தபண்டிதன் யென் மகளுக்குப் பனி ரெண்டு மணிக்கு முகூர்த்தமானபடியினாலே எனக்கு உத்தரவு கொடுக்கவேணுமென்று கேட்டான். போவென்று சொன்னார் என்னைப் பார்த்து நீயுங்கலியாணத்துக்குப் போகவேணுமோ வென்று கேட்டார். ஆமென்று சொன்னேன். நல்லதுபோ வென்று சொன்னார். அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு காசாக்கச் சேரியேவந்து பனிரெண்டு மணிவேளைக்கு மதனாந்தபண்டிதன் இரண்டாங் குமாரத்தியை றங்கோ பண்டிதன் மகனுக்கு யிரண்டாம் விவாகத்துக்கு குடுத்த கலியாணத்துக்கு முகூர்த்தத் துக்கு போயிருந்து அந்தப் பந்தலிலே ஒரு பிறமசாரி வைஷ்ணவப் பிருமணனுக்கு கலியாணத்துக்கு யிறநூறுயாகப் பண்ணி குடுத்து முகூர்த்தமானவுடனே வீட்டுக்கு வந்தேன்

1752ஸு மாயுமீ 30உ ஆங்கிரசுஸு வைகாசிமீ 21உ
மங்களவாரம்

இத்தனாள் சரீரம் சுவஸ்தமில்லாமல் வெளியே பிறப்படவில்லை துரையவர்கள் பதினோரு மணிக்கு புது வர்த்தகரையும் அழைத்துகொண்டு வரச்சொல்லி அனுப்பினதுக்கு சரீரம் சுவஸ்த மில்லை நாளைக்கு வருகிறேனென்று சொல்லி யனுப்பினேன்

இத்தனுள் கேழ்விப்பட்டசேதி யென்ன வென்றால் ஸ்ரீரங்கததி லிருந்த சந்தாசாயபு முசியே லாசு வகையிராக்கள் அண்டையிலே யிருந்தவர்களிலே குதிரை சுவார்களிலே 300 முன்னூறு சுவார்கள் தவிர மத்தப்பேரெல்லாரும் ஆறு ஆறு மாசம் சம்பளம் வராமல் சிலவுகளுக்குமில்லாமல் முத்திக்கையிலே அகப்பட்டுக்கொண்டு சங்கடப்பட்டு போயி விட்டதாகவும் துப்பாக்கிக்காறர் நாலாயிரம் அய்யாயிரம் பேர்கள் எவ்வளவு யிருக்கிறார்களோ அவர்களும் முன்னூரு குதிரை சுவார்கள் வற்த்தாள் வகையிரா பிறப்பட்டுப் போயிவிட்டதாகவும் யிவர்களும் செம்புகேசுவரம் கோயிலை சுத்த சூனியம் பண்ணுப்போலே ஸ்ரீரங்கம் கோயிலையும் நடத்துகிறதா யிருந்தாப் போலேயும் கோயிலார் அறுபதினாயிரம் ரூபா கொடுத்து இருக்கிற தானியங்களையும் கொடுத்து இன்னேரத்தைக்கு நிபாயிச்சுக் கொண்டாப் போடே யும் யினிமேல் யென்ன நடத்து வார்களோ வென்றுப்போலேயும் இருக்கிற நெல்—அரிசி—ஒரு மாசத் திற்கு காணுமென்றுப் போலேயும் உப்பு முதலான சாமான்கள் பரிசேதமாயி அகப்படாதென்றுப் போலேயும் காவேரியும் கொள்ளிடமும் பிறவாகம் விஸ்தாரமாகத்தானே வருகிறதென்றுப் போலேயும் இங்கிரேசுக்காறர் மருட்டியர், மயிசூரார். பவுன்சு வகையிரா சமயவரம் கோயிலடி முதலான யிடங்களிலே பந்து பஸ்தாயிருந்துக்கொண்டு ஒருத்தரையும் போகவொட்டாமலும் அவர் ஓட்டாமலும் ரஸ்த்துக்கள் போக வொட்டாமலும் வளைத்துக் கொண்டு யிருக்கிறார்கள் யென்று முசியே தொத்தேல் முன் ஊட்டத்தூர் விட்டு ரஞ்சன்கெடை வந்து சேர்ந்தாப்போலேயும் அங்கேதானே யிருக்கிறான் யென்றுப்போலேயும் சேதி சொல்லிக் கொண்டார்கள்.

1752 ௵ சூன்மீ 6௳ ஆங்கிரசு௵ வைகாசிமீ 28௳
அங்காரகவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போன விடத்திலே துரையவர்கள் நேத்திய காகித அலுவலிலே தானே முசியே அலுபேரை வைத்துக்கொண்டு மதாமும் வெள்ளைக்காறர் களுக்கு சுயமாய் யெழுதுகிற காகிதத்தினாலேயும் பாரிசிலே காகிதங்கள் யெழுதுகிற அலுவலிலேயுமிருந்தார் நான்போயி கபுறு சொல்லிப்போட்டு காசாக்கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி டில்லியன்பேரில் சண்டைக்கு வந்த பட்டாணிகள் லாசூர் கோட்டையைப் பிடிச்சுக்கொண்டு மீரு மனுவை வெட்டிப்போட்டார்கள் அப்பால் லாசூர் கோட்டையை முன்னிருந்த கில்லேதாறர் வசமாய்த்தானே ஒப்பிச்சுப்போட்டு யிருந்த பணங்களெல்லாம் தடவியெடுத்துக் கொண்டு மழைக்காலமென்று தங்கள் ராச்சியத்தைப் பட்டாணியர் போயிவிட்டார்கள் யென்றும் அப்பால் டில்லியைச் சுத்தியிருக்கிற இந்துஸ்த்தான் ராசாக்களெல்லாரும் கூடி லட்சங்குதிரையைக்கூட்டி ஆலங்கிர் பாதுசாவுக்கு ஒரு பிள்ளையான்டான் அந்த வருசம் வைத்துக்கொண்டு இப்போ பட்டத்திலிருக்கிற அகம்மது சாபாதுசாவுக்கு ஒரு வக்கிலையும் பன்னீராயிரம் குதிரை சுவார்களை

கூடகூட்டி வக்கீலுடனே சொல்லியனுப்பினதென்னவென்றால் நீர் தக்குத்துக்கு யோக்கியனல்ல தக்குத்துக்கு யோக்கியன் ஆலங்கீர் வமுசத்திலே பிறந்த பிள்ளை யெங்களண்டையிலே யிருக்கிறான் நீர் யிப்போ தக்குத்தை ஒப்பிச்சுப்போட்டு போறதானால் சிறிது சீர்மையும் இல்லாவுங்குடுத்து நீர் சுகமாயிருக்க வைக்கிறோம் யில்லாவிட்டாலும்மை சரிக்கட்டிப்போட்டு இந்த பிள்ளையைப் பட்டங்கட்டுவோமென்று இந்துஸ்தான் ராசாக்கள் யெல்லாரும் கூடி அகம்மதுசா பாதுஷாவுக்குச் சொல்லி யனுப்பினதாகவும் அந்த வக்கீலும் பன்னீராயிரங் குதிரையுடனே போய் டில்லிக்கு சமீபத்திலே யிறங்கி அகம்மதுசா பாதுசாவுக்குச் சொல்லி அனுப்பினதாய்ச் சேதி சலாபத்துசங்கு வக்கில் டில்லியிலே யிருக்கிறவன் சலாபத்து சங்குவுக்கு எழுதியனுப்பினதாய் சலாபத்துசங்கு லசுக்கரிலிருந்தும் ராமதாசு பண்டிதன் சிறிய தாயார் மகன் கோதண்டராம பண்டிதன் யிங்கே வந்து யிருக்கிறாரே அவருக்கு வந்ததாய்க் கேழ்விப்பட்ட சேதியை யெழுதிவைத்தேன்

## 1752-௵ சூன் மீ 7உ. ஆங்கிரசு ௵ வையாசிமீ 29உ புதவாரம்

இத்தனாள் ராத்திரி யெனக்கு கையிலே விரலிடுக்கிலே தேள் கொட்டிச்சு.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி—சலாபத்துசங்குதம்முட திவான்கிரி பண்ணுகிறதுக்கு சயிதுலசுக்கர்காலை நியமிச்சு அவுரங்காபாத்துக்கு யெழுதி யழைப்பிச்சுருக்கிறதாய் சேதிகேழ்விப்பட்டதுமல்லாமல் அவன் துரையவர்கள் பேருக்கு காயிதமெழுதினதாகவும் அதுக்குப் பதிலுத்தாரமும் யெழுதி யித்தனாள் சோடா றவானாபண்ணி யனுப்பினதாக சேதி கேழ்க்கப்பட்டுது யிதல்லாமல் கசானாவிலே யிருந்த திரவியமெல்லாம் சேனாபு கணக்கா யிருந்ததெல்லாம் சிலவழிஞ்சு. இப்போ கையிருப்பு லட்சக்கணக்காயிருப்பதாய்-அறுபது எழுபது லட்சம்-ரூபாய் மட்டுக்கும் யிருக்கிறதாயி—யிதை சிலவு—பண்ணலாகாதென்று பந்திரம்பண்ணி சிப்பாயிகள் சுவார்கள் முதலான பேர்களுக்கு சம்பளம்குடாதத்தைத் தொட்டு-அவர்கள் தங்காபண்ணுகிறது விஸ்தாரமாயென்று யிதைத்தொட்டு சலாபத்து சங்கு யென்னேரம் வெள்ளைக்காறர் சவுக்கியிலே யிருக்கிறதே-அல்லாமல்-துலுக்கர்களைக் கிட்டவொட்டுகிறதில்லையாம் குதிரை சுவார்களுக்கும் சிப்பாயிகளுக்கும் யிருபதுலட்சம் ரூபாமட்டுக்கும் கொடுக்க வேண்டியுருக்குமென்றும் யிதைத்தொட்டு சலாபத்துசங்கு லசுக்கரெல்லாம் கூக்குறலாயிருக்கிறது மல்லாமல்—பேபந்தாயிருக்குதென்றும் சொல்லி கேழ்வியானபடிக்கு யெழுதிவிச்சேன்.

## 1752-௵ சூன்மீ 8உ ஆங்கிரசு ௵ வையாசிமீ 30உ குருவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி-

முசேலாசு மமுதல்லிகானுக்கும் இங்கிரேசிக்காறர்களுக்கும அனுகூலமாயிருந்துக்கொண்டு காரியத்தைக் கெடுத்துப்போட்டதாய் இந்த சேதி-துரையவர்களுக்கு சந்தாசாயபு யெழுதியனுப்பினதின் பேரிலேயும் பின்னையும் முசேலாசுடனே யிடறிக்கொண்ட ஒபிசியால்மார் வந்தவர்கள் சொன்னதின்பேரிலே அறிந்திருக்கிறதாய் வெள்ளைக்காறர்கள் தமிழர்கள் கூடப்பேசியிருக்கத்தக்கதாக கேழ்விப் பட்டதை யெழுதிவைத்தேன்.

இத்தனாள் சாயங்காலம் ஆறுமணிக்கு தேவனாம்பட்டணத்துக்கு சாலத்தாலே ஒரு சீர்மைகப்பல் வந்ததாய் அந்த சீர்மைகப்பல் சீனத்துக்குப் போறகப்பல்-யிந்ததுறை பிடிச்சு-சந்தனக்கட்டை-கடுலன்-முளகு-தந்தம்-செம்மரம்-முதலான சரக்கு-ஏத்திப்போத்தக்கதாக சென்னப்பட்டணந்துறைபிடிக்கும் பொருட்டாய் வந்தது. தேவனாம்பட்டணந்துறைபிடிச்சுதாகவும் அந்தக்கப்பல் வரச்சே பசுக்கரை பிடிச்சுதாகவும் அங்கே முசே தாவீது கொவற்ணதோர் செனறல்லாயிருக்கிறவன் கொடுத்த-காகிதங்களை வாங்கிக்கொண்டு-தேவனாம்பட்டணம் கோவற்ணதோர் நம்முட ஒன்றுபுலு சென்றவர்களுக்கு தன் சோபுதாரன் கையில் அனுப்பினது இத்தனாள் சாயங்காலம்-ஆறுமணிக்கு வந்து துரையவர்கள் கையில் குடுத்ததாய்ச் சேதிசொன்னதுமல்லாமல் தேவனாம்பட்டணம் வந்து சீனத்துக்கப்பல் கப்பித்தான் சொன்னதாக தேவனாம்பட்டணத்திலிருந்து வந்தவன் சொன்னது மூவாயிரஞ் சொலுதாதுகளும்-முன்னூறு ஒபிசியாலுகளும் வருகிறார்கள் புதுச்சேரிக்கு என்றும் சொன்னதாவும் புதுச்சேரிக்கு கப்பலும் பத்து நாளையிலே வருமென்றும் சொன்னதாய் சொன்னார்கள்.

1752-௵ ஜூன்௴ 9௳ ஆங்கிரசு௵ வையாசி௴ 31௳
சுக்கிறவாரம்

இத்தனாள் சாயங்காலம் கேழ்விப்பட்ட சேதி தேவனாம்பட்டணத்துக்கு யின்றையதினம் காலத்தாலே சீர்மையிலிருந்து சீனத்துக்கு யாத்திரை போக நேமிச்சதில் ஒரு கப்பல் வந்து தேவனாம்பட்டணம் கோவற்ண தோருக்கு காகிதம் குடுத்ததாகவும் நேத்து வந்த கப்பலுமின்று வந்த கப்பலும் சென்னப்பட்டணத்துக்குப் பயணமாய்ப் போகுதென்று சேதி சொன்னார்கள். இத்தனாள் சாயங்காலம் ஆறுமணிக்கு துறையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு வில்லியநெல்லூரிலே யிருக்கிற குடிகளில் நெசவுக்காறர்களுக்குப் பணங்காசு குடாமலவர்கள் பிறப்பட்டுப்போயிவிடுகாயிருக்குதென்று முசியே போசேத்து சொன்னான் அவர்களுக்கு ஏன் பணங்கொடாமல் வற்த்தகர்கள் அப்படி பண்ணுகிறார்கள் என்று கேட்டார். அவர்கள் பணமில்லையென்று மெதுபண்ணிக்கொண்டு வருகிறார்கள் ஆனபடியினாலே சீக்கிறமத்துக்கு பணங்குடுக்கவேணுமென்று நானுங்களுடனே சொல்லவில்லையாவென்று சொன்னதுக்கு மெயிதானிவர்கள் சொந்தத்தில் கொடுத்து செயவிப்பார்களாங்காட்டும்யென்று யிருந்தேனிப்படிக்கு கும்பினீர் பணங்குடுத்து செய்விக்கிறதானால் இந்த கச்சோர்கள் பேரென்ன நடுவே நான்வேறே மனுஷரை வைத்து

கோபிச்சுக்கொண்டாலும் இதல்லாமல் வந்த அறுக்காறுவுக்கும் வக்கீலுக்கும் யிடங்கூடவிடாமல்படி கூடகுடாமல் அவர்களை தாபந்தப் பட்டுக்கொண்டதாய் சேதிகேழ்க்கப்பட்டுது

## 1752-ஸு ஜுன்மீ 13உ ஆங்கிரஸ ஸு ஆனிமீ 3உ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போயி கபுறு சொல்லி இப்பால் வந்தவுடனே வாலிகொண்டாபுரத்திலிருந்து ஒரு வெள்ளைக் காறன் துலுக்கச்சட்டையும் தலைப்பாகை அங்கிபோட்டுக்கொண்டு டோலியின் பேரிலே வந்து துரையவர்களண்டையிற்போயி கபுறு சொன்னவுடனே அவனை அழைத்துக் கொண்டு மதாம் காமபிறாவிலே போனார் போகச்சே முகம் விலாசம் தப்பிக்கண்டுது அந்தசாடை பார்த்தவுடனே தெற்கித்து கபுறிலே ஆகாதகபுறு யேதோ வந்திருக்கிறதாய்க் காணுதென்று சொல்லி யெண்ணிக்கொண்டுஎன் காசாக்கச்சேரியே வந்தேன். பின்னையும் ஒருநாழிகைக்கு வந்தகபுறு யென்னவென்றால் முசியே தொத்தேல் வாலிகொண்டா புரத்திலிருந்தாமே யவனண்டைக்கு றங்கோபண்டிதனும் பவுன்சும் போய் சேர்ந்தவுடனே அவ்விடத்திலிருந்த பவுன்சுஞ் சேகரிச்சுக்கொண்டு சிரங்கத்துக்குப் போகப் பயணம் பட்டதாகவும் அதன்பேரிலே மருட்டியர் பவுன்சும் பாக்கி வெங்கட்றாயன் யென்கிறவன் மயிசூர் பவுன்சுதாரனும் சிறிது யிங்கிலீசுக்காறர்களும் சமயவரம் மேட்டுப்பேரிலே யிருந்தவர்கள் வந்து விழுந்து சண்டை கொடுத்ததாகவும் அதின்பேரிலே அவர்களிலேயும் சேதமானாப் போலேயும் அதின்பேரிலே சிரங்கத்துக்குப் போறதுக்கு கூடாமல் மறுபடி ரஞ்சன் கடையே வந்து சேர்ந்ததாகவும் இதிலே சிறிது பவுன்சு கூடயிருந்ததுகளிலே செதரினாப்போலேயுந் தொடைபட்டதுடனே போய் முசே தொத்தேல் றங்கோபண்டிதன் வலகிறூ ரஞ்சனகடை ஷ கற்பனையை வந்ததாகவும் அதன்பேரிலே மாத்தபார்க்காணிவர்களுக்கு யிடங்குடாமல் சத்துருக்களுக்கு அனுகூலமாயிருந்துசத்துருக்கள் பின்பக்கமாய் வருகிறதுக்கு யிடங்கொடுத்தபடியினாலே அவர் சகற்பனையிலே வந்து விழுந்துவிட்டதினாலே முசே தொத்தேல் யிவர்களுடனே போராடுகிறவிடத்தில் காரியமில்லை யென்று அவர்கள் வந்தவுடனே வருகிறவர்கள் அண்டையிலே போயி யின்றாப்போலேயும் றங்கோபண்டிதனையும் பாக்கி வெங்கிட்டறாயன் வசம் பண்ணிக்கொண்டுயிருந்த பணங்காசு சமாதானதட்டு முட்டு சமஸ்தமானதும் தங்கள் வசம் பண்ணிக்கொண்டுவிட்டதாய் சேதி சொன்னார்கள் பணம் காசு ரெண்டு லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் யிருந்ததாய்ச் சொல்லி கொள்ளுகிறார்கள். மெய் பொய்யென்று எனக்கு நன்றாய்த் தெரியாத்தினாலே கேட்டசேதி யெழுதிவிச்சேன். இத்தனாள் சாயங்காலம் சென்னபட்டணம் கோவற்ணதோருக்கு புட்கா வென்கிற சேபுதாரன்கையில் காகிதமெழுதிக்குடுத்து கட்டுமரத்தின் பேரிலே போயிறங்கி யங்கேயிருந்து சென்னப் பட்டணத்துக்குப்போயி கோவற்ணதோருக்குக் கொடுத்து மறு காகிதம் வாங்கிவரச்சொன்னதாக சேதிகேட்டேன். காகிதம்

போற காரியம் பாத்தால் ஆற்காடு சந்தாசாயபுக்கும் மமுதல்லிக் கானுக்கு திரிச்சிராப்பள்ளியும் ஆக முன்சாடைப்படிக்குயிருக்க சலாபத்துசங்கு காகிதங்கள் வந்ததாயி அதை அனுசரிச்சு யெழுதினார்கள் யென்கிற கபுறு கேட்டேன். பின்னையும் யிந்த ராச்சியகாரியம் நிமித்தியம் எழுதினதாய்க் காணுது.

## 1752௵ சூன்மீ 14௳ ஆங்கிரசு௵ ஆனிமீ 4௳ புதன்வாரம்

இத்தனாள் நாருயணப்பிள்ளையும் பேரவிளங்கன் துபாசியும் மத்தியானம் சாப்பிட்ட பிற்பாடு வெகுமதி வாங்கிக்கொண்டு சென்னப்பட்டனம் போனார்கள்.

## 1752-௵ சூன்மீ 15௳ ஆங்கிரசு௵ ஆனிமீ 5௳ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் யென்னை அழைத்து சீனத்துக்கு நேமிச்ச ரெண்டு கப்பல் வந்துதே அதிலே சொல்தாது யெதாகிலும் வந்தார்களோ வென்று கேட்டார். கப்பலுக்கு அன்பது அன்பது பேர்வந்ததாய்ச் சொன்னார்களே யென்று சொன்னதுக்கு சீமைசேதியென்ன சொல்லுகிறார்கள் என்று துரையவர்கள் கேட்டார். அதுக்கு நான் சொன்னது கடை சேதி நான் கேட்டதை சொல்லுகிறேன் அது மெய்யோ பொய்யோ சுவாமிக்குத்தெரியும் நான் கேட்ட சேதியை யொளிக்காமல் சொல்லுகிறேனென்று சொல்லி சீர்மையிலிருந்து வந்த சேதி உங்களுடனே சமாதானமாயிருக்கச் சொல்லி யெழுதிவந்துதாம் மமுதல்லிக்கானுக்கு மத்தத்து யிவர்கள் போறபோது கோன்சேல் பண்ணித்தீத்துக் கொண்டதாய் பிரான்சுக்காறர்களுக்கும் இதாயித்துமொகதின்கான்சாயபு சலபத்துசங்கு இவர்களுக்கும் யேகமாயிருக்கிறபடியினாலே ஆற்காட்டு சுபாயவர்கள் வசம் ஆனால் நம்முட வறத்தகம் பிறவற்த்தகம் ஒன்றும் நடக்க வொட்டார்களானபடியினாலே நாம் மமுதல்லிகானுக்கு ஆசார்குடுத்து திரிச்சிராப்பள்ளி–ஆற்காட்டு வகையிரா சீர்மைகள் கட்டுகிறதேயல்லாமல் விடப்போகாதென்று மமுதல்லிக்கானுக்கு மத்தத்துப்பண்ணுறதும் சீமைக்கு கூடயெழுதி யனுப்பினதாக சேதி சொன்னார்கள். ஒருவேளை மமுதல்லிகானுக்கு ராசியம் தெய்வீகம் அதனால் வித்தியாசமாயி மோசம் வந்தாலும் மமுதல்லிக்கான் பனுஷன் யென்று ஒருத்தனை பேரிட்டு ஆகிலும் வைத்துக்கொண்டு கும்பினீர் பணத்தை சிலவழிச்சு ஆற்காடு முதலான சீமை கட்டுகிறதேயல்லாமல் விடத்தக்கதில்லை யென்று மேஸ்தர் சாந்தரசு (Mr. Saunders) சீமைக்கு யெழுதிப்போட்டு யிவடத்திலேகோன்சேலிலேயும் சொல்லி அந்தப்படிக்கு நடத்தி வருகிறானென்று சொல்லுகிறார்கள் யென்று சொல்லி யிதல்லாமல் சம்பிரதாயனையுஞ்சிலவழிஞ்ச பணம் வாங்கிறதுக்கும் ஒருவேளை மமுதல்லிகானுடைய பேச்சு அப்படியிருந்தால் அவனைவைத்துக் கொண்டு காரியம் நடத்தவும் யிருக்கிறதாய்ச் சொன்னார்களென்று சொன்னதுக்கு நாங்கள் யிங்கிரேசுக்காறருக்கும் கும்பினிஇருக்குது அதுக்கு யிவடத்து கொவற்னதோர்கள் நடத்தின

ஞாயதப்பிதங்களை யெல்லாம் யெழுதினதுக்கு அவர்களுக்கு தாக்கீது வந்தது. சரிப்பட்டுக்காணுது யென்றும் ஆனல் ஆற்காட்டு சுபாவை யாராகிலும் யிதாயத்து மொகதீன்கான் அப்பால் சலாபத்துசங்கு வகையிருக்கள் யிவர்கள் பூந்தமல்லி சீர்மையும் கட்டினதுக்குக்கூட கட்டிக்கொண்டு அனுப்பிவித்துக் கொண்டு போகட்டுமென்று சும்மாயிருந்தார்களே அல்லாமல் இங்கிறேசுக்காறர் வழிப் போனதில்லையே அப்படியிருக்க யவர்கள் கும்பினியாருக்கு மேஸ்தர் சாந்தரசு பெரிய பொய்யெழுதினுனென்று யென்னுடனே செல்லிப்போட்டு அவ்விடத்திலேயிருந்து நடுசாலேயே போனர். நானும் காசாக்கச்சேரியே வந்தேன். துரையவர்கள் போனசாடை பாத்தால் யிப்போ நடந்த பிறஸ்தாபத்தை பெண்சாதியுடனே சொல்லப்போன சாடையாயிக்கண்டுது தேவனம்பட்டணத்தில் பீரங்கிபோட்ட சேதி சந்தாசாயபு-பக்கிரிவேஷமாயி பிறப்பட்டதாயும் பிடிச்சுக் கொண்டதாயும் அந்த சேதி வந்து பீரங்கிபோட்டார்கள் யென்றும் சர்க்கரை வழங்கினர்கள்யென்றும் பத்து மணிவேளைக்கு கேழ்க்கப் பட்டுது இத்தனள் மத்தியானம் பனிரெண்டு மணி வேளைக்கு பெரியண்ண நயினரை துரையவர்களழைச்சனுப்பிவிச்சு சிறிது பேர்கள் வெளிப்பட்டுப்போகாமலும் அவர்கள் வீட்டு குஞ்சுகுழந்தைகள் தட்டுமுட்டுக்கள் வெளியே போகாமலும் போனல் நீ உத்திவராதம் பண்ணுவாயென்று சொல்லி யெழுதிக்கொடுத்த சாப்பிதா பேர் வயணம்—

சந்தா சாயபு குமாரன் றசாசாயபு அவர்கள் தாலுக்கு மனுஷர் கள் தட்டு முட்டு பணங்காசு வகையரா யென்ன யென்ன உண்டோ அதுகள் ஒன்றும் வெளியே போகாமல் பத்திரமாய்ப் பார்க்கச் சொல்லி சொன்னதாய் யெழுதிக் கொடுத்தது அப்பாலே சேக்கசேன் முசபர் கான் வீட்டு மனுஷரகள் தட்டு முட்டு பாணங்காசு வகையிரா பின்னையும் நாலத்து ரெண்டு பேர்கள் துலுக்கராயிருக்கிறவர்களுக்கும் யெழுதினபடிக்கித்தான்——

கேசவராயன் அவன் வீட்டுப் பெண்டுகள் பிள்ளைகள் பணம் காசு தட்டு முட்டு வகையிரா———

பாப்பாய்யபிள்ளை அவன் மகன் பெண்டுகள் பிள்ளைகள் மனுஷர் கள் தட்டு முட்டு பணங்காசு வகையிரா.——

மதனந்தபண்டிதனுடைய பெண்டுகள் பிள்ளைகள் மனுஷர்கள் தட்டு முட்டு பணங்காசு வகையிரா———

இந்தப்படிக்கி பேர்கள் அப்பைக் கொண்டு எழுதி விச்சு பெரியண்ண நயினர் கையில் கொடுத்து வழிச்சாரியிலேயும் பத்திரமாயும் அவரவர் வீட்டிலேயும் அதனண்டையிலேயும் மனுஷர்களைவைத்துகாத்து உத்திரவாதம் பண்ண வேணுமென்று ஊர்ச்சிதமாய் பத்திரமாய்ச் சொல்லிப் போகச் சொன்னதின் பேரிலே அவன் வழிச்சாரிகளிலே போற பிருமணன்களுக்கு தன்சீட்டு யில்லாமல் விடவேண்டாமென்று கட்டுப்பண்ணதாய் சேதி சொன்னர்கள்.

இந்தக்கப்டல் கோவளத்து துறையிலே போய் பத்து நாளிருந்து அங்கே சென்னபட்டணத்து சரக்கு வந்தால் ஏத்திக் கொண்டு அப்பால் பாயெடுத்து பணிலாவுக்குப்போம் சென்னபட்டணத்து சரக்கு வருமல் போனாலும் பாயெடுத்து பணிலாவுக்குப்போம்

## 1752௵ ஜூன்மீ 16௳ ஆங்கிரசஞு ஆனிமீ 6௳ சுக்குறவாரம்

இந்தநாள் துரையவர்களுக்கு சேவுகர் வந்து சொன்ன சேதி யென்று கேழ்விப்பட்டது. சந்தாசாயிபு, சேக்கசேன் முசேலாசு வகையிரா சறுதார்களும் பவுன்சுகளும் ஸ்ரீரங்கம் கோயிலிலே யிருந்த போது மமுதல்லிக்கான் மயிசூரார்—இங்கிலீசுக்காற—முறாரிராயன் பவுன்சுவகையிரா சுத்திக்கொண்டு ரஸ்த்துக்கள் போகவொட்டாமல் முத்திக்கைப்போட்டுக் கொண்டு யிருக்கச்சே நிறுவாகமில்லை யென்று நிதது்க்கொண்டு தஞ்சாவூர் மானோசியப்பாவுக்கும் முராரிராயனுக்கும் சிறிது பணங்காசுகளொப்பி தான் பக்கிர் வேஷம் போட்டுக் கொண்டு பிறப்பட்டதாகவும் முராரிராயன் சவுக்கியிலேயாயிலும் மானோசி அப்பாவினுடைய சவுக்கியிலேயாவது போக அவர்கள் அப்பால் தஞ்சாவூர் சேர்ந்து அங்கேயிருந்து காரைக்கால் சேத்துப்போட சிறிது உடன் படிக்கை பண்ணிக் கொண்டு பிறப்பட்டதாகவும் அந்தப்படி முறாரிராயன் சருக்கிலே சந்தாசாயபு பக்கிரி வேஷத்துடேன போனதாகவும் அங்கே மமுதல்லிகான் மனுஷர்கள் கூடயிருந்ததாகவும் அவர்களும் கூடக்கண்டு சந்தாசாயபு வக்கண்டு பிடிக்கக்கொண்டு / அப்பால் மமுதல்லிக்கான் மனுஷர்கள் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையேக் கொண்டு போறோமென்று சொன்னதாகவும் முராரிராயன் மனுஷர்களும் தஞ்சாவூரார் மனுஷர்களும் கூடவிருந்து நாங்கள் சந்தாசாபுக்கு கவில் கொடுத்தோமென்று பேசி அவர்கள் மனுஷர்களைத்தள்ளி விட்டு சிக்கிற மத்துக்கு சந்தாசாயபுவை தஞ்சாவூர் கோட்டைபேக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள் அந்தச்சேதிக்கி முன் அய்யாயிரம் விராகன் அறுக்காறுகள் கையில் கொடுத்து அனுப்பினார்கள். அந்த விராகனைக் கொண்டு போய் சந்தாசாயபுக்கு கொடுத்து அவர்கள் தஞ்சாவூர் கோட்டை சேர்ந்ததுக்கும் பணம் சேர்ந்ததுக்கும் சந்தாசாயபு கையிலே காயிதம் வாங்கி வந்து துரையவர்களுக்கு பத்து மணிக்கு கொடுத்ததாய் மமுதல்லிக்கான் கையிலகப்பட்டுக் கொண்டு திரிச்சிராப்பள்ளிக் கோட்டையில் கொண்டு போயி போட்டுக் கொள்ளாமல் தப்பி தஞ்சாவூர் வந்து சேர்ந்தானென்றும் தஞ்சாவூராரும் முராரிராயனும் தங்களுக்கு அனுகூலமாயி யிருக்கிறார்கள் யென்கிற சந்தோஷம் ஒன்று உண்டாச்சுது. வந்தவர்களுக்கு நூறு ரூபாய் வெகுமானங் கொடுத்தார்கள் யென்று சேதி சொல்லக் கேழ்க்கப்பட்டுது.

முசியேலாசும் சேக்கசேனும் பாக்கி பவுன்சும் ஸ்ரீரங்கம் கோயிலிலே தானியிருக்கிறார்கள் அவர்களினி எந்த சாடை பண்ணுவார்களோ தெரியாது சந்தாசாயபுவை தஞ்சாவூரை அனுப்பினதில் தளவாய்மண்டபத்தில் தஞ்சாவூரார் பவுன்சு யிறங்கியிருக்கிறுக்குதே அங்கேதானே வைத்துயிருக்கிறார்கள் யென்றும் மானோசி அப்பா தன் கூடாரத்திலே வைத்துக் கொண்டிருந்ததுக்கு சேதி வந்ததாய்ச் சொன்னார்கள்.

## 1752ஸு ஜூன்மீ 11உ ஆங்கிரசுஸு ஆனிமீ 7உ சனிவாரம்

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் பேதிக்கு வாங்கி கொண்டாரென்று ஒருத்தருக்கும் தெரியவில்லை இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்குத் துரையவர்கள் அண்டைக்குப் போன விடத்தில் கபுறு சொல்லியானவுடனே துரையவர்களும மதனந்த பண்டிதனும் முசியே ஏல்பேரும் துரை பெண்சாதியும் நாலுபேர்களுமாயிருந்து மூணு நாளாய் அகோராத்திரமும் சல்ப்பத்து சங்கு லசுக்கருக்கு யெழுதுகிற காகிதத்து அலுவலிலே போய் உளுக்கார்ந்து சாடைபார்த்து நான் காசாக்கச்சேரியே வந்தேன கேழ்விப்பட்டசேதி முசியே தொத்தேல் வாலிகொண்டாபுரத்திலே பிடிபட்டவனை திரிச்சிராப்பள்ளி கோட்டையிலே கொண்டுபோனவிடத்திலே இங்கிறேசுக்காறர்கள் இருந்தபடியினாலே வெள்ளைக்காறர்கள் சட்டப்படிக்கு பிரிசோனியர் தெ கேர் யென்கிற வ டிக்கைப்படிக்கைப் படிக்கி சண்டைக்கு வாறதில்லை கத்தியெடுக்கிறதில்லை துப்பாக்கியெடுத்து சண்டை பண்ணுகிறதில்லை யென்றும் சண்டைக்கு ஆவலாயிருக்கிற வாடிக்கைப்படிக்கு யெழுதிக்கொடுத்து போட்டு தானும் தன்னுடனே கூடயிருந்த குவாடுது வெள்ளைக்காறர்கள் ஒபிசியார்மார்கள் பத்துபேர்கள்கூட மமுதல்லிக்கான் கையில் அங்கேயிருக்கிற மேஸ்தர் லரேன்சுகையிலும் அனுப்பிவிச்சுக்கொண்டு வந்து திருவீதி சேர்ந்தான் பனிரெண்டு மணிவேளைக்கி வருவானென்றுஞ் சொன்னார்கள்.

றங்கோபண்டிதனுக்கும் யிந்தஉடன்படிக்கைப்படிக்கு யெழுதிக்குடுக்கிறோமென்று விடச்சொல்லி கேட்டால் விடுகிறதில்லையென்று சொன்னதாய்ச் சொல்லிக்கொண்டார்கள்.

இத்தனாள் சாயங்காலம் அஞ்சரைமணிக்கு முசேதொத்தேலும் அவர் பிறகே ரெண்டோரு ஒபிசியாலும் முசியே பொப்பரேயென்கிறவனும் அஞ்சாறு குவாடுதி வெள்ளைக்காறர்களுமாக வந்து துரையவர்களண்டையிலே போய் வெகுநேர மட்டுக்கும் எட்டுமணி ராத்திரி மட்டுக்கும் பேசியிருந்து அப்பால் சாப்பிட்டு வீட்டுக்கு ஒன்பதரைமணிக்குப் போனார்கள். முசியே தொத்தேல் வந்துபேசின பிற்பாடு துரையவர்கள் விசாரமாயிருந்தார் என்கிற சேதி கேழ்க்கப்பட்டுது.

## 1752ஸு ஜூன்மீ 18உ ஆங்கிரசுஸு ஆனிமீ 8உ ஆதிவாரம்

இத்தனாள் நான் கேழ்விப்பட்டசேதி மானோசி அப்பாவினுடலசுக்கரிலே போயகப்பட்டிருந்த சந்தாசாயபை முன் இரண்டாம் தேதி திங்கட்கிழமை காலமே நிமாசு பண்ணச்சே தலையை வெட்டி ஒட்டகத்தின் பேரிலே போட்டு உடலையுங்கூட சேர்த்து சகலமான

பேருக்கு மறிவிச்சு திரிச்சிராப்பள்ளிக் கோட்டையே மமூதல்லிக் கான் அண்டைக்கு அனுப்பிவிச்சுபோட்டதாய் அப்போ சந்தா சாயபு தலையை வெட்டச்சே குண்டோபண்டிதனும் குருவாபோ யென்கிறவனும் பின்னை ஒரு கிசுமத்துக்காறனும் கூடயிருந்தாப்போ லேயும் குண்டோபண்டிதன யென்னைவெட்டிப்போடுங்கோளென்று சந்தாசாயபு பின்பக்கத்திலே யிருந்தவனை யிழுத்துவிட்டு சந்தா சாயபை வெட்டிப்போட்டதாகவும் அப்போ கூடயிருந்த குருவாபோ யென்கிறவன வந்து ருசவண்டிதனுடனே சொன்னுப்போலேயும் றசாசாயபுடனே மசாலலவேண்டாமென்றும மறைத்து வைத்திருக் கிறதாய் அதைத்தொட்டு ஊரிலே ஒருத்தருமறியார்கள் யென்றும் வந்து ஒருத்தன் சொன்னான். இது பனிரெண்டுமணிவேளைக்குபுறு முசியே தொத்தேல் சந்தாசாயபை வெட்டிப் போட்டு கயுறு துரையுடனே சொல்லச்சே அதன் பேரிலே தான் துரை மெத்த விசாரமாயிருந்து. இந்த நாள் கோயிலுக்குகூட போகாமலிருந்ததும் பகல் சாப்பாடுமேலே மனதில்லாமல் யிருந்ததாகவும் பாப்பய்ய பிள்ளை வீட்டிலே சொல்லிக்கொண்டார்கள் என்று மூணு மணிக்கு ஒருவன் வந்து சொன்னான். சந்தாசாயபுக்கு இது கெண்டகாலம் தப்பிதமில்லை. எப்படி யென்றால் வைப்பூர் சீத்தாராம் சோசியன் சோசியப்படிக்கு சனிப்பாச்சவ்லிவருஷம் ஆனப்படியினாலே இந்தக் கெண்டம் தப்பாது, சனிப்பாச்சல் பனிரெண்டுவருஷத்துக்கு ஒரு திரம் பாயுரதானபடியினாலே இந்தக் கெண்டம் தப்பாது.

## 1752வரு ஜுன்மீ 20வ ஆங்கிரசவரு ஆனிமீ 10வ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் முசியேலாசை அழைச் சனுப்பிவிச்சு என்னயென்ன சம்மதியவனை கேழ்க்கு வேணுமோ அதையெல்லாம் கேட்டு அதுக்கு உத்திரம் பிரதி யுத்தரம் நடப்பிச்சு தாமெழுதின காயிதங்களிலே சிறிது அவனுக்குப் படிச்சுக் காண்பிச்சுக் கேட்டவிடத்திலே அதுக்கு பதிலுத்தர மென்ன சொன்னதோ தெரியாது. அதன் பேரிலே மறுபடி நேத்துராத்திரி முசே புரி (Mr. Bury) கோட்டையிலே இருக்கிற கோட்டை வீட்டிலே கொண்டுபோய் வைத்த படிக்குத்தானே யிப்பவுங் காவல் வைத்தார்களி வனிருக்கச்சே தானே முசே மறுகோம்யும் அழைப்பிச்சார்கள் முசியேலாசு கையில் யெடுத்து யேதாகிலும் வாங்கினார்களோ தெரியாது.

அப்பால் முசியே தொத்தேலை அழைச்சனுப்பிவிச்சு முசியே பிறணி யேயும் அழைப்பிச்சு பேசியிருந்து முசியே பிறணியேயும் நாலு ஒபிசியாலுமார்களையும் செஞ்சிக்குப் போகச் சொன்னார் என்று சொல்லிக் கொண்டார்கள்.

வழுதாவூர் கோட்டையிலே முசிய வெரியேர் (Mr. Verrir) போய் பத்திரமாயிருக்கச்சொல்லி சொன்னாரென்று சொன்னார்கள்.

நானும் போய்க் காண்பிச்சுக் கொண்டு காசாக்கச்சேரியே வந்தேன். பின்னை ஒன்றும் பேச்சுவார்த்தைகள் நடக்கயில்லை இத்தனாள் யேழுமணிராத்திரி வேளையில் துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு முசியேலாசைக் காவல் பண்ணின சேதி அறிவாயா வென்று கேட்டார்.

அறிவேனென்று சொன்னேன். நீபுத்திசாலியாசகுதே முசியே லாசு சந்தா சாயபுவை தஞ்சாவூரார்கையில் ஒப்பிச்சவன் ஒரு மாதப்பா பெரிய மனுஷரை அடகுவாங்கிக் கொண்டால்லோ ஒப்பிக்க வேணும் அப்பாலும் அவன் சத்தியம் பண்ணிக் குடுத்து நாளாறுவிசை அவன் வரவும் யிவன் போகவும் பேச்சு வார்த்தை நடக்கிறபோது முசியே லாசு மானுேசி அப்பாவைக் கேட்டானே நீர் சத்தியம் பண்ணிக் குடுத்தீர் தாவுத்துக்கான் யென்கிறவன் ஒருத்தன் பட்டாணியன் பெரிய மனுஷனை அனுப்பிவிச்சுக் கொருன் முன்னிலேயாயசத்தியம் பண்ணி விச்சுக் கொண்டபோது நீர் பேச்சு நடப்பிச்சீரே நான் சந்தாசாயபுவை உங்கள் கையிலே ஒப்பிவிச்சு நீங்கள் காரைக்காலிலே கொண்டு போய் சேர்த்துசேதி வருகிற மட்டுக்கும் ஒரு பெரிய மனுஷரை கிரிவைக்க வேணுமென்று கேட்டத்துக்கு மானுசி அப்பா சம்மதிக்கமாட்டமென்று சொன்ன மட்டுக்கும் வஞ்சனை நினைத்துக்கொண்டிருக்கிருர்கள். இல்லாவிட்டால் அவன் நம்முடனே கூறுறு பண்ணினபடிக்கு நடப்பிக்கிறமாது உண்டானுல் கிரிவைக்கிறதுக்குகூடாதென்று சொல்லுவானே னென்று நீயோசனை பண்ணிக்கொண்டு சந்தசாயபுவை அனுப்பக்கூடாது. நீங்கள் கிரிவைத்தாலே யல்லாமல் டென்று நிறுத்திப்போட்டுவிடாமல் சந்தாசாயபுவை அனுப்பி விச்சது-முசியே லாசுமேலே நேரமாமோ வென்று கேட்டார். நீங்கள் சொன்னபடி நடந்திருந்தால் அவன் பேரில் நேரம்தானென்று சொன்னேன். பின்னேயும் சிறிது குத்தங்கள் அவன் பண்ணினதை யெல்லாஞ் சொல்லி இவன்பெரிய குத்தன் பண்ணினுனென்று சொல்லி அப்பாவிப்படி சத்தியம் பண்ணி விட்டு வீட்டேயழைச்சுக்கொண்டு போயிவைத்துக் கொண்டு தலையை வெட்டினவர்களுண்டாவென்று கேட்டார். இப்படிப்பட்ட அசத்தியவாதிகளைப்போலே ரூபமாயுள்ளவர்களுண்டு ஆனுலவர்கள் மூணுமாசத்துக்குள் அழைக்கப்பேரில்லால் நிறமூலமாய்ப் போனுர்களே யல்லாமல் ஒருத்தராகிலும் வராத்திச்சுக்கண்டவர்களில்லை என்று சொன்னதுக்கு உங்கள் மத்தியஸ்தர் செய்தவேலையைப் பார்த்தீரா வென்று கேட்டார். எந்தமத்தியஸ்த்தனுனல்தானென்ன. வெள்ளைக்காறர் துலுக்கர் தமிழர்-பின்னேயும் எந்தசாதியிலேயுள்ள மனுஷர்களானுலும் சத்தியவாதியுமுண்டு அசத்தியவாதியுமுண்டு அதுவே திஷ்டாந்திரமிப்படிப்பட்ட அக்கிறுத்தியம் பண்ணினவர்களை நெடுநாளைக்கு யிருந்ததில்லை. மூணுமாசம் மூணுவருஷத்துக்குள்ளாக நிற்மூலமாயிப்போவார்கள் யென்று சொன்னேன். மெயிதானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் நான் காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1752-ஹு ஜுன்மீ 21௳. ஆங்கிரசஹு ஆனிமீ 11௳ புதவாரம்

இத்தனுள் நாலு மணிக்கு முசியே கோற்னேத்து வீட்டே போன விடத்தில் அவனெல்லா கணக்கும் யெழுதிக் கொண்டுவந்தான். துரை அதின்சிலவு கணக்கு நாளைக்கி யெண்ணிக்கொண்டு வரச்சொல்லி போகச் சொன்னுர்.

இத்தனாள் சாயங்காலம் முசியே கொற்னே வீட்டை விட்டு வரச்சே சீமைக்கப்பல் வருகுதென்று வந்து சொன்னார்கள். அங்கே யிருந்து கோட்டைக்கு நேரேவரச்சே துரை சேவுகன் வந்து அழைக்குராரென்று சொன்னார்கள். துரையவர்கள் வீட்டே போனவுடனே என்னைப்பாரத்து மமுதல்லிகானை முராரிராயன் வெட்டிப்போட்டானும். அங்கே நம்முடசொலுதாதுகள் சிப்பாயிகள் பிரிசோனர்களா யிருந்தவர்களை யெல்லாரையும் அழைப்பிச்சு அவர்களை யெல்லாஞ்சேர்த்துக் கொண்டு துப்பாக்கிகளை அவர்களுக்குக் குடுத்து அவர்களைக் கொண்டு இங்கிலீசுக்காறர்களை வரவொட்டாமல் மட்டுக்கட்டுகிறார்கள் யென்கிறகபுறு கூடலூருக்கு யெழுதி வந்து கூடலூரிலே யெல்லாம் பிறசித்தமாய் பேசிக்கொள்ளுகிறார்கள் யென்கிற கபுறு வந்தது மெய்தானாவென்று கேட்டார். யிங்கேயும் நேத்தியே பிடிச்சு சொல்லிக்கொள்ளுகிறார்கள் யென்று சொன்னேன். இந்த காரியம் போன ஆதிவாரம் நடந்தது. மெய்தான்—தப்பிதமல்ல இந்த சேதியும் வந்தது. சீமைக்கப்பலும் வந்து துரை பிடிச்சுது. இன்றுமுதல்க் கொண்டு காரியங்கள் நடக்கப்போகிறது. வேறேயென்று சொன்னார் அதென்ன—பொய்யா—சத்தியம்—பிறநானம்—அவன் மோசம் பண்ணி—சத்தியம் பண்ணிக்கொடுத்து கொன்றதுக்கு சுவாமி அவனை—ஒருக்காலும் நாள்ப்பட வைக்கத்தக்கதில்லை யென்று சொல்லி உம்முடைய யோகம் ஒருகிரீடந்தரிச்ச பாதுசாக்களுக்கு யில்லை யென்று சொல்லி வேண்டிய உபசாரமென்னவுண்டோ அதெல்லாம்—சொல்லிப்போட்டு நான் காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1752—ஸு ஜூன்மீ 23உ ஆங்கிரசஸு ஆனிமீ 13உ வெள்ளிக்கிழமை

இத்தனாள் —— —— —— —— —— —— சேர்கசேன் என்கிறதும் நம்முட சிப்பாயிகள் கப்பித்தானும் முன்னூறு சொலுதாதுகளும் சிறிது சிப்பாயிகளும் சண்டைக்காவலாய்ப் பத்திரம் பண்ணிக் கொண்டு வருகிறதாய் தேவனும்பட்டணத்துக்குக் வருவதாய் ஸ்ரீரங்கத்திலேயிருந்தவர்களென்று வந்து சொன்னார்கள். விறுத்தாசலம் வந்ததாய் இன்றைய தினமாகிலும் நாளையதினமாகிலும் கூடலூரை வந்து சேருவார்கள்யென்றும் சேக்கசேன் யிவடத்துக்கு வந்தால் முசேலாசு பேரிலே வெகுநேரம் செம்நமென்றாய்ப் போலேயும் முசேலாசும் சேக்கசேனும் ஸ்ரீரங்கத்திலே பண்ணின—அநியாயத்தைக் காயிதத்திலே எழுதி முடியாதென்றும் யிவர்கள்—அவ்விடத்திலேயிருந்த செனங்கள் ஆண் பெண்களை பண்ணின அநியாயத்தினாலே சுவாமி பொறுமலியிவர்களுக்கு இந்த வாக்கினைக் கொடுத்தாரென்றும் இவர்கள் பண்ணின அநியாயத்தினாலே தமாம்பவுன்சு முழுகிப்போயி யிவர்களும் சத்துருக்கள் கையில் அகப்பட்டுக் கொண்டார்கள் யென்று மிவர்கள் பிறகே வந்த மனுஷர்கள் நாறுபேர்கள் சொல்லக் கேழ்விப்பட்டேன். முன்னுக்கு சுவாமியிவர்களுக்கு யென்ன வாக்கினை கொடுப்பாரோ தெரியாது யென்று சொன்னார்கள். நான் கேழ்விப்பட்ட சேதியெல்லாம் எழுதவேணுமானால் நாறு—யிறநூறு—காகிதத்திலும் அடங்காது. சுவாரசியமாயி—நாலுவரியில் யெழுதிவச்சேன். முசியே லாசு

நடத்தினதாலுல் அங்கே யிருந்து வாறவர்களெல்லோரும் முசே லாசு சத்துருக்களுக்கு யிடங்குடுத்து நடத்தினதாய் சொல்லுகிறார்கள் சுவாமிக்குத்தெரியும் அவன் நடத்தை சகலசனங்களுக்கும் வஞ்சனை பண்ணதாய் தோத்தி விக்குது.

1752ஹு சூன்மீ 24உ ஆங்கிரசு ஹு ஆனிமீ 14உ சனிவாரம்

இத்தனாள் சாயங்காலம் கேசவருயனைக் காவல் விட்டுவிட்டார்கள். இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் யென்னை அழைப்பிச்சு சொன்னது திருச்சிராப்பள்ளியிலே மமுதல்லிக்கானை முராரிராயன் வெட்டிப் போடட்டது மெயிதான்—ஒரு சிப்பாயி பெண்சாதி—மமுதல்லிக்கான் தலையை வெட்டச்சே கூடயிருந்தவன் வந்து சிஞ்சார்களுடனே யிப்போ சொன்னானென்று சொல்லிப்பேசி யிருக்க்ச்சே சின்னதுரை வந்தார். வந்தவுடனே அந்தக்கோந்திராத்து காகிதத்துக்கு விலையெழுதிவிக்க வேண்டிய தினிசுக்கள்—அஞ்சாறு—யிருந்துதே-அதிலே விலை போட்டாச்சுதாவென்று கேட்டார். ரங்கப் பிள்ளை கையில் விலை போடச்சொல்லி குடுத்தேனென்று சொன்னார். அதிலே நான் துரையைப் பார்த்து மூனுதினிசுக்கு மாத்திரம் விலை போடவில்லை மத்ததெல்லாம் போட்டாச்சே யென்று சொன்னேன். அதுக்கேன்ன கோந்திராத்திலே விலைக்கு மாத்திரம் யிடம்விட்டு வைக்கச்சொல்லி மத்ததெல்லாம் யெழுதிதீத்து கோந்திராத்து—தயாராய் திங்கள் கிழமைக்குக் கொண்டுவரச்சொல்லவேணும் உங்கள் கையிலே யிருக்கிற கோந்திராத்துக் காகிதத்தை யெடுத்து வரச்சொல்லி நொத்தேராகிய முசியே நோயாலே யழைக்கச் சொன்னார். நானும் வீட்டுக்கு ஆளனுப்பி காகிதத்தை அழைப்பிச்சு தயாராய் யெடுத்து வைத்துக்கொண்டு வைத்திருந்தேன் முசியே நோயாலும் வந்தான். அவன் கையில் துரையவர்கள் குடுக்கச் சொன்னார். குடுத்தேன் புது வற்த்தகர் பேர்களும் பழயவர்த்தகர்பேர்களும் ஒரு சின்னதுணுக்கைகயில் யெழுதி வைத்திருந்தது—அதையும் குடுத்தேன். வாங்கிக்கொண்டு திங்கள் கிழமைகாலமே யெழுதிக்கொண்டு வாறேனென்று சொல்லிப்—போனான். நானும் காசாக்கச்சேரியே வந்தேன்.

கோந்திராத்திலே யெழுதின பேர்கள் வயணம்:—

| | |
|---|---|
| குண்டூர் பாலிசெட்டி.— | தயிலப்பசெட்டி. |
| சின்னய செட்டி.— | கங்கிப்பட்டிவீரா செட்டி.— |
| குழந்தை செட்டி.— | ஆதிவராக செட்டி. |
| தடிஅருணாசல செட்டி.— | ஆகயேழுபேர்—எழுதிவிச்சேன். |

1752-ஹு சூன்மீ 25உ ஆங்கிரசு ஹு ஆனிமீ 15உ ஆதிவாரம்.

இத்தனாள் துரையவர்கள் யென்னைப்பார்த்து மமுதல்லிக்கான் சேதி யென்ன வென்று கேட்டார். அவடத்திலேயிருந்து ஒருத்தனாகிலும் நான் பார்த்தேன் யென்று சொல்லத்தக்கனசாடையாய் வாரதிலைலே

மெய்யோ பொய்யோ வென்று சத்தே சந்தேகமல்லாமல் இப்படி யூரெல்லாம் சீர்மையெல்லாம் ஏகப்பேச்சாயி செத்துப் போனானென்று சொல்லச்சே அபத்தம் யென்று சொல்லுகிற தெப்படி—யிதல்லாமல் கூடலூரிலேதானே பேசுகிறார்கள். அங்கே உண்டாயிருந்தாலும் மறைக்குறயிடம் அப்படியிருக்க அப்படிப்பட்ட கூடலூரிலேதானே மழுதல்லிக்காளை முராரிராயன் வெட்டிப்போட்டானென்றும் போசிக்கொண்டால் பொய்யென்று யெப்படி எண்ணலாம். எல்லாம் பேச்சு மிரண்டுநாளைக்குள்ளே மெய்பொய் யென்று சொல்லுகிறது வெளியாயிப்போகுதென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக் கொண்டார் அப்பால் நான் காசாக்கச்சேரியே வந்தபிற்பாடு கூடலூரிலே யிருந்து ஒரு செட்டி வந்தவன் சொன்னானென்று—ஒரு கிரெஸ்தனி வடத்து வர்த்தகன் வந்து சொன்னதென்ன வென்றால் — — — — —

1752௵ ஜூன்௴ 26௳ ஆங்கிரச௵ ஆனி௴ 16௳
சோமவாரம்.

இத்தனாள் காலத்தாலே ஆஞ்சரை மணிக்கு இங்கிலீசுக்காறர்கள் பவுனசு—திரிச்சிராப்பள்ளியிலிருந்ததுல்-ஒரு இங்கிரேசுக்கப்பித்தானுக்கு அங்கே யெசமானாயிருக்கிற மேஸ்தர் கிலேசுக்கு (Mr. Clsic) ஆகாமல் அந்த யிங்கிலிசு சொல்தாது கப்பித்தான் பேர்விளங்களைக் காவல் பண்ணி திரிச்சிராப்பள்ளியிலிருந்து தேவனாம்பட்டணத்துக்கு அனுப்பிவிச்சயிடத்தில் அவன் நடுவழியிலே பிறப்பட்டு ஓடிவந்து யிவடத்துக்கு வந்து சேர்ந்தவனை துரையவர்கள் திரிச்சிராப்பள்ளி தண்டுக்கு அனுப்பின யிடத்தில் முசியே லாசுமிவனும் ஏக்கிபவச்சு—ஒருத்தருக்கொருத்தர் அனியோன்னியமாயிருந்துக் கொண்டு மத்தபிறான்சு—ஒப்பிசியால்மார்களை யெல்லாம் நிருகரிச்சு அவமரியாதைப் பண்ணுகிறபடியாலே அந்தப்பிறான்சு சொலுதாதுகளெல்லாம் யிவடத்துக்கு நாலத்துரெண்டு பேர்கள் தவிர மத்த பேரெல்லாம் வந்துவிட்டு முசியே லாசும் பேரிலே வெகுபிராது பண்ணினார்கள். அப்போ துரையவர்கள் யிந்த யிங்கிலீசுக்காரனை யழைப்பித்துக்கொண்டார்—அந்த நாள்முதல் நாளையவரைக்கும் யிங்கே யிருந்தானிங்கே யிருக்கிறநாளிலே நித்தம் நாலாறு பேருடனே சாப்பிடுகிறதும் விளையாடிக் கொண்டிருக்கிறதுஞ்சூதாடுகிறதும் யிப்படி யிருப்பான் அந்தசாடைப்படிக்கு நேத்தயராத்திரியும் சாறாயங்கள் குடிச்சுப்போட்டு முசியே —— —— யென்கிற ஒபிசியாருடனே சூதாடிக்கொண்டிருந்தானாம் யின்று சூரிய உதயவேளை அந்த பிறான்சு-ஒபசியால் ஆராயிரம் ரூபா தோத்து நாலாயிரம் ரூபா குடுத்து இரண்டாயிரம் ரூபாமட்டுக்கும் அட்டிசொன்னானாம் அதன் பேரிலே அந்தபிறான்சு ஒபிசியாலுக்கும் யிங்கிரீசு ஒப்பிசியாலுக்கும் ஒருத்தருக்கொருத்தர் பேச்சு நடந்து கத்தி உருவிக் கொண்டு சண்டைக்கு நின்றதில் பிறான்சு ஒபிசியாலுக்கு கையிலும் வயத்திலும் காயம் பட்டுது. அந்தக்காயத்தை வாங்கிக் கொண்டு அந்த யிங்கிரீசு ஒபிசியாலை குத்திப்போட்டு ஓடிப்போனான். அரியாங்குப்பத்து வழிக்கப்பிறம் போகமாட்டாமல் விழுந்தான். விழுந்தவனைக்கொண்டு வந்து சம்பாவுலுக்குக்கோவிலுவைச் சேர்த்தார்கள். அதன் பேரிலே முசியே பெடுத்தல்மீ-முசே பொசேத்தம் எங்கள் மேஸ்திரி வந்துபார்த்து விட்டு வரச்லெல்லாம் முந்திரிச்சு யிருக்கிறதை யெழுதிக்கொண்டு போய்விட்டார்கள். சாயங்காலம் பிணத்தைப் பொதைச்சுப்போடுவார்களென்று சொன்னார்கள்.

1752-ஹு ஜூன்மீ 27வ ஆங்கிரசுஹு ஆனிமீ 17வ
மங்களவாரம்.

இத்தனாள் பனிரெண்டடிச்சு ஒரு மணி வேளைக்கு திரிச்சிராப்பள்ளியிலிருந்து மமுதல்லிக்கான் காகிதங்களைக்கொண்டு ஒரு சுத்தபுசுவரா வந்து துரையவர்களுக்கு காகிதங்குடுத்து மறு காகிதம் சாயங்காலம் வாங்கிக்கொண்டு சென்னப் பட்டணத்துக்கு போனான். மமுதல்லிக்கா னுமனுபபின காகிதசேதி நான் கேட்டதை யெழுதிவைச்சேன.

கேட்டபடிக்கு யெழுதினேன் இனிமேல் வேறேயுண்டாயிருந்தால் கேட்டெழுதுகிறேன் பதிலுத்தரம் இங்கேயிருந்தும் சுறுக்காய் வஞ்சனை சத்தியஞ்செய்து கொடுத்து துரோகம் பண்ண உங்களை கொஞ்சத்திலே விடுகிறதில்லை உமக்கு யெசமானாகிருக்கிறவர்களுத் தாரதனை நீர் தள்ளி நடக்குறதைத் தொட்டு உமக்கு மோசம் வருமென்றும் எழுதினதாய்ச் சேதிகேழ்க்கப்பட்டுது.

1752ஹு ஜூன்மீ 28வ ஆங்கிரசுஹு ஆனிமீ 18வ
புதவாரம்

இத்தனாள் சூரிய உதயமான ரெண்டு நாழிகைக்கு முன் கொச்சின் சீனத்திலிருந்து (Cochin Chenie) வந்த மிசியோனர் சபை பீஷப்பு சியாமுக்கு சுலுப்பின் பேரிலே யேறிப்போய் அங்கே யிருந்தும் சீனத்துக்குப்போகப் பயணமாய் சுலுப்பின்பேரிலே றப்போறாரென்று நேத்து சாயங்காலம் தானே துரையவர்களுட னேயும் துரையவர்கள் பெண்சாதியுங் கோயிலுக்குவந்து யனுப்பி விச்சுக்கொண்டு போனதும் அல்லாமல் சின்னதுரை முசியே செம்போலையும் (St. Paul) முசியே கில்லியாரையும் ரெண்டுபேர்களை யும் கூடவழைத்துக் கொண்டுபோய் படகின்பேரிலேறி சுலுப்பின்பேரிலே கூடப்போயி ஏத்திப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு வரச்சொல்லி உத்தாரமானபடியினாலே முசியே செம்போலும் முசியே கில்லியாரும் கோயிலுக்கு வந்தார்களென்று கேட்டவுடனே நானும் போய் ரொம்ப உபசாரஞ் சொன்னவுடனே சுலுப்புயேறப்பயணம் பிறப்பட்டார்.

1752-ஹு ஜூன்மீ 29வ ஆங்கிரசுஹு ஆனிமீ 19வ
குருவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்டசேதியுங் கந்தனூரார் வெகுமானங் துரையவர்களுக்கும் மதாமுக்கும் வந்து தாம்பிதல்லாமல் மதனாந்த பண்டிதனுக்கும் ரெண்டு பறக்களாவந்து தென்னூர் பாப்பைய பிள்ளை தனக்கு வரயில்லை யென்று இங்கேயிருந்து போய்வந்தி அறுக்காருவை என் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் பகலைக்கு மேலாக சாயங்காலம் அஞ்சு மணி வேளைக்கு துரையவர்கள் கோட்டையிலிருந்து யென்னையழைப் பிச்சு சொன்ன சேதியெனவசத்தில் தஞ்சாவூர் பணம் ஒன்பதுனாயிரம் ரூபாயிதுவும் ஆருயிரம் ரூபாயிது அரியலூர் பணமும் யிருக்குது யிதுகும்பினிர் வற்த்தர்களையெடுத்துக் கொள்ளச்சொல்லு அவர்களுக்கு பிடவைகட்டுகிற உடையார் பாளையம் தெற்கித்து துலைகளுக்கு ஆமேயென்று கேட்டார் ஆமென்று சொன்னேன் விலையென்ன மாயிருக்குதுதென்று கேட்டார். விலை தஞ்சாவூர் பணம் ரூபாயிக்கு ஆரேமூனு வீசம் ஆமோகால் பணமாயிருக்குது கெட்டிப்பணம்——— விலையாயிருக்கு தென்றும் யிது அரைக்கால் பணம் வீசம்பணம் யேரவும் குறையவும் இருககும் ஆனபடிபினாலே கடை வழக்கத்தை விசாரித்துக்கொண்டு வழக்கப்படிக்கு வறத்தகருக்கு கொடுத்து விடுகுறது தானென்று சொன்னதுக்கு நல்லது நாளைக்கு காலத்தாலே ஞாபகம் பண்ணி பண்ணிக்கொடுத்து விடச்செய்யென்று சொன்னா. நல்லதென்று சொன்னவுடனே புதுசாயக்கட்டுகிற கோவறணமாமிலேயிருந்தவர் யெதிரகயிருந்த கோட்டை அலங்கம் யெல்லாம் பூஞ்செடிகள் வைப்பிக்குறது மதின அறைகள் கட்டிவிச்சு செவந்தகாரை பண்ணுகிறது. முதலான வேலைகள் செய்விக்குறயிடத்தே வந்தார் அங்கே யிருந்தும் சமீபமாய் கரைபிடிச்சு ஓடிவருகிற சிர்மை கப்பலைக் காண்பிச்சு இதோ ஓடிவருகிற கப்பலைப் பார்த்தாயா யிந்த கப்பலுடனே மூணு கப்பலாச்சுதே யின்னும் ஆறுகப்பல் வரவேணும் யிந்தமாசத்தையிலே மூணு நாலு கப்பல் வந்து சேருமென்று சொன்னார். சுவாமியினுடைய தபவினாலே கப்பல்கள் வருகிறதும் மாத்திரம்மாயிந்த மட்டுக்கும் சத்துருக்கள் விருத்தியாயிருக்கிறார்கள் யினிமேல் நாளுக்கு நாள் சத்துருக் களுக்கு நாசகாலமும் உமக்கு செயக்காலம் ஆனபடியினாலே நடக்குமென்று சொன்னேன் அதுக்கு நகைச்சுக்கொண்டுயிருக்கச்சே துறையிலே கப்பலைக்கொண்டு வந்து வைத்துப் பிடித்துப் பதினேரு பீரங்கிப் போட்டான் துரையிலேயும் அதுக்குச் சரியாய் பிரங்கிப் போட்டது. பாத்துக்கொண்டிருக்கச்சே கட்டுமரம்போயி காகிதம் வந்தது. அந்தக் காகிதம் பார்த்துக்கொண்டு துரையவர்கள் கோட்டையிலே அலங்கத்தின்பேரிலேயிருந்தவர் வீட்டே போனார் கப்பல் போறேனு (Le Renee) வென்றும் கப்பல் கப்பித்தான் பேர் மூசியே திருபரியேர் என்றுஞ்சொன்னார் களிந்தக் கப்பலிலே நூத்தாறு பெட்டி வெள்ளிவந்ததென்றுங்கொஞ்சம் சகலாத்தும் வந்துதென்றும் எழுபதுபேர் சொலுதாதுகள் வந்தார்களென்றும் சொல்லிக்கொண்டார்கள். அப்பால் கப்பல் கப்பித்தான் ஆரரை மணிவேளைக்கு துரையவர்கள் வீட்டுக்கு வந்து கண்டு சந்திச்சு சிமை காயிதங்கள் கும்பினியார் அனுப்பினது கொடுத் தான். அந்தக் காகிதத்தை வாங்கிக்கொண்டு துரையவர்களை சத்துநேரம் கப்பல் கப்பித்தானுடனே பேசியிருந்து அப்பால் காகிதம் படித்துப் பார்க்க கபினேத்தைப்போனார்.

இந்தக்கப்பல் சேதி ராத்திரி கேட்டதென்னவென்றால் துரையவர்களுக்கு பிரஞ்சு ராசாவினுடைய கூத்தியார் மதாம் பொம்பதூர் யென்கிறவள் ஒரு பொன் கெடியாரம் யிசுமாஸ் வேலைசெய்து வியிரம் பதிச்சு பெகுநேத்தியாய் வேலைசெய்தது

மல்லாமல் மற்ற நூண்ணியமான வேலைக்காறன் பெகுபிறயாசப் பட்டு சிறிது விந்தைகள் அதிலிருக்கச்செய்ததாம் அது ஒன்றும் பொன்னுலே செய்த கத்திரி முதலானதும் கத்தி முதலான ஆயுதங்கள் வைக்கிறது கஞ்சாபென்று பேர் சொல்லுகிற பெண் கூண்டு யிசுமாறுத்து வேலை பெகுநேத்தியாய்ச் செய்திருக்குதாம் அதுவொன்றும் ஆக இரண்டும் உருப்படியும் ஆயிரம் விராகன் விலைபோறும்யென்றும் அதுஅனுப்பிவிச்சதாய் துரையவர் களுடனே கப்பல் கப்பித்தான் கொண்டுவந்து துரையவர்களுக்கு குடுத்தான் அதை துரையவர்கள் யங்கேயிருந்த வெள்ளைக்காறர்கள் வெள்ளைக்காறச்சிகளுக்கு காண்பிச்சுயிந்த ஒறலோசு மதாம் பொம்பதூரனுப்பிவிச்சாள் வெகுமானமென்று சொல்லி யிது யெனக்கு அறுபதினாயிரம் ரூபா சென்றுதென்று சொல்லிக் கொண்டு பே சி ரங்காரென்று வெள்ளைக்காறர் சொன்னார்கள். ஆயிரம் விராகன் விலைபெறுகிறது அதை அறுபதினாயிரம் ரூபா விலை சொல்லக்காரியமென்ன வென்றால் துரையவர்கள் ராசாவினுடைய கூத்தியாரென்று காரியாறத்தமாய் அறுபதினா யிரம் ரூபாயி அவளுக்கு பரிதானம் அனுப்பியிருப்பார் அதை வாங்கிக்கொண்டு அவளிவாுக்கு இந்த இரண்டு வஸ்துவும் வெகுமானமாக அனுப்பினபடியினாலே துரையவர்கள் இந்த ரெண்டு வஸ்துவும் எனக்கு அறுபதினாயிரம் ரூபா சென்றுதென்று சொன்னார் என்று வெள்ளைக்காறர்கள் சொன்னார்கள்.

இத்தனாள் முசே லததூர் என்கிற சொலுதாது கப்பித்தான் தனக்கு உத்தியோகம் கவையில்லை தமக்குப் போகவேணுமென்று எழுதிக் கொடுத்தானும் அதுக்குத் துரையவர்கள் நல்லதென்று உத்தாரங்குடுத்தார். அவனேன் ஒப்புக்கொள்ளவில்லையென்றால் அவனுடன்கூட வந்த முசே தொத்தேலை முசியே புரிக்குப் பதிலாக நேமிச்சுயிருப்பதினாலேயும் முசே லதூர் முசே தொத்தேலிடம் கீழ்ப்படிந்து நடக்க யிஷ்டமில்லாததைத்தொட்டும் சீர்மையிலே தன் பிறாதுகளைச் சொல்லவேணுமென்று யிருந்ததினாலேயும் வேலையை மறுத்துவிட்டானென்றும் சேதி கேழ்க்கப்பட்டது.

1752ஞ் ஜூன்மீ 30உ ஆங்கிரசுஞ ஆனிமீ 20உ
சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போன விடத்திலே கபுறு மத்ததுகளான பிற்பாடு முன் 16உ திங்கள் கிழமை மணிலாவுக்குப் போற கப்பல் பாயெடுத்து கோவலத்திலே யிருந்தவாக்கிலே மணிலாவுக்கு ரவாணாவாகப்போச்சுது. இனிமேல் சென்னப்பட்டணத்திலேயிருக்கிற யெழுத்து லம்பாசு யெழுத்துச் சிட்டிகள் முதலானது மணிலாக் கப்பலுக்குயேத்த விட்டுகிறதில்லை யென்றல்லோ மேஸ்தர் சாந்தரசு பந்து பண்ணின படிக்கு கப்பலிலே சரக்குகள் யேறாமல் பாயெடுத்து ஓடிப்போச்சுது. இனிமேல் அந்த சரக்குகள் பேரிலே அத்தனை பத்திரம் பண்ண மாட்டான் ஆனபடியினாலே சரக்கை ராத்திரி பகலாய் சாடையாய் அழைப்பிச்சுக்கொள்ளச் சொல்லி நீ சொல்லுகிறபோலே

சொல்லென்று சொன்னார். நல்லதென்று வந்து அப்பால் மனிலா சரககு கூட்டின பேர்களை யழைபபிச்சு அவரவருக்குச் சொல்லி அனுப்பிவிச்சு நானும் என் சரக்கு யழைப்பிக்குற சாடைக்குச் சென்னபட்டணத்துக்கு காகிதமெழுதி யனுப்பிவிச்சேன்.

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி முசியே தொத்தேலே யழைப் பிச்சு ரெண்டாயிரம் பேர்களை துப்பாக்கி சுடுகிற பேர்களை அமத்தி யெழுதி வைக்கச் சொல்லி சொனனுரென்றும் அவரவர் முன் சமேதாரராய்யிருந்தவர்களையெல்லாம் அழைப்பிச்சு . யவர்களை யிறநூறு முன்னூறு பேர்களை வைக்கச் சொல்லிச் சொன்னதாய் அவர்கள் கூட்டங்கூட்டமாய் போயி யெழுதுகுறார்கள் யென்று சொன்னார்கள். நானும் கண்ணினுலேயும் பார்த்தேன். மீறுசா அப்துல் நபிபேக்கை யழைப்பிச்சு அன்னூறு சிப்பாயிகளை சுவார்களை வைக்கச் சொல்லி சொன்னுரென்றும் இதுக்கு முன்நூறு சுவார் மட்டுக்கும் செஞ்சியிலிருக்கிறதுபோக மத்த யிறநூறு சுவாரை வைக்கச் சொன்னபடிக்கு வைக்குறான்யென்று சொன்னார்கள்.

1752ஸு சூலைமீ 1௳ ஆங்கிரசஸு ஆனிமீ 21௳ சனிவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி தேவனும்பட்டணத்திலே கொண்டு வந்து வைத்திருக்கிற சொலுதாதுகள் நிமித்தியம் சேக்சேன் நிமித்தியமும் துரையவர்கள் சென்னப்பட்டணம் கோவர்ணதோருக்கு காகிதமெழுதிக்கொண்டு யிருக்கிறதுமாய் உத்தாரம் வருகிறதுமாய் சேதி கேழ்க்கப்பட்டுது

இத்தனுள் சாயங்காலம் யாச்சமனுபக்கன் குமாஸ்தாக்கள் திருமலைராயனும் ராமச்சந்திரராயனுட துறையவர்கள் கையில் அனுப்பிவிச்சுககொண்டு போனார்கள் முன நாசறு ஙங்கு செத்த போது பங்காரு வேலி கொட்டி யாச்சமநாயக்கன் குமாரன் அண்ணன் தம்பிமார் வந்தபோது அவர்கள் பஞ்ச ஆசாரி மன்சுபைக்கு இரண்டு லட்சம் ரூபாயிதாய்த்து மொகதீன்கானுக்கு கொடுத்தபோது லட்சம் ரூபாயாக சந்தா சாயபுக்கு ஒப்புக் கொண்டதுக்கு துரைபவர்கள் சமாயி லட்சம் ரூபாயுங்குடுகது செல்லுஞ் சிட்டும் பஞ்ச ஆசாரி மன்சுபைக்கு சன்னதுகள் லட்சம் ரூபாய் செல்லுகிற நிமித்தியம் துரையவர்கள் வச ாயிருந்தனதயும் வாங்கிக்கொண்டு தறுபாறு சிலவென்றும் வட்டவியனெவறும் யிசமான்களுக்கு யெழுதியனுப்பிவிச்சு யிருபதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் செல்லிட்டதாய் சேதி கேட்டேன். இந்த இருபதி னாயிரம் ரூபாயில் அஞ்சாறு மதனாந்தபண்டிதனுக்கும் வட்டம் சம்மதி ரெண்டாயிரம் மூவாயிரம் சிலவென்றும மத்தது சந்தா சாயபு தறுபாறு கருச்சென்று மீந்தப்படிக்கு யெண்பிச்சு யிவர்கள் சுத்திப்போட்டதாய்ச் சொன்னார்கள். யெனக்கும் மெய்யய்த்தான் தோணுது. எசமானுக்கு ஒரு சிறுப்பாயவிலே வாங்கிப் போகவில்லே.

1752-ஆம் வருஷம் ஜூலை மீ 3௳ ஆங்கிரசு வருஷம் ஆனி மீ 23௳ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்தில் துரையவர்கள் செஞ்சிக்கு பவுன்சு யனுப்புகிற அலுவலிலே யிருந்தபடியினாலே கும்பினீர் கோந்திராத்திலே வர்த்தகர்கள் கையெழுத்துப்போடுவிக்குற காரியம் இன்றைய தினம் அட்டியாயி நின்றது நின்று நான் காசாகக் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் வேலூரிலேயிருந்து மிறுத்தி சல்லிகான் வக்கீல் இஷ்ணூசி கோனேரி பண்டிதன் என்கிறவன் ஒரு பல்லக்கும் பேரிலே ஏரி அஞ்சாறு அறுக்காறுகளும் அவனுமாக வந்து சேர்ந்து துரையவர்களுக்கு பதினொரு ரூபாயும் மதாம் துய்ப்ளேயிக்குக்குப் பதினொரு ரூபாயும் நசர் வைத்துக் கண்டு ஆற்காட்டு சுபா காரியங்கள் முன் சந்தா சாயபு மாரிபத்தில் நடப்பிச்சீர்களே அவர் காரியம் அப்படியிருக்குது. யிருந்துப்போச்சுதே இப்போ யென்மாரிபத்தில் நடப்பிச்சால் சகல பாளையக்காறர்களும் என் கைவசமாயி யிருக்கிறது. வுங்கள் குமுக்கும் வந்தால் ஒரு நாழிகையிலே ஆற்காட்டு கோட்டையும் வாங்கி சீமையும் பந்து பஸ்து பண்ணிவிக்கிறேனென்று சொல்லியனுப்பினதாய் கேழ்க்கப்பட்டுது.

1752ஆம் வருஷம் ஜூலை மீ 5௳ ஆங்கிரசு வருஷம் ஆனி மீ 25 புதவாரம்

இத்தனுள் துரையவர்களண்டைக்குப்போய் கபுறு சொன்ன விடத்தில் வர்த்தகர்கள் யெந்தெந்த துலைகளுக்கு பணம் அனுப்பி விச்சார்களென்று கேட்டார் நீங்கள் குடுத்த யிருபதினாயிரம் விராகனுக்குப் பதினாயிரம் விராகன் ஓடையார்பாளையத்துக்கு அனுப்பினார் இத்தனுள் முசேலாசு அவ்விடத்திலே நடப்பிச்சகாரியங்களை யெல்லாம் அங்கேயிருந்து வந்த வக்கீல் அப்பன் பண்டிதன் முசேலாசு துபாசிகள் சவுரிராயன் பரமானந்தன் இன்னாசி முத்து வகைபிராக்கள் யெழுதிக் கொடுத்துது சங்கதிகளெல்லாம் பிரான்சுப்படுத்தினார்கள். அதை யெல்லாம் பரீஷ்ஷிக்குறார்கள் யென்றும் அந்தக்காரியத்தின் பேரிலே துரையவர்களிருக்கிறார்கள் யென்கிற கபுறு கேட்டது மல்லாமல் விநாயகப்பிள்ளை மனுஷர் தண்டியிலே யிருந்தவர்கள் சொன்னத்தை யெழுதிவந்து முத்தய்யனும் விநாயகனும் கொடுத்தார்கள் யென்றும் சொல்ல கேழ்வியானேன். சாயங்காலம் துரையவர்கள் அழைக்கவில்லை.

1752 ஆம் வருஷம் ஜூலை மீ 7௳ ஆங்கிரசு வருஷம் ஆனி மீ 27௳ சுக்கிரவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் யெழுந்திருந்து உடுத்திக் கொண்டு கதவு திறக்க ஒன்பது மணி சென்றது. கதவு திறந்தவுடனே நான்போய் காணபிச்சுக்கொண்டு கபுறு சொன்னேன் மயிசூராருக்கும் ஒன்றுக்கொன்று ஒவ்வொருவருக்கும் ஒவ்வாமல் மயிசூரார் மனுஷர் வக்கீல்கூட உள்ளே வரவொட்டாமல் பத்திரம் பண்ணி கோட்டை இங்கிலீசுக்காறர் ஆதீனம் பண்ணியிருந்ததாய் ஆனபடியினாலே

கோட்டை யவர்கள் கொடுக்கிறதில்லை யென்று சொல்லிக் கொண்டு ஒருத்தரையும் வரவொட்டுகிறதில்லை யென்று சொல்லுகிறார்கள். நான் செய்யத்தக்க தென்ன வென்றும் மமுதல்லிக்கான் சொன்னதின் பேரிலே மயிசூரார் தளவாய் நந்திராசாவும் முராரிராயனும் வெளியே இறங்கியிருந்துக் கொண்டு மமுதல்லிக்கானை வொட்டாமல் கோட்டை வாங்காமல் விடத்தக்கதில்லை யென்று சொல்லிக் கொண்டு யிருக்கிறார்களென்று துரையவர்கள் சொன்னார்கள் அதற்கு நான் சொன்னது மெயிதான் நீ கேட்டகபுறு அல்லாமல் நான் கேழ்விப்பட்ட சேதி உங்களண்டைக்கு மனுஷரை யனுப்புகிறதாய் திரிச்சிராப்பள்ளி கோட்டையும் பேஷ்க்கனு யென்னவுண்டோ அது வருஷா வருஷம் சாதுல்லாகானுக்கு கொடுத்த படிக்கு கொடுக்கவும் உங்கள் பவுன்சுங் கூட கூட்டிக் கொண்டு அவர்கள் பவுன்சும் கூட்டிக்கொண்டு திருச்சிராப்பள்ளி கோட்டையும் வாங்கிக்கொண்டு ஆற்காடு முங்கள் வசம் பண்ணிக்கொடுக்கவும் அப்பால் நீங்கள் எந்தக்காரியத் துக்கு வரச்சொன்னாலும் அந்த காரியத்துக்கு பவுன்சுடனே வந்து உமக்கு குமக்கு பண்ணிக்கொடுக்கவும் யிந்தப்படி வுங்களை உடன் படிக்கை கேழ்க்க மனுஷர்கள் வாரதாயி சேதி கேட்டேன். மெய்யும் பொய்யும் எட்டுபத்து நாளையிலே தெரியுமென்று சொன்னதுக்கு வந்தாலப்போ பேசுவோ மென்று சொன்னார். அதிலே சீர்மை கப்பல் கப்பித்தான் முசியே பெடித்தலேன் பேரிலே ஏதோ சிறிது சம்மதி சொல்லி காகிதந் துரை கையில் கொடுத்தான் அதின் பேரிலே முசியே பெடுத்தலேனை அழைப்பிச்சு யேதோபேசி யிருந்து இரண்டு பேர்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள். அப்பால் முபியே லாசு காரியமும் பின்னையும் எழுதப்போற சாடையுமாய்க் கண்டுது. அதின் பேரிலே நான் காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1752 ௵ ஜூலை ௴ 8௳ ஆங்கிரசு ௵ ஆனி ௴ 28௳ சனிவாரம்.

இத்தனாள் மத்தியானம் ராமதாசு பண்டிதர் சிறிய தாயார் குமாரன் கோதண்டராம பண்டிதர் தங்கள் சீரமைக்குப் போறதுக்கு துரையவர்கள் அண்டைக்குப்போய் அனுப்பிவிச்சுக் கொண்டுபோனார் துரையவர்கள் ஒரு சிறெப்பாவுங்கொடுத்து செலவுக்கு அய்யாயிரம் ரூபாயும் கொடுத்துப் போகச்சொன்தாய் சேதி வந்தது. சொன்னார்கள் நாளையதினம் பரஸ்தானம் பண்ணி அப்பாவிரண்டு மூன்று நாளையிலே படகின்பேரிலே யேரி கரையேடுராமய்யப்பட்டணம் அந்த வட்டங் களில் யிறங்கி யங்கே யிருந்தும் வங்கோல் ராமச்சந்திராசா ரகுபதி ராசா யவர்கள் சீரமையிலிருக்கிற குஞ்சு குழைந்தைகளுடனே கூடப் போயிருந்தால் அப்பால் ராமதாசு பண்டிதன் தம்பி நறசிங்கராயன் பேச்சுருசுவானால் கோல் கொண்டைக்குப் போகயில்லையானால் வங்கோல் றகுபதிராசாவந்து பிறமண பிறபு ஆனபடியினாலே மாற்கமாய் காலக்ஷேபத்துக்கு ஒரு கிறமம் தத்து சுறோத்திரியம் போலே பண்ணிக் கொண்டு அங்கேயிருக்கிற யோசனையின் பேரிலே பிறப்பட்டாரா அப்பால் சுவாமிகளுடைய சித்தம் எப்படியோ-யப்படி நடக்கப்போகுது.

ராமதாசு பண்டிதர் இவரை இவ்விடத்துக்கு அனுப்பிவிச்சு ஒருவருஷகாலமாச்சுது. காஞ்சிபுரம் முதலான ஸ்தலங்களிலே சிறிது தற்மம் பண்ணுகுற நிமித்தியம் காஞ்சிபுரம்

சிரமையை இவர்வசம் பண்ணச்சொல்லி சந்தாசாயபுபேருக்கு சன்னத்து துரைபேருக்கு சன்னத்தும் வாங்கிக்கொண்டு வந்த விடத்திலே அதுக்கு கூடாமல் புதுச்சேரியிலே உளுக்காரவைத்து கவாச்சாக்கயிங்கிறியம் பண்ணிக்கொண்டு ஒரு காசிசிலவுக்கு கூடாமல் உளுக்காரவைத்து கொண்டார். சந்தாசாயபு சிலவுக்கு கொடுத்து நடப்பிச்சுக்கொண்டு வந்தார். ராமதாசு பண்டிதர் செத்தவுடனே வாச்சாகயிங்கிரியம்கூட நின்றது. இவ்வடத்துபேச்சு சந்தாசாயபு பேச்சு யவ்விடத்திலே யப்படி நடந்தும் போச்சுது அப்பால் ராமதாசு பண்டிதன் யெங்கள் காரியத்தை யெல்லாம் கெடுத்துப்போட்டான் என்றிவர்கள் போனால் நிஷ்டூரம் சொல்லத் தலைப்பட்டார்கள். அதன்பேரிலே யிருந்தால்யென்ன உபத்திரவம் வருமோமென்று ஒரு பயம் செனிச்சு அனுப்பிவிச்சுக்கொண்டு போறதாய் சொன்னது மல்லாமல் ராமதாசு பண்டிதன் இருபது லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் சாகிர் பந்தர் சிரமை தேவணக்கோட்டை முதலான சிரமைவிட்டது மல்லாமல் வழுதாவூர் கோட்டையையானமு குடுத்து அவருக்குப் பத்துலக்ஷம் ரூபாயி சிரமை சாகிர்விட்டது மல்லாமல் இருபத்தஞ்சு லக்ஷம்ரூபாய் முப்பதுலக்ஷம் ரூபாயும் யிசமானுக்கும் யிசமானிக்கும் யிசமானுட குமாரத்திக்கும் இனாம் கொடுத்தது.

இத்தனாள் சாயங்காலம் ஆறுமணிக்கு மழையுங்காத்து வந்து அரை நாழிகை ஒருநாழிகை மட்டுக்கும் அரைசெவி மழை முக்கால் செவிமழை மட்டுக்கும் பேஞ்சு அப்பால் தூத்தலா யிருந்து ஆனபடியினாலே மழை தூத்தல் விட்டவுடனே எம்பெருமாள்பிள்ளை குமாரத்தியை சின்னத்தம்பிபிள்ளைக் குமாரனுக்கு விவாக முகூர்த்தம் ராத்திரி ரெண்டு நாழிகைக்கு மூகூர்த்தம் நிஷகருஷைப் பண்ணியிருந்தபடியினாலே ராத்திரி வீட்டுக்குப்போய் சாப்பிட்டு பதினொரு நாழிகைக்கு முகூர்த்தத் துக்குப்போயிருந்து முகூர்த்தத்துக்கு சகல சனங்களும் வந்தார்கள் யெல்லாருக்கும் பன்னீர்—அத்தர் பாலு—முதலான பாக்கு வெத்திலைகூட கொடுப்பிச்சு அப்பால் முகூர்த்தம் நிறைவேறின வுடனே ராத்திரி பதினஞ்சரை நாழிகைக்கு வீட்டுக்குப் போனேன் அவரவர்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள்.

### 1752-ஷ ஜூலை 9உ ஆங்கிரசு ஷ ஆனி 29உ
### ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் கோவிலுக்குப்போய் வந்தவுடனே ஒன்பதரை மணிவேளைக்கு நான்போய் கண்டு சொன்னவுடனே துரையவர்கள் தம்முட சொக்கு கணக்குப் பிள்ளையை யழைத்து நெல்சாகிர் கிறுமத்திலே எம்மாத்திரம் பின்னம்யிருக்குதென்று கேட்டார் இனிகொஞ்சம் தானிருக்கிற தென்று சொன்னான் நேத்து வந்த நெல் ஆறதென்று கேட்டார் வறத்தகருதென்று சொன்னேன் அப்பால் முசியே புரியுடனே பேசிக்கொண்டிருந்து எழுதுகிற கபினேத்துக்குப் போனார். நானென்கச்சேரியே வந்தேன்.

## 1752ஷு ஜூலைமீ 10வ ஆங்கிரசுஷு ஆனிமீ 30வ
## சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே ஒன்பதரைமணிக்கு தெருவாசக்கதவு திறந்தார்கள் ளென்கிறசேதிவந்தானவுடனே நான் போனவுடனே திரிச்சிராப்பள்ளி சேதியேதாகிலும் கேழ்விப்பட்டதுண்டா வென்று கேட்டார் உண்டென்று சொல்லி திரிச்சிராப்பள்ளியிலே யிருந்து மயிசூரார் கண்டு உரையூரிலே யிறங்கியிருக்கிறதே—அதிலிருந்தும் ஒரு பிறுமணன் சொன்னசேதி மயிசூரார் தளவாயின் நந்திராசாயிருக்கிறவனுக்கும் மமுதல்லிக்கானுக்கும் மனது போதாமலிருந்துதே—மயிசூரார் மனுஷரை கோட்டைக்குள்ளே வரவொட்டாமலும் வக்கிலையும் கூட விடாமல் யிருந்ததின்பேரிலே மயிசூரார் நம்முடதண்டியிலே யிருந்து ஓடிப்போனார்களென்றும் துப்பாக்கிக்காறர்கள் அவர்களையெல்லாம் சேவுகத்துக்கு வைக்கிறதுமல்லாமல் சிறிது குதிரை சுவார்கள் கூடவைத்து மமுதல்லிகான்பேரிலே சண்டைபண்ண உத்தியுக்தராயிருக்கிறதாய் சேதி கேழ்விப்பட்டு அதின்பேரிலே மமுதல்லிக்கான் வக்கீலை அனுப்பிக் கோட்டையும் சீமையும் உங்களுக்கு குடுக்கிறோம் நான் ஆற்காட்டுக்குப் போய்ச் சேர்ந்து நிலைத்த உங்களுக்கு கறாருபடிக்கு நடப்பிச்சுப்போடுகிறோமென்று சொல்லி அனுப்பினதுக்கு முன் கறாரு எழுதிக்கொடுத்து சத்தியம் பண்ணிக்கொடுத்தபடிக்கு நடப்பிச்சேயே—யிப்போ நடப்பிக்கிறதுக்கு ஆனபடியினாலே சந்தாசாயபு காரியம் சரிப்பிடிச்சாப்போலே கோட்டையும் சீரமையும் யெங்கள் வசம் பண்ணுகிறது அப்பால் நான்கூட யெங்கள் பவுன்சு முராரிராயன் பவுன்ஸ்கூட புறமை ஆற்காட்டிலே கொண்டுபோய் உலுக்காரவைத்து உமக்கு சீரமை பந்துபஸ்து வாகந்தன்னிலும் கூடயிருந்து அப்பால் அனுப்பிவிச்சுக்கொண்டு போறோமென்று சொன்னதாயி யிந்த மட்டிலே பேச்சுவார்த்தை நடக்குறதாயி மமுதல்லிக்கான் கொஞ்சத்திலே சம்மதிச்சு திரிச்சிராபபள்ளி குடுக்கிறதில்லை அவர்கள் நாற்பதுலக்ஷம் ரூபாய் மட்டுக்கும் சிலவுபண்ணி வெகு சனங்களை சாகக்குடுத்து காரியம் நிறுவாகமாலருக்க விட்டு விடுவார்களா—விடத்தக்கதில்லை யென்றும் யெப்படியாகிலும் மமுதல்லிக்கானை உபாயமாயழைப்பிச்சு சரிப்பிடிக்கிறது இல்லாவிட்டால் கைபிடியாய் பிடிக்குறதென்று நித்துக்கொண்டிருக்கிறதா சொன்னதுமல்லாமல் நீங்கள் பேஷ்கஷு வாங்கிக்கொண்டு திரிச்சிராப்பள்ளி கொடுக்கிறதானாலும் உங்களுக்கு அனுகூலமாயி பவுன்சுடனே கூடவந்திருந்து ஆற்காடு உங்கள் வசம் பண்ணிவிச்சு அப்பால் தாங்கள் திரிச்சிராபள்ளியை வாங்கிக்கொள்ளுகிறோம் யென்று முன்னும் யிந்த ராச வட்டம் உங்களுக்கு விட்டிருந்தார்களே அந்த ராசவட்டம் இப்பவும் விடயோசனை பண்ணி மனுஷர்களை அனுப்பிவிக்கிறதாயிருக்கிறார்கள் யென்கிற கபுறு யிதலலாமல் மயிசூர் ராசா தன்வாயனை திரிச்சிராப்பள்ளியை வாங்கிக்கொண்டு தனியே ராசரீக்கம் பண்ணநினைத்து யிருக்கிறார்கள் இவர்களை மிஞ்சுவிட்டால் மோசம் வரும் விடாமல் முனராசா சரிப்பிடிச்சாபபோலே தன்னையும் பிடிச்சு அப்பால வங்கங்கட்டிக் கொள்ளுவார்களான படியினாலே இதுக்குப் பிலத்த ஆசார்தேடி பிலன்பண்ணிக்கொண்டு அப்பால் தளவாய்மாரை பாட்டிலேயிருக்கயோசனை பண்ணி அதுவேறே ராச

வட்டம் வரதாயிருக்குதென்று கபுறுகூட சொன்னுனென்று சொன்னதுக்குச் சமமதியில்லாத உத்திரவாய்ச் சொன்னூர் நல்லது யென்று நான் பின்னேயும் லோகாபிறமமாய்ப் பேசியிருந்து திரிச்சிராப்பள்ளியிலிருந்த யிங்கிலீசுக்காறர் மனுஷர்களை முப்பது பேர் கோட்டையிலிருக்கிறவர்கள் தவிர மத்தப்பேரெல்லாம் வூட்டத்தூர்வாலிகொண்டாபுரம் வந்து சேர்ந்தார்கள் யென்று சொல்லி அப்பால் நான் காசாக்கச்சேரியேவந்தேன்.

1752வ௵ ஜூலை௴ 11உ ஆங்கிரசுவ௵ ஆனி௴ 31உ
மங்களவாரம்

இத்தனுள் துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு போனவிடத்திலே அவ்விடமிருந்து கோட்டைக்குப் போனேன் அவ்விடமிருந்து துரையும் நானும் வண்ணாந்துறைக்கு போனவிடத்திலே செப்புப்பானையின்னம் வரவேண்டியது வந்து சேர்ந்து அடுப்புக் கட்டி ஆகவில்லையென்று சொன்னூர்கள் எப்போவருமென்று கேட்டார். இருபது பானைகள் வந்தது அதையெடுத்து அனுப்புகிறேன் என்று சொன்னேன். நல்லதென்று சொல்லி சமுத்திரத்தை பார்த்து பெருமூச்சு விட்டார். நீங்கள் சமுத்திரத்தைப் பார்க்கிறது தெரியவந்தது. சுவாமியுடைய தயவினாலே நாளையொருதினமில்லே நாளை நன்றைக்கு கப்பலும் வருது சுவாமியுங்களுடைய மனதிலே யிருக்கிற கோரிக்கைப்படிக்கி நாளைமுதற்கொண்டு தயவுபண்ணி நடக்கப்பண்ணுவார் யின்றையுடனே போல்லாதகாலம் போச்சுது நாளை முதற்கொண்டு நல்லகாலத்துக்கு ஆரம்பிச்சு தினந்தினம் அபிவிருத்தியாய் நடக்குமென்றுமயிது இஷ்டாந்திரமாய் அறியப் போறீர்கள் யென்று சொன்னதுக்கு முப்பேத்துசேமேறுயென்று சொல்லி தலைவந்து ஆசாரம் பண்ணினூர் நானும் ஆசாரம் பண்ணி அப்பால் உசந்த தவுலத்தைக் கொடுத்துக்கொண்டுவந்தது.

அதுயெப்படி யென்றுல் முதல் முதல் இங்கிறேசுக்காறர்கள் ராசாக்கப்பல் வந்து நம்முட மனிலாக்கப்பல் சீனக்கப்பல் அச்சிப் லோரிக்கப்பல் வகையிராக்களைப் பிடிச்சு புதுச்சேரியையுங் கடலின் பேரிலே குரோதனவூத்திலே முத்திகைப்போட்டுக் கொண்டபோது நீங்கள் அச்சேகிலேசமனுபாவிச்சீர்கள் அப்பால் அக்ஷவ௵ சென்னப் பட்டணம் பிடிச்சுக்கொண்டு ருச்சியமெல்லாம் கீர்தி பெற்றது மல்லாமல் யேரோப்பா ராச்சியமெல்லாம் கீர்த்தி பிறகாசிச்சது அப்பால் விபவ௵த்தில் மேஸ்தர் புஸ்கவேன் **(Ms. Boscowan)** அமிறால் மலாராடு என்கிற கோந்திர்யமிறால் ஆராயிரம் சொலுதாதுகளுடனே வந்து பின்னேயும் தேவனும்பட்டணம் பவுன்சு-நாற்பது கப்பல் அன்வறதிகான் அனுப்பின அப்துல்சவீல் வகையிரா பவுன்சுகள் வந்து ரெண்டு மாசகாலம் பட்டணத்திலே குந்தாணி பீரங்கிகள் இருபத்தாறு முப்பத்தாறு ருத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிளிலே யிருந்தும் நெருப்பு வருஷமாய் வருசிஷிச்சு ஆக்கிருக்கு கையிலாகாமல் முகம் கறுப்புபண்ணிக்கொண்டு ஓடிப்போனபோது உமக்குக் கீர்த்தி வந்தாலும் அப்போவெகு கிலேசத்துக்கு இடமாயிருந்தது. அதுக்குப் பதில் சுக்கிலவ௵த்தில் அன்வறதிகானுகிய ஆற்காட்டு நவாபுவை

சந்தாசாயபு யிதாயத்து மொகதின்கானைக் கொண்டு தலையை வெட்டி விச்சு ஆற்காட்டுசுபா கைவசம் பண்ணிக்கொண்டீர் அப்பால் பிறமதோதுலு நாசறுசங்கு வந்தபோது இதாயித்து மொகதின் கானையும் பிடிச்சுக்கொண்டு நம்முடைய பவுன்சும் பிறப்பட்டு ஓடி வந்ததும் அதைத் தொட்டு ஒரு கிலேசம் உண்டாயி அப்பால் நாசறு சங்குவைக் கொண்டு மச்சிலிபந்தர் பத்துலக்ஷம் பனிரெண்டுலக்ஷம் யெடுக்கிறசீர்மை கும்பினீருக்கு சாகிரும் அதல்லமல் தேவணக் கோட்டை நீசாம் பட்டணம் தீவுவகையரு சீமைகளும் சாகீரானது மல்லாமல் அவ்விடத்திலே வழுதாவூர் சீர்மை, கருங்குழி சீர்மை, நவுமார் சீர்மை வகையிராவிலே பத்து பதிமூணுலக்ஷம் ரூபாயிக்கு சாகீரும் அபுத்அசாரி–மன்சுபாவுமாயி மறுத்தபு முதலான பிருதுகளும் கிருஷ்ணைமுதல்–கன்னியா குமாரிவரைக்கும் யீயலட்டியும் கிடைச்சது ற்றுட்டக சுபையையும் உம்முடையபேருக்கு ஆச்சுது ஆங்கீரக வருஷத்திலே மமுதல்லிக்கான் திருச்சிராப்பள்ளியில் போயிருந்த முசியேலாசு வகையிரா பவுன்சுகள் முழிகினதும் அல்லாமல் கசானு நாலுலக்ஷம் போனதும் அல்லாமல் யெசமானாக யிருந்த சந்தாசாயபை தலையை வெட்டிப் போட்ட விசாரம் யிப்போ வந்து சம்பவிச்சது இதுக்கு சந்தோஷம் ஒசருகிறதுக்கு டில்லியில் கொண்டு போய் செண்டா போடவேண்டியதாமே யானபடியினாலே இந்த அடுத் தீவுக்கு சுவாமி தயவு இருந்துநடந்துதானால் கிருஷ்ணைக்கு யிப்புறம் மயிர்சூ தஞ்சாவூர்–திரிச்சிராப்பள்ளி வகையிரா சீமைகள் யெல்லாம் நீர் யெசமானா டில்லியிலும் உம்முடனே செண்டா பறக்க கிடைக்கு மென்று சொன்னதுக்கு தொப்பி கழட்டி ஆசர்ரம் பண்ணி மறுபடி முயித்து மெற்சே மோன்கியோர் ரங்கப்பிள்ளை யென்று சொல்லி அப்பால் யிப்போ கோட்டையிலே கட்டுகிற குவற்ணமாவுக்கு அடியிலே தாழ்முஸ்தீத்து பண்ணு கிறயிடத்தில் ஒரு பிறதமைதிராசு பிடிச்சுக் கொண்டு யிருக்கிறுப்போலேயும் ஒரு பிறதமை கண்ணாடி பார்க்குராப் போலேயும் ஒரு பிறதமை புஸ்தகம் பார்க்கிறுப் போலேயும் ஒரு பிறதமை கையில் பாம்பை பிடித்துவைத்துக் கொண்டு முத்தியிடப்போற யவசரமாய்ப் பண்ணியிருக்கிறது. அதைக் காண்பிச்சு யிது உனக்குத்தெரியுமா வென்று கேட்டார் தெரியாது யென்று சொன்னேன். அதின்பேரில் துரையவர்கள் சொன்னது திராசுகையில் பிடித்துக்கொண்டு யிருக்குதே யிது வந்து சுஸ்ததீசு யென்கிறது (Justice) பொஸ்தகம் கையிலே வைத்திருக்குறது வந்து கொமோசு லென்கிறது. கண்ணாடியை உருவை பார்த்துக் கொண்டிருக்கிறது வெடுத்தேயிருயென்கிறது பாம்பை கையிலே பிடிச்சுக்கொண்டிருக்கிறது பிறுதேவசியும் என்கிறது என்று சொன்னார். அப்பால் யேறப்போறபடியில் கோலை வைத்துக்கொண்டு ஒரு பிறதமை நிற்குறதே அதுக்குப்பேர்———— இந்தப்படி பேர் சொல்லி சுஸ்தீது ஞாயமென்கிறது திராசு நிரையாய் நடத்தவேணு மானபடியினாலே ஞாயத்திலே யிருந்து சொல்லுகிறது மகாபிறயாசம் திராசு யெப்படியோ ஒருதிரணம் விழுந்தாலும் யேத்ததாக்ஷியாய்ப் போகுதே அப்படித்தான் நியாமும் அதினாலே ஞாயம் தீர்க்கிறது பெகுபுத்திசாலியாயிருக்கிறதும் அல்லாமல் பக்ஷபாரமென்கிறது சத்தாகிலும் எண்ணலாகாது நரகத்துக்கு ஆளாய்ப்போயி விடுவார்கள். ஆனபடியினாலே சாவதானமாய்ப் பாற்கவேண்டியது என்று சொல்லி அப்பால் வெடுத்தேயிரு யென்கிறது மெய்டென்கிறது புருதென்சியு வென்கிறது. ————அப்பால் படியின் பேரிலே கோலை வைத்துக் கொண்டு காவற் காறன் போலயிருக்கிறது————

இதுக்கு ரெண்டுக்கும் அவர் சொன்னது. ஞாபகமில்லாதபடியினலே ஆரையாகிலும் கேழ்ப்போம் அல்லாது சமையம் கிடைச்சால் அவரைக்கேட்டு அரிஞ்சு ்ழுதுவோமென்றயிடம் விட்டு வைத்தேன் ———————என்று சொல்லி பின்னையும் இஷடடாலாபமாய்ப்பேசி யிருக்கச்சே முசியே பெருத்தலேன் முசே ஓசே முசே அலபேர் வந்தார்கள் அவர்களுக்கும் அதுவே காமபிரதாப பேசிக்கொண்டிருந்துவிட்டு வீட்டே போனர். நானும் எனக்கச்சேரியே வந்தேன் ———————த்தனல் காலத்தாலே ————— அப்பால் கட்டுமரத்தின்பேரிலே காயிதங்கள் வந்தது.

1752 வறு சூலைமீ 13உ ஆங்கிரசுவறு ஆடிமீ 2உ குருவாரம்

கப்பல்பேர் செந்தோர் என்கிறது கப்பல் கப்பித்தான் பேர் முசியே கோஸ்து மவிபேர்சோலி (Mr Gardin du Broussay) என்கிறவன் யென்றும் ரன்துமதிநெத்தில் முசியேலபோடுதுனேயிஸ் காதுரு வந்துதே அப்போ சின்னக் கப்பித்தானக வந்தானென்றம் யிப்போபெரிய கப்பித்தானக யிந்தக் கப்பலிலே வந்தானென்று சொன்னர்கள்.

இத்தனள் பகலைக்கு மேலாக ரெண்டு மணிக்கு கும்பினியார் அனுப்பின கடுதாசி பக்கேதததைக் கொண்டு வந்து துரைக்குக் குடுத்துப் பேசியிருந்தான் அப்பால் அவன் வெளியே பிறப்பட்டவுடனே அவனை இரண்டொரு வெள்ளைக்காறர்கள் கேட்டதுக்கு கப்பல் கப்பித்தான் நாளை இறங்குவனென்று சொன்னனென்று சொன்னர்கள் சாயங்காலம் நாலரை மணிக்கு நான் கடற்கரைக்குப் போன விடத்திலே சொலுதாதுகளும் வெள்ளிப்பெட்டியும் யிறங்குது இந்த கப்பலிலே வந்த வெள்ளிப்பெட்டி யெத்தனை சொலுதாதுகளெத்தனை சீர்மை சமிச்சாரமென்ன வென்று வெள்ளைக்காறர்களை கேட்டதுக்கு வெள்ளைக்காறர்கள் சொன்னது இந்த சாந்தோரென்கிற கப்பலிலே நூத்திருபத்தோரு பெட்டி வெள்ளி வந்தது சொலுதாதுகளும் ஒபிசியால் மார்களும் ஆக யிறநூறு பேர்கள் வந்தார்கள். சகலாத்துக்கட்டு வகையிரா தினிசுகள் சீர்மையிலிருந்த வார தினிசுகள் வந்தது. இந்தக் கப்பலிலே வந்த சேதி இனிமேல் பரிச்சேதமாய்த் துலுக்கர்களுடனே சண்டை பண்ணத்தேவையில்லை யென்றும் அவர்களைச் சமாதானம் பண்ணிக்கொண்டு சுகமாய் வர்த்தகம் பண்ணிக்கொண்டிருக்கிறத்த பொறிப சண்டையென்று குண்டுக் கப்பாலே ஒரு சொலுதாதுவையாகிலும் அனுப்பத்தேவையில்லை யென்றும் நமக்கு யிப்போ விட்ட சாகீருகளை காப்பாத்திக் கொண்டிருக்கிறதுக்கு எழுநூறு சொலுதாதுகளையனுப்பி விச்சார்களென்று மிப்போயவரவருக்கு மன்சபு சாகீர்களுக்கு கிராமங்கள் நடக்குதே அதையெல்லாம் கும்பினீரிலே சேர்த்துக்கொண்டுவிடச் சொல்லியும் கும்பினீர் சம்பளம் வாங்கிக்கொண்டு இருக்கிறவர்கள் ஆனபடியினலே ஆருக்கு விட்டிருக்கிற சீர்மைகளும் கும்பினீரைச் சேர்த்துக்கொள்ளச் சொல்லியும் யிப்படியாக எழுதிவந்தது யென்று இரண்டு மூணு வெள்ளைக்காறர்கள் என்று என்னுடனே

சொன்னார்கள் இன்னம் நன்றாய்க் கேட்டு கேட்டு சேதி தெரிய வேண்டியது முசியே புரி அன்பது ரூபா வாங்கிக்கொண்டு வீட்டிலே யிருக்கிறதாம் அந்த உத்தியோகம் முசியே தொத்தேலுக்கெழுதி வந்ததாயச்சொன்னார்கள்.

·1752ஷு. சூலை மீ 14உ ஆங்கிரசுஷு ஆடி மீ 3உ சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்களண்டைக்குப் போய் போனவிடத்தில் கபுறுகள் சொல்லியானதின் பேரில் சென்னபட்டணத்துச் சேதியேதாகிலும் உண்டாவென்று கேட்டார். பத்துநாளைக்கு முன்பாக சென்னப்பட்டணத்திலே ஒரு கபபலின்பேரிலே சிறிதுவெள்ளைக்காறர்கள் சட்டைக்காரர்கள் சிப்பாய்கள் வகையிருக்கலை யேத்தினது தீவுபிது முன்பாதுசா தங்களுக்கு குடுத்ததென்றும் அதை நம்முடவர்கள் கட்டிக் கொண்டார்கள் என்றுபோலேயும் அதைத் தாங்கள் வாங்கிக் கொள்ளுகிற நிமித்தம் போனதாய் அவ்விடத்தில் செனங்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள் யென்று நம்முடைய யெழுத்துப்பிடவை நிமித்தம் போயி காத்துகொண்டிருக்கிற பேரகளண்டையிலிருந்து வந்த சேவுகன் சொன்னானென்று சொன்னேன். மெய்யாயிருக்குமாவென்று கேட்டார் சேவுகன் வந்தவன சொன்னானென்று சொல்லி யந்தச் சேவுகனை வேணுமென்றால் அழைப்பிக்குகிறேன் கேளுங்கோளென்று சொன்னேன். கவையில்லை போவென்று சொன்னார். அதிலே நேத்து வந்த சீமைகப்பல் கப்பித்தான் முசியே கோலும் (M. Cole) பியோசோலி என்கிற கப்பலிலே யிறங்கி வந்தான். அவன் நெத்து வாசற்படியிலே வாறகபுறு வந்து சோபுதாரன் சொன்னவுடனே வீட்டுக்குள்ளே போயிசிகப்புபட்டை போட்டசேன்லூயி யென்கிற முத்திரையும் போட்டுக்கொண்டு வந்துநடுசாலையிலே யிப்புறமிருக்கிற வராந்தாவிலே நின்றழைத்துக் கொண்டுபோய் கட்சி பெரியசாலையிலேயிருக்கிற நாற்காலியின் பேரிலே உளுக்காரச்சொல்லி தாமும் உளுக்கார்ந்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள் முசியே கில்லியார் முசியே போசேத்து பிள்ளையும் இரண்டு வெள்ளைக்காறர் வந்து அப்பால் பின்னையும் சந்தபடியாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பால் நான் காசாக் கச்சேரியே வந்தேன்.

1752ஷு சூலை மீ 15உ ஆங்கிரசுஷு ஆடி மீ 4உ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்கு குஸ்துபாது படிக்கு போனவிடத்திலே கபுறு சொல்லியான பிற்பாடு தயங்கம் பாடிக்கு இரண்டு கப்பல் சீமையிலிருந்து இவ்வவருஷம் வந்துதாம் அதிலே தயங்கம்பாடி தென்மார்க்கு ( enmark) ராசாவினுடைய கப்பலொன்றும் யிதிலே அன்னூறு சொலுதாதுகள் வந்தார்கள் என்று மிந்த அன்னூறு சொலுதாதுகளும் முன்னாற்சறசங்கு வந்த போது மமுதல்லிக்கான் கேட்டதாகவும் தஞ்சாவூர் ராசாவும்

கேட்டதாகவும் அது நிமித்தியம் சொலுதாதுகளை யழைப்பிச்ச தென்றும் இதல்லாமல் சுத்துக்கோட்டையும் பெரியதாய் விஸ்தாரமாய்க் கட்டச்சொல்லியும் அதுக்குப் பணம் காசுகளும் யிஞ்சினிர்களுங்கூட வந்ததாகவும் அப்போது எப்போதையும் போலே குர்பீனிர் கப்பல் அலாதியாய் ஒரு கப்பலும் வறத்கத்துக் குப் பணமும் வாறதாகவும் கேழ்விப்பட்டேனென்று துரையவர் களுடனே சொன்னதுக்கு யிப்போவந்த கப்பல் தென்மார்க்கு (Denmark) ராசாகப்பல் அல்ல கும்பினியார் கப்பல்தானே யென்று சொல்லிப்போட்டு அப்பால் கபினேத்திலே யெழுதப்போனார் நான் என் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் கேழ்விப்பட்ட கபுறு சலாபத்துசங்கு துரையவர் களுக்கு பதினாறு லக்ஷம் ரூபாயிக்கு சாகிர்யெழுதினபோது டிலலியிலிருந்து அகம்மதுசா பாதுசா தம்மை வரச்சொலலி யெழுதினதாகவும் யிதல்லாமல் காசுதின் கான்வருகிறதாகவும் அது நிமித்தியம் சொலுதாதுகளையும் சிப்பாயிகளையும் யிவடத் திலிருந்து அனுப்பிவிக்கச்சொல்லியெழுதி அதுக்குப் பதினாறு லக்ஷம் ரூபாயிக்கி சாகீர் விட்டனுப்பினதாகவும் அது நிமித்தியம் சிப்பாயிகளை வைக்கச்சொல்லி துரையவர்கள் உத்தாரம் குடுத்து சிப்பாயிகளை யெழுதுகிறார்கள்யென்றும் யிப்போ சீர்மை கப்பலிலே வருகிற சொலுதாதுகளிலே முன்னூறு சொலுதாதுகளையும் வைக்கிற சிப்பாயிகளையும் கப்பலின் பேரிலே யேத்தி மச்சிலி பந்தருக்கு அனுப்பி யங்கேயிருந்து அயிதராபாத்திலே யிருக்கிற சலாபத்து சங்கு அண்டைக்குகிறதாகவும் யிதல்லாமல் தீவு முதலிய யிடங்களிலேயும் மச்சிலிபந்தர் சீர்மையிலேயும் பாளையக் காறர் கசாபண்ணுகிறதாகவும் அது நிமித்தியம் மச்சிலிபந்தருக்கு சிறிது சொலுதாதுகளும் சிப்பாயிகளையும் அனுப்பிவிக்கிறதாகவும் அதுக்கு முஸ்தீது பண்ணுகிறதாகவும் கேழ்வியானேன்.

இதல்லாமல் கந்தனூரின் பேரிலே வந்திருந்த கோசா நேமத் துல்லாக்கானையும் முசபர்கானையும் சலாபத்துசங்கு கந்தனூர் கோட்டையுஞ் சீரமையும் இம்மத்துபாதூர்கான் தம்பி முனவர்க்கான் வசம் பண்ணிப் போட்டு அயிதராபாத்துக்கு தம்மண்டைக்கு வரச் சொல்லி யெழுதினதாகவும் சேதி கேழ்வி யானது. அதுவும்மல்லாமல் முசபர்கானெக்கு யெழுதின காகிதத்திலேயும் எழுதின படியினாலே கேழ்விப்பட்ட சேதிகளுக்கெல்லாம் சரியாயிருக்கிறபடியினாலே யிந்த கபுறு மெய்யென்று யெழுதினேன்.

1752௵—ஜூலை௴ 16௳ ஆங்கிரசு௵ ஆடி௴ 5௳ ஆதிவாரம்

இந்தனாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போயிவந்த புறப்பாடு நான்போயி கபுறு சொல்லியானவுடனே—மமுதல்லிக் கான் வரயில்லையா மெய்தானா—அவன் தம்பி மாத்திரம் வருகிறா னென்கிற கபுறு மெய்தானா வென்று கேட்டார். நான் கேட்ட சேதி மயிசூரார்—அரியாமல் கோட்டையிலிருக்கிற பாவனையாய் எண்பிச்சு கயிருத்தின் கானையும் யிங்கிலீசுக்காறர் மனுஷரகளையும் வைத்துப் போட்டு அப்துல் வாபுகான் பிறப்பட்டானென்று எண்பிச்சு திரிச்சி ராப்பள்ளி கோட்டையை விட்டு விட்டு ராத்திரியே வாலி கொண்டா

புரம் வந்து சேர அங்க்க மொத்தபர்கான் விருந்து பண்ணியனுப்ப அங்கே யிருந்து பிறப்பட்டு தேவனும்பட்டணம் வருகிறவனுக விருத்தாசலம் வந்து சேர்ந்தானென்றும் ரெண்டாயிரங்குதிரைகள் நாலாயிரம் குவாடுதிகள்—நானூறு வெள்ளைக்காறர்களும் அறுபது திராகோமுகள் சின்னதும். பெரியதும் பதினெட்டு பீரங்கிகள் ஏழு ஆனைகள் பதினெட்டு ஒட்டகங்கள் வகையிரா சாமான்களுடனே வருகுறதாய்ச் சொன்னார்களென்றும் தேவனும்பட்டணத்திலே கோவற்ண தோருக்கு சரீரம் சுவஸ்தமில்லாமல் காகன் குருவி கூட கூப்பிடுகிறது சகிக்காமல் சனங்கள் கூடகிட்ட வர சகிக்காமல் ராமாரசாம் பீரங்கி போடுவார்களே அதுகூட நிறுத்திப்போட்டு யிந்தப்படிக்கு திட்டம் பண்ணியிருக்கிறவன் மமுதல்லிக்கான் வருகிற ஆர்பாட்டத்திற்கு என்ன சகிக்கப் போகிறானோ யென்ற அவ்விடத்திலிருந்து வருகிற செனங்கள் பேசிக் கொள்ளுகிறார் களென்று சொன்னேன். நானும் அப்படிதான் கேழ்விப்பட்டேன் யென்று சொன்னார் அப்பால் சீர்மைக் கப்பல்க் கம்பித்தான் வந்தான். அவனுடனே பேசிக்கொண்டிருந்தார் நான் செய்விக்குறேன் என்று சொன்னார்.

## 1752-ஆம் ஜூலை 20உ ஆங்கிரசு ஆடி 9உ குருவாரம்

இத்தனாள் பங்காளத்துக்குப்போற வெறக்கூரென்கிற (Horcule) கப்பலின் பேரில் மச்சிலிபந்தருக்கு அனுப்பத்தக்கதாக இவ்வருஷம் வந்த சொலுதாதுகளில் முன்னூறு வெள்ளைக்காற சொலுதாதுகளும் சட்டைக்காறர்கள் அன்பது பேரும் சிப்பாயிகள் தமிழர் துலுக்கர் வகையிரா அன்னூறு பேர்களும் ஏலத்தினது மல்லாம மருந்து குண்டு சிறிது பீரங்கி துப்பாக்கிகள் வகையிரா சண்டை சாமான்களும் யேத்தினார்கள். இந்தக்கப்பல் நாளை பயணமாகி பாயெடுத்து ஓடி மச்லிபந்தரைப்போய் பிடிச்சு இவ்விடத்திலே யேத்தின சொலுதாதுகள் சட்டைக்காறர்கள்—சிப்பாயிகள் மருந்து குண்டு வகையிரா சண்டை சாமான் களெல்லாமிறக்கிப்போட்டு. அப்பால் பங்காளத்துக்குப் போகுதென்று சொன்னார்கள்:

இத்தனாள் காலத்தாலே சாவு பீரங்கி ஒன்றொன்றாய் விகடிக்கு ரெண்டு விழுக்காடு தேவனும்பட்டணத்திலே சுடுகிற சத்தம் யேழுமணி வேளைக்கி அருமுதல் ஒன்பது மணிமட்டுக்கும் கேழ்க்கப்பட்டுது. அதிலே தேவனும்பட்டணம் கொவற்ணதோர் மேஸ்தர் காக்காயென்கிறவன் புதுசாய் துரைத் தனக்கு வந்து துரைத்தனம் பண்ணிக் கொண்டிருந்த வன் சரீரம்லம் பட்டையாய் சலவைக் கண்டு தென்றும் நேத்திய தினம் தேவனும்பட்டணத்திலிருந்து வந்தவர்கள் சொன்னார்களே அவர் காலம் பண்ணிப் போனதாக வேணுமென்று யெமுறு யெல்லாரும் யோசனை பண்ணித் தீர்த்தார்கள். பனிரெண்டுமணிக்கு தேவனும் பட்டணத்திலிருந்து வந்த கொல்ல சேவுகர்கள் தேவனும்பட்டணம் துரை செத்தப் போனானென்று சொன்னது மல்லாமல் அவன் பெண்சாதியும் ரொம்ப லக்குத்தப்பி ரொம்ப மரணத்தையடை கிறவளாயிருந்து அவளுக்கு திரும்புகுணம் கொடுத்து யிவன் செத்தா னென்று சொன்னார்கள்.

இத்தனாள் ராத்தரி வெகுநேரம் பீரங்கிகள் தேவனாம்பட்டணத்திலே ஏழுமணிக்கி துவக்கி யெட்டு மணி மட்டுக்கும் சுட்ட சப்தம் கேழ்க்கப்பட்டது. தேவனாம்பட்டணம் துரையை அடக்கம் பண்ணினார்களென்றும் அதுக்காக சுட்ட பீரங்கிகளென்றுஞ்சொன்னார்கள்.

இந்தனாள் கேழ்விப்பட்ட சேதி திருவீதிக்கோட்டையை மமுதல்லிக்கான் மனுஷன் பிடிச்சுக்கொண்டானென்றும் அதிலேயிருந்த பிறான்சுக்காற ஒபிசியாலு ஒருத்தனும் சட்டைக்காறர் பத்து பேரும் கற்நாட்கம் துலுக்கர் வகைபிரா முன்னூறு நானூறு பேர்களும் ஆயுதங்களையும் ஒப்பிச்சுப்போட்டு கோட்டையை விட்டுப் போட்டு வந்துவிட்டதாயும் சொன்னார்கள். இவர்களெல்லாரும் றங்கோபண்டிதன் மனுஷர்கள். வெள்ளைக்காறர்கள் சட்டைக்காறர்கள் நம்முட பிறான்சு கும்பினீர் மனுஷர் வெள்ளைக்கொண்டாட்டிருந்தவர்கள் பறங்கிப் பேட்டையிலேயிருந்தவர்கள் சட்டைக்காறர்களும் வந்து சேர்ந்தார்கள் முசியே பொவேது (Mr. Bovet) யென்கிற சார்சனதும் பத்துசேவுகர்களும் பெத்திரியிலிருக்கிறதாய்ச் சொன்னார்கள்.

## 1752ஸ்ரீ சூலைமீ 21உ ஆங்கிரசஹுஸ்ரீ ஆடிமீ 10உ சுக்கிறவாரம்

மமுதல்லிக்கான் அப்துல் வாபுகான் திருவேந்தி புரம் சேர்ந்தார்களென்றும் சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் சாந்தரசுக்கு காகிதம் போயிருக்குதென்றும் அந்த உத்திரம் எப்படி வருகுதோ அப்படி டப்பார்கள் யென்றும் விழுப்புறம் திருவர் மாத்தூர் சீர்மையெல்லாம் கோபால நாறாயணப்பய்யன் மனுஷர்கள் போய் தோறணங்கட்டினார்களென்றும் சொன்னார்கள் அஞ்சாறு நாளாய்ப் பிடிச்சு கற்னாடகஞ் சீமைகாட்டில் பேரிசுச மஸ்தானம் எடுத்து எழுதி பதினாறுலக்ஷத்துக்கு —வாணம்—செங்கல்பேட்டு சீர்மை—பக்தோபஸ்து செஞ்சி சீர்மை—தரிராபஸ்து சீர்மை—விழுப்புரம் சீர்மை—திருவாமூத்தூர் சீர்மை—திருவதி சீர்மை—புவனகிரி சீர்மை—தீர்த்தகிரி சீர்மை—வெங்கிட்டாம்பேட்டை—பறங்கிப்பேட்டை மஞ்சமால் கூட யேகத்துக்குவுன்பட்ட சாகீர்தாறர்கள் மன்சுபாதாறர்கள் ஆராருதாயிருந்தாலும் சேத்துக்கொள்ளுகிறதாய் தீர்த்து பதினொருலக்ஷத்துக்கு யேகத்துக்கு சேர்த்துக்கு துரையவர்கள் யெழுதச் சொன்னதாய் மதனாந்த பண்டிதன் பர்மானா பிறான்சுக்கும்பினீருக்குமென்று யெழுதி தீர்ந்து தாமிந்தப்படி சலாபத்துசங்கு மொகறு பண்ணி அனுப்பச்சொல்லி சலாபத்துசங்கு பெருக்கும காகிதமெழுதி முசியே புசி பெருக்கும் பர்வானா பண்ணிவிச்சு யனுப்பச்சொல்லி காகிதம் யெழுதி யித்தனாள் பந்தர் பிடிச்சு அப்பால் பங்காளத்துக்குப் போற—வெறகூல் (Hercule) யென்கிற கப்பலின் பேரில் ஏத்தியனுப்பிவிச்சதாய் சேதி சொன்னார்கள் மதனாந்தபண்டிதன் சொன்னானென்று கிரேஸ்தனும் வந்து சொன்னான்——தமிழர் வெள்ளைக்காறர் சமஸ்தமான பேர்களும் விட்டிருந்த சாகீர் கிறுமங்களும் எல்லாமிதுக்குள்ளே சேர்ந்தாப் போலே ஆச்சுது என்று அவரவர் தாபந்தப்பட்டார்கள் இன்னேர்த்தைக்கு யிந்த கெதியாயி நடக்குது இனிமேல் சுவாமி யென்ன கெதியாய் நடத்தவிருக்கிறாரோ அது ஒருத்தருக்கும் தெரியாது யெதினாலே யென்றால் மூன் அவரவர் நினைத்திருந்தபடி நடவாமல் வேறே நடக்கேயத்தனமானது பிறத்தியக்ஷமாயிருக்க யிப்போ நினைத்தது சாசுவதமாய் நடக்குமென்று யெப்படி யென்று யெண்ணுகிறது ஆனபடியினாலே எழுதிவைத்தேன்.

1752ஞு ஜூலை மீ 22௳ ஆங்கிரசஞு ஆடி மீ 11௳
சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போன விடத்திலே துரையவர்கள் மமுதல்லிகான் அப்துல்வாபுகானுடனே தேவனும்பட்டணம் வந்து சேர்ந்தது மெய்தானா சிறிதுபேர்கள் மமுதல்லிகான் வந்தான் என்கிறார்கள். வரயில்லையென்றுஞ் சொல்லுகிறார்கள் யென்றுகேட்டார் யென் மனுஷன் பார்த்து வந்து சொன்னான். மமுதல்லிகான் வந்திருக்கிறது மெய்யென்றும் சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் சாந்தரசு (Mr. Saundes) அண்டைக்கு யெழுதிப்போயிருக்குது அங்கேயிருந்து உத்தரமெப்படி வருவதோ அப்படி நடக்கத்தக்கவாகவாக யெதிர்பார்த்து கொண்டிருக்கிறதாக சேதி சொன்னானென்று சொன்னேன். அப்பால் சபுறு சொலுகிறவ டிக்கைப்படிக்குச் சொல்லிப்போட்டு யென் காசாக்கச்சேரியே வந்தேன்.

1752ஞு ஜூலை மீ 23௳ ஆங்கிரசஞு ஆடி மீ 12௳.
ஆதிவாரம்

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் அழைப்பிச்சு சொன்ன சேதி யென்னவென்றால் மமுதல்லிகான் திருவந்திரபுரத்திலே தம்பியுடனே யிருக்கிறானே அவன் வெகுபயந்துக்கொண்டுயிருக்கிறானா மெய்தானாவென்று கேட்டார் மெய்தான் அய்யா அவனுக்கு மூணுவிதத்திலே பயமுண்டாயி சீவன் தப்பாதென்று தீத்துக் கொண்டு தானிருக்கிறான் யிதல்லாமல் செனங்கள சொல்லிக் கொள்ளுகிறது. மார்கழி மாதத்தில் மமுதல்லிகான் தலைவிழுந்து போகுமென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் சனங்கள் சொல்லிக் கொள்கிற வாக்கியம் தப்பாது ஒருமீ இரண்டுமீ மூணுமீ இப்படி மாசக்கணக்கிலே வித்தியாசமிருந்தால் யிருக்கலாம் அல்லாமல் சொன்ன பேச்சென்னோ அது தப்பாது என்று சொல்லி மூணுபயமென்னவென்றால் உங்களுடைய பயம் பிறதானம் பயம் அது முதலாவது ரெண்டாவது மயிசூரார்—நாற்பது லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் கொடுத்த உடன்படிக்கைக்கு அவர்கள் திரிச்சிராப்பள்ளி சீமையும் கோட்டையும் அவர்களுக்கு குடாதபடியினாலே அவர்கள் பலவருதருமாமேயென்ன மோசம் பண்ணுகிறார்களோ யென்கிற பயமும் யிப்படி நாலாவிதத்திலே வெகுபயமுண்டாயிருக்கிறது அல்லாமல் கோட்டையும் சீமையும் கட்டிக்கொண்டு போவாரகளென்கிறபயமும் வுண்டு அப்பால் மூணுவது: மயிசூரார் யினி ஒரு காசு அளவிலே கொடுக்கத்தக்கதில்லையே கையில் யிருந்த கசாஞ்சாடவாய்ப் போச்சுதே அப்பால் சீர்மையிலே சிப்பந்தி வைக்குறதுக்குதக்கதாய் ஆமீயினி வருகுறதுக்கு ஆறுமீ போனாலே அல்லாமல் பணம் வரத்தக்கதில்லை கலாபமாயிருந்தால் ஆறுமீ போனாலும் அதுவும் யில்லை—யிப்போ கொடுக்கவேண்டிய சிப்பந்திக்காறர்களுக்கும் முன்னுக்கு நடக்க வேண்டியயதையும் யோசனை பண்ணிக்கொண்டு இங்கிலிசுக்காறர்கள் காசு சுத்துகிறவர்களேயல்லாமல் அவர்கள் கொடுக்கிறவர்களல்ல வென்றும் சிப்பந்திக்காறர்களுக்குக் கொடுக்க

வேண்டியது கூடாமல் போனால் அவர்கள் எங்கே மோசம் பண்ணிப் போடுவார்களோ யென்னமோ என்று அதொருபயம் யிப்படி முணுவித பயம் உண்டாயி முன்னும் தேறாத்தாமல் பின்னும் தேரத்தாமல்படிக்கி பயித்தியம் பிடிச்சவனுட்டம் திரிகிறுன் யென்று மிதுமுதலான பேச்சுக்கள் அனேகம் நான் சொல்ல அதுக்கவர் உத்திரஞ்சொல்ல நடந்தது. அப்பால் துரையவர்கள் மேஸ்தர் லாரென்சு-(Mr Lawrence) என்ன செய்கிறுன் நேத்து சென்னப்பட்டணத்து-சுலுப்பின் பேரிலே ஏறிப்போனுனும் மெய்தானுவென்று கேட்டார். நேத்து ராத்திரி ஏழு மணிக்கு சுலுப்பின்–பேரிலேறி சென்னப்பட்டணத்துக்குப்போனுன். யிவன் போய் சேதி வந்த பிற்பாடுதான் மமுதல்லிக்கான் கடலின்பேரிலே யாவது அல்லது கரைவழியாகிலும் பிறப்பட்டு சென்னப்பட்டணம் போகப்போறானென்றும் சொல்லிக்கொண்டார்கள் யென்று சொன்னதுக்கு லொரென்சு போறசேதியறிந்தால் கப்பலுகளுக்கு உத்தாரங்குடுத்து சுலுபைப்பிடிச்சுக் கொள்ளச்சொல்லி சொல்லுவேன்-மிஞ்சிப்போனுன். ஆகட்டுமிதல்லாமல் நானேழெட்டு நாளாய் லொரென்சுக்கு தேவனும்பட்டனத்துக்கு யெழுதின காகிதத்திலேயும் சென்னப்பட்டணத்து கோவற்னதோர் மேஸ்தர் சாந்தரசுக்கு மூணு நாலு காகித மெழுதினேன், அதிலேயும் வெகு கலங்கிப்பயந்துக்கொண்டு கிடக்கிறூர்கள். அதுநிமித்தியந்தான் மேஸ்தர் லொரென்சுவை சென்னப்பட்டணத்துக்கு-அழைப்பிச்சுது அவர்கள் யோசனைப்பண்ணுமல் வெகுகாரியங்களை நடப்பிச்சார்கள். அதன்பேரிலே நான் யெழுதியிருக்கிற சம்மதிகளுக்கு யெனக்கு உத்திரமெழுதக்கூடாமல் யிப்போ-பல்லேயிளிச்சுக்கொண்டு முழிச்சுக் கொண்டு ஒன்றுந்தோணுமல் சிடந்து அலேகிறூர்கள் யென்றும் யிதுசம்மதிகள் வெளியாய்ப்போகுதென்றும் நீயும்அறியப் போராய்-அதுகளெல்லாம் சொல்லுகிறேனென்றும் சொன்னூர் அதுக்கு நான் சொன்னது நீங்களெழுதுகிற காகிதங்களுக்கும் அவர்கள் பதறிச் செய்கிற சம்மதிகளுக்குமவர்கள் ஒருக்காலும் சதுத்தாமெழுத மாட்டார்களென்றுஞ் சொன்னேன் அதின் பேரிலே பின்னேயும் யிந்தப் பிறஸ்தாபமே இரண்டு நாழிகை மட்டுக்கும் நடந்தது. அப்பால் சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் லொரென்சு போனபிற்பாடு யென்ன நடக்குதோ அது அறிந்துக் கொண்டு யெழுதத்தக்கதாக சென்னப்பட்டணத்திலே மனுஷருண்டாவென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது ஒன்றரை வருஷமாய் கபுறுயழைக்கிற வாடிக்கை நின்று போனபடியினுலேயும் அங்கேயும் வெகுகாயிதாயிருக்கிற வேலையானபடியினுலேயும்-நூதனமாய்--ஒருகாரியம் யெத்தினம் பண்ணுமல் அதுமார்க்கமாய் சமாச்சாரம் வாரதுக்கு ஒரு மாசம் நாற்பது நாள் செல்லும் முன்வாடிக்கையாயிருந்தவர்களில் ரெண்டொருத்தர் செத்துப்போனதுமுண்டு. இருக்கிறவர்களுமுண்டு அவர்கள் யிப்போ யெடுத்தாப்போல சம்மதிப்பார்களோ-தெரியப் போகாது. அப்படி காரியமாய்த் தெரிந்து கொண்டு மறுபடி பிறப்படுகிற காரியம் அதுக்குமிப்போ போகிற மனுஷன் அந்தரங்கமாய் நடக்கப்போகிறகாரியத்தை. யறிந்துக் கொண்டு யெழுதுவானென்று யெப்படி சொல்லுகிறது. யிப்போ நான் சொன்னுலப்போ மெய்யான சேதிவராமல் சத்து அபத்தம் வந்தாலும் நாலு நாள் சென்றுலும் தாங்கள் கோபம் பண்ணுவார்கள்யென்று சொன்னதுக்கு மெயிதானென்று-ஒத்துக்கொண்டு அப்பால் நீயுமதுக்கு யெத்தனம்

பண்ணி நடந்து பார்த்துக்கொள்ளுவோமென்று சொன்னுர். நல்லது அப்படியே நாளைய தினம் மனுஷர்களையும் அனுப்புகிறேனென்று சொன்னேன். அப்போ செங்கல்பட்டிலிருந்து ஒரு காகிதம் வந்தது. அதிலே வீரமராசாவினுடைய சேவிகர்கள் தலைவருக்குள்ளே பெரிய தலைவனொருத்தன் சுப்பய்யன் அகப்பட்டானென்று எழுதி யிருந்தது அதைப்படிச்சுப்பார்த்து யென்னைப்பார்த்து-வீரமராசாவினுடைய மனுஷருக்குள்ளே ஒருத்தன் குறிக்காரன் சுப்பாயென்கிறவன் அகப்பட்டானும் அவன் ஆரென்று-அரியபோகாது. முன்வீரமராசா வினுடையகூட யிவடத்தில் வந்திருந்தவர்களில் அவன் ஒருத்தனும் அவன் வக்கீல் வெங்கட்டராமய்யன் யென்கிற பிருமணன் ஒருத்தனும் வந்தார்கள். அவர்களை—நான் அறிவேன், இவன் பின்னே அவர்களிடத்திலிருக்கிற பேர்களில் ஒருத்தனுக யிருப்பான் என்று சொன்னேன். அவனைக்கட்டி கோவளத்துக்கு அனுப்பிவிச்சுப்போ டென்று சொல்லி யெழுதுகிறேன் யென்று சொன்னுர். கோவளத்துக்குஞ் செங்கல்பட்டுக்கும் போற வழியிலேதான் உத்திப்பாக்கத்து மலையில்தான்-வீரமராசாபபாளையமும் அதிலே வழியிலே போகச்சே மோசம்பண்ணிச் கொண்டு போனுலும் போவார்கள், அதுபார்த்துக்கொண்டு வரவேண்டியது என்று சொன்னதுக்கு மெய்தான் வெகுபத்திரமாய்ச் சொல்லியெழுது கிறேனென்று சொன்னுர்கள். இதிலே முசியே—தொத்தேல் வந்தான். அவனைக்கண்டு என்னைப்பார்த்து முசியே தொத்தேலுக்கு சேம்லூயி முத்திரை வந்துதே யின்று காலத்தாலே குடுத்தமே நீர் பிலிசித்தாரிட்டீரோ வென்று கேட்டார். அந்தச்சினம் யென்று சொன்னேன். மெய்தானுவென்று கேட்டார். முசியே தொத்தே லிருந்துக்கொண்டு மெய்தானென்று சொன்ன பிற்பாடு உனக்கு சுவாமி மெதாலியும் தயவுபண்ணுவாரென்று துரையவர்கள் சொன்னுர். அதுக்கு நான் சொன்னது உம்முட கிருபை பரிபூரமாயிருக்கிறதே சகல மேன்பாடும் சகல மெதாலியும் ஷெவாலியேர் பட்டமும் வந்தாப்போலே யென்றுபசாரம் சொன்னேன். அப்பால் மமுதல்லிகான் பவுன்சுக்குப் பணம் குடுக்கவேணுமே-அதுக்கெப்படி சீர்மை பணஞ்சேராமல்படிக்கும் குடிகள் பயிரிடவொட்டாமலும் நான் சொல்தாதுகளையும்—சுவார்களையும சிப்பாயிகளையும் அனுப்பிக் சுலகம் பண்ணிக்கொண்டு யிருந்தால் சீமையிலே பயிர்பச்சைகள் நடவாது குடியானவனுக்கு வூரிலே வந்திருக்கப்போற சத்துவுண்டா னுல்லவோ பயிரிடப்போறுன். அப்படி கலகத்தைவுண்டாக்கிப் போடுகிறேன் அப்பால் சீமை கேட்டால் பணம் யெந்தவிதம் மமுதல்லிகானுக்கு சேரப்போகுது. சிப்பந்திக்கு யென்னத்தைக் கொடுப்பான். அதிலே யவன் கெட்டுப்போறுனென்று சொன்னுன் அதுக்கு அப்படி யெல்லாம் செய்ய வேண்டியதென்று பயிறேரின— நாலுமாசந்தைக்கு அல்லோ பலன் காலம் அந்தமட்டுக்கும் சம்பளக் காறருக்கு யென்னத்தைக் குடுப்பான். அவனுக்கு நிறுவாகத்துக்கு—வர மாட்டாதென்று சொல்லி தேவரீர்சித்தத்திற்கு தோத்தினபடிக்கு நடத்துகிறதே அதுவே செயத்துக்கு ஆதியாயிருக்குமென்று சொன்னேன். அந்த மட்டுக்கும் பின்னையிம் லோகாபிறமாய பேசியிருந்தார் அப்பால் எட்டிக்குற வேளையான படியினுலே நானனுப்பிவிச்சுக் கொண்டு யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் ராத்திரி மகாராவு யென்கிறவன் அயிதராபாத்திலே சலாபத்து சங்கு அண்டையிலேயிருந்து– சபான்மீ 27உ மதாரிச்கு யெழுதின பாரீசுக்காகிதமும் அக்கபராபாதும்–நாளது–உடுராமுசான் 11உ மதாரிக்கு ராத்திரி வந்து சேர்ந்த காகிதச்சேதி யெழுதின வயணம் வக்கணை யெழுதியான பிற்பாடு சந்தாசாயபு சமாசாரங்கேட்டு அதிக ஆச்சரியமாச்சுது. காலம் நேரிட்டபடியினலே சத்துருக்களுக்குச் சமயம் வாச்சுது யிந்தக்கலை நடந்தது யிப்பால் நபாபு கொரந்தோரு சாயபு அவர்கள். யென்ன யோசனையின் பேரிலே யிருக்கிறார்கள் மமிதல்லிக்கானென்ன விதமா யிருக்கிறான் கலை யெந்தப்படியாய் நடக்குது யிங்கேயானல் மயிசூரார் திருச்சிராப்பள்ளிக் கோட்டை வாங்கிக் கொண்டார்கள் யென்று கபுறு யிருக்கு தென்றும் ஙாசுதிண்கான் ஷாகசாபாத்திலே (Shahjahanbad) யிருந்து பிறப்பட்டு பத்தும் சலீயியிப்பறம் வந்தார் அபிறங்காபாத்தின் வழியாய் வருகிறார் பாசிராவுக்குமாரன் பாலாசிராவு தம்பி ரகுனதராயன் காசுத்தின் கானுக்கு யிஷுத்தக்கபால் போயிருக்கிறான் யென்ன நடக்குமோ பார்க்குறேன் அதைப்பார்க்க வேணுமென்றும் யிந்த சமாச்சாரம் காகிதத்தில் யெழுதியிருந்தது. இதல்லாமல் அகமாபாத்திலே யெழுதி யிருந்த வயணம் சயிதுவஸகர்கானுக்கு சறலக்கிலி சமத்துக் குடுத்து நாலுக்கை சீறெப்பாவும் சகலாத்தும் சாலாசற பேசுங்குடுத்து அனுப்பினார்கள் சலபத்துசங்கு அவர்கள் சயிதுலசுக்கர்கான் வீட்டுக்கு வந்தார்கள் அப்போசயிது லசுக்கர்கான் கொடுத்தது. சீறெப்பா ஒன்று கத்தி ஒன்று குதிரை ரெண்டு ஆனை ரெண்டு யிந்தப்படிக்கு குடுத்தார் அப்பால் சலாபத்துசங்கு முசியே புசி வீட்டுக்கு வந்து ராத்திரி சாம மட்டுக்கும் அங்கேயிருது அப்பால் தம்முடைய ராவுக்குப் போனரென்றும் இந்தப்படிக்கு அக்கபர் பறதி யெழுதி வந்தது.

## 1752-ஆம் ௵ சூலைமீ 25உ ஆங்கிரசு௵ ஆடிமீ 14உ. அங்காரகவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப் போய்க் கபுறு சொல்லியான பிற்பாடு மமுதல்லிக்கான் அப்துல் வாபுகான் வகையிரா திருவீதியிலே வந்து யிறங்கி யிருக்கிறார்களே அவர்கள் வெகு காபிறுவாயிருக்கிறார்களாம் மெயிதான வென்று கேட்டார். ராத்திரியும் பகலும் நம்முட பவுன்சில் வொலோந்தே யென்கிற புருதீசுக்சுக் காறனும் போய் கூடப்பாக்கத்தண்டையிலே யிறங்கியிருக்கிறது யெந்தவேளையிலே ராத்திரி வந்து விழுந்து சரிகட்டி விடுகிறார் களோவென்று அப்துல் வாபுகான் மமுதல்லிக்கான் வகையிரா பவுன்சும் நடுநடுங்கி ராமுப்பதுங்கிடந் தலையுறதும் பொழுது விடிஞ்சால் இன்றை தினம் தப்புச்சே யென்று பார்த்துக் கொண்டு நடுநடுங்கிக் கொண்டு கிடக்கிறார்கள் யென்று சொல்ல வேண்டிய பேச்சு சொன்னேன். அது இஷ்டாலாபமாய் பேசியிருந்தோம் அப்பால் அவர் கபினேத்தில் யெழுதப்போனர். என் கச்சேரியே நான் வந்தேன்.

இத்தனுள் முசியே கெறுஷாம் (Mr. Kerjean) வந்து சேர்ந்தான் யிவன் பழவற்காட்டுக்கு வந்து அங்கேயிருந்து சம்பானேரி-யிருபத் தோரும் நாள் இத்தனுள் ஒன்பது மணிக்கு யிறங்கி துரையவர்களைக் சுாண்பிச்சு கொண்டு அவ்விடத்து சேதி பாதி சொல்லி அங்கேயிருந்து விடுதிக்கிப் போகச்சே யென்னைக் கூட்டிக்கொண்டு நீ கோல்க் கொண்டை அயிறங்காபாதில் நாங்களிருக்கச்சே யென் பேருக்கு ஒரு காகிதமும் ஆகிலும் அனுப்பாமல் போனுயே யென்று ரொம்பவும் உபசா ரமாய்ச் சொன்னதுக்கு நானும் வெகு வெகு உபசாரத்துடனே உத்தரஞ் சொன்னதுக்கு வீட்டுக்குப்போய் ஷ்ஷவரம் பண்ணிவிச்சுக் கொண்டு வேறவுடுப்பு வுடுத்திக்கொண்டு வருகிறேனென்று சொன்னுன் கொல் கொண்டை விட்டு மச்சிலிபந்தருக்கு வந்து அங்கேயிருந்து பழவற்காடுக்கு வந்து அங்கேயிருந்தும் வந்தான்.

### 1752-ஹு சூலைமீ 27உ ஆங்கிரேசுஹு ஆடிமீ 16உ குருவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போய் கபுறு சொல்லி ஆனபிற்பாடு யேதாகிலுஞ் சேதிவுண்டா வென்று கேட்டார் மயிசூரார் குமஸ்தா பறிக்கு வெங்யிட்டராயன் யென்கிறவன் இறநூறு முன்னூறு சிப்பாய்களுடனேயும் அன்பது குதிரைகளுட னேயும் மமுதல்லிக்கான் அண்டையிலே வந்து சேந்து மமுதல்லிகானை யுங்கண்டு அப்பால் தன கூடாரத்திலே போயிறங்கினுன். யென்று கபுறு சொன்னது. யிதல்லாமலும் மமுதல்லிக்கானை சிப்பாயிகள் சம்பளங்குடுக்கச் சொல்லி ரொம்பவும் மறியல் பண்ணிக்கொண்டு யிருக்கிறுர்களாம் இங்கிலீசுக் காறர்களுஞ் சிலவுக்கு கொடுக்கிற பேச்சை மெதுவுபண்ணினதாய் அதின் பேரிலே அவனண்டையிலிருக் கிற பவுன்சு அவன் சொன்னபடி கேளாமல் தாறுமாறு பண்ணிக் கொண்டிருக்கிறதாய் அதினுலே திரிச்சிராப்பள்ளிக் கோட்டையை விட்டு அறியாமல் வந்தோம் யென்று வெகு விசாரத்துடனே யிருக் கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுதென்று சொன்னதுக்கு மெய்தானுனும் கேழ்விப்பட்டேனென்று சொனுர் மேஸ்தர் பாட்டன் (Mr. Boddam) தேவனும்பட்டணத்துக்கு துறைத்தனத்துக்முன் 13உ சோமவாரம் காலததாலே போய்ச் சேர்ந்தானே சேர்ந்தபிற்பாடு மமுதல்லிக்கான் ஒரு சிறுப்பா னுறுருபாய் பெறுமாம். அது ஒரு செமேதாரன் கையிலே கொடுத்தனுப்பினுனும். அது வாங்கிக் கொண்டு பதினெரு பீரங்கி போட்டு வந்த சமேதாரனுக்கு நாலு கெசம் சகலாத்து வெகுமானங் குடுத்து அனுப்பினதாய் கபுறு வந்து தென்று சொன்னதுக்கு மெயிதானு வென்று கேட்டார். மெயிதா னென்று சொன்னேன். மறுபடி விசேஷ விந்தையான சேதி கேழ்விபடவில்லை.

### 1752-ஹு சூலைமீ 30உ ஆங்கிரசுஹு ஆடிமீ 16உ ஆதிவாரம்

இத்தனுள் வெள்ளைக்காறர்கள் சொல்லி கேழ்வியான சேதியென்ன வென்றுல் முசியே லபோறுதுனே (Mr de laBourdonmais) சீர்மையிலே ராசாவினுடைய கோன் சேவிலே சென்னபட்டணம் தான் இங்கிலீசுக் காறர் கையிலிருந்ததை வாங்கிக் கொண்டதற்கு தான் வெகு பணம்

யெடுத்துக்கொண்டு பரிதானம் வாங்கிக் கொண்டு போனானென்று முசியே துப்பிளேயிகச்சு சென்றால் தெ புதுச்சேரி சீர்மை கும்பினீயாருக்கு எழுதியதின் பேரிலே கும்பினியார் ராசாவினுடைய மந்திரி மார்களுக்கு அரிக்கைப் பண்ணி முசியே லபோடுத்துனேயைக் காவல் வைத்தயிடத்தில் முசியே லபோடுதுனே தான் ஆயிரத்து யெழுநூத்தி ஒன்பதாம் ஷ பிறந்ததுமுதல் சேம்மலோவிலே பிறந்ததும் அன்றுமுதல் சென்னப்பட்டனம் பிடிச்சு தன்னை வைத்த பரிபந்திரம் நடந்த வர்த்தமானெங்களெல்லாம் வொக்கரவுகளைக்கொணடு யெழுதிவிச்சு அச்சுப் போடுவிச்சு பாரீசு யென்கிற ராசதானிப்பட்டண மெல்லாம் பிறசித்தமாக விருக்கப் படிக்கப்பண்ணியும் கபேகுடிக்கிற இடங்களிலே படிக்கச்செய்தும் யிப்படி பிரான்சு ராச்சியமெல்லாம் பிறசித்தம்பண்ணி விச்சயிடத்தில் ராசாயறிந்து யிந்த ஞாயத்தை மார்ஷெல் தெபிறான்சு யென்கிறவனும் அதுக்கு சமான மாயிருக்கப்பட்ட ராசவமுசத்திலிருக்கப்பட்டவாகளாகவும் யிப்படி பத்து பனிரெண்டு பெரிய மனுசர்களை விட்டும் தீர்க்கச்சொல்லி அந்த ஞாயத்தை ராசாவினுடைய கோன்சேவிலே கூடி கேட்டு முசியே லபோடுதுனே வியாச்சியம் செவித்தானென்று செயக்காகிதம் கொடுத்ததாகவும் அதின்பேரிலே கும்பினியாரை முசியே லபோடுதுனே தான் சென்னப்பட்டணம் பிடிச்சதுக்கும் அதுக்கு கனக்கும் ஒபிசியால் மார்கப்பல் கப்பித்தான் மார்களுக்குகூட யிருபது லக்ஷம் ரூபா குடுக்கச்சொல்லிக் கேட்க்கிறதாக்வும் அந்தபடிக்கி கும்பினியார் சம்மதி பண்ணுகுறோமென்று முசியே லபோடுதுனேக்கி நல்ல வசனஞ்சொல்லுகிறதாகவும் ராசா முசியே லபோடுதுனே பேரிலே வெகு பிறீதியாய் வெகு சமத்தன்யென்று யாதொரு பெரிய உத்தியோகங்குடுக்க நினைத்து இருக்கிறாரென்றும் பெரென்சு (Prince) கோந்தேயினுடதம்பி பேர் விளங்கன் முசே லபோடுதுனேக்கி மத்தத்தாய்ப் பேசினவன் வியாச்சியங்கெலிச்சாப்போலே தான் தானே காவல் விட்டுப்போய் முசியே லபுடுதுனேயைக் காவல்வைச்சு தன் குவாராவண்டியின் பேரிலே யேத்திக்கொண்டு தன்வீட்டையழைத்து வந்து வெகு சம்பிறமம் பண்ணி விச்சாளென்றும் யிந்த சரித்திரங்கள்—அச்சுப்போட்ட புஸ்தகம் யிந்த மஷோ (Machault) யென்கிற கப்பலிலே அவர்களுக்கும் வந்ததென்றும் துரையவர்களுக்கும் வந்ததென்றுஞ் சொல்லக் கேழ்விப்பட்ட சேதியை யெழுதிவைச்சேன்.

இத்தனாள் ராத்திரி பங்காளத்துக்கு லரோனுவென்கிற கப்பல் சீமைக்கப்பல் ஆறுலக்ஷம் ரூபாய் யேத்திக்கொண்டு பாயெடுத்து ஓடிப்போச்சுது கப்பல் கப்பித்தான் முசே திரிப்பியோர் (Mr de la Riviere)

## 1752௵ அகோஸ்துமீ 2௨ ஆங்கிரசு௵ ஆடிமீ 22௨ புதவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போன விடத்திலே கபுறு சொல்லியானபிற்பாடு இங்கிலீசுக்காறர் மனுஷர் ஆற்காடு திமிரிக்கோட்டை காஞ்சிபுரம் வகையிரா யிடங்களிலே யிருந்தவர்களெல்லாம் சாடாவாய் வாங்கிப்போன சேதி வந்ததுவா

ரெவ்வெண்டு பங்கு மனுஷர்களும் பீரங்கி களும் சாமானுமெடுப்பிச்சுக்கொண்டு சென்னபட்டணம் போனார்கள் இன்னம் கொஞ்சம் மனுஷர்களும் பீரங்கியும் வெளியே வைத்துக்கொண்டு ஆள்களைபபிடிக்குறார்கள் யென்கிற தாக கபுறு வந்தது அவர்கள் பிறப்படுபம்பான சேதிவந்ததில்லை வெளிசமாச்சாரம் பரிச்சேதமாய் வாங்கிப்போய்விட்டார்களென்கிற சேதியாயிருக்குதென்று சொன்னேன். யெங்கே பார்த்தாலும் யிங்கிறேசுக்காறர் மனுஷர்-யிருக்கிற பேர்கள் வாங்கிப் போனார்கள் யென்கிற கபுறு வருதேயல்லாமல யிருக்கிறார்கள் யென்கிற கபறு யில்லை.— அதினாலே யிங்கிறேசுக்காறர்களுக்கும் மமூதலிக்கானுக் கும் யாதொரு உடம்படிக்கைகளிலே வித்தியாசம் வந்துதோ அல்லது முன் மைசூர்ரரால்லோ முப்பது லக்ஷம் ரூபாமட்டுக்கும் சிலவுக்குக் கொடுத்து விட்டார்கள் இப்போ அவர்களுக்கு திருச்சிராப்பள்ளி சீர்மையுங் கோட்டையுங் கொடுக்குறதில்லை யென்று சொன்னதினாலே அவர்களுக்கும் இவர்களுக்கும் பிடிச் சுதே சிலவுக்கு மட்டாச்சுதே யிப்போ யிங்கிறேசுக்காறர்களை கேட்டிருப்பார்கள் எங்களுக்கும் கும்பனியார் ஒரு சண்டை பண்ணவாண்டா மென்றும் வெளிசோலிக்கி போகக்கவையில்லை யென்று யெழுதி வந்திருக்கச்சேயும் நாங்கள் மருந்து குண்டுகள சொலுதாதுகள் வேணுமென்ற மட்டுக்கும் ஒத்திகைப்பண்ணிக் கொடுத்து உம்முடையகாரியம் அனுகூலம் பண்ணிக்குடுத்தது. மல்லாமல் யிப்போ நீர் பணங்கூட கேட்டால் நாங்களெங்கே யிருந்து கொடுப்போமென்று சொல்லி யிப்போ அங்கங்கேயிருக்கிற மனுஷர்களுக்கு சம்பளம் இங்கிறேசுக்காறர் கை பணம் அல்லோ கொடுத்து தீரவேணுமான படியினாலே யிதுகள் நிமித்தியமாய் தங்கள் மனுஷர்களை வாங்கிவரச்சொல்லி யெழுதினதாய் தோத்தது அலலவென்று அவர்கள் பணங்குடுத்தால் வராமல் போனால் கும்பினீரிலே யெழுதப் போகாதே துரைத்தனம் பண்ணுகிற மேஸ்தர் சாந்தரசு அல்லோ தன்பெட்டி பணங்கொடுத்துதீர வேணும் அதுக்கு யவனுக்கு துரைத்தனம் யிவ்வருஷம்தானே நிச்சயமாயிருக்குமென்று பரவசமில்லையோ ஆகையாலிந்த யோசனை யெல்லாம் பண்ணிவரச்சொல்லி யெழுதி அங்கேயிருக்கிற மனுஷர்கள் வாங்கிப் போறதாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்கள் சிறிதுபேர்கள் நீங்களே யெழுதின காகிதத்தின் பேரிலே பயந்து முன் சென்னப்பட்டணம் வாங்கினாப்போலே வாங்கிப்போடப் போறார் சொலுதாதுகளும் விஸ்தாரமாய் வந்திருக்கிறார்கள் கப்பலுகளும் திறளாயிருக்கிறது. யென்ன சம்பவிக்குமோவென்று வாங்கிப்போறதாகவும் நானாவிதமாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்கள் அந்த உண்மை உங்களுக்கெல்லாம் தெரியும் யென்று சொன்ன துக்கு யோசனை பண்ணிக்கொண்டு உள்ளே போனார். நானென் சச்சேரியே வந்தேன்.

இத்தனாள் யெனக்கு சரீரம் சுவஸ்தமில்லாமல் வீட்டிலே யிருநதேன.

### 1752-ஆ ஆகொஸ்துமீ 5வ ஆங்கிரசுஆ ஆடிமீ 25வ சனிவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி மமுதல்லிக்கானும் இங்கிரேசுகாறர்களும் செஞ்சிவாங்கவேணுமென்று போற சேதி முன்னையே அறிந்திருந்தாலும் மமுதல்லிக்கான் பவுன்சு செஞ்சியின் பேரிலே போயிறங்கிற சேதி திட்டமாய் அறிஞ்சு யித்தனாள வெள்ளைக்காற சொலுதாதுகள் முன்னூறும் சட்டைக்காறர்கள் நூறு சிப்பாயிகள் கல . துப்பாக்கிக்காறர்கள் அறுநூறு பேர்களும் யிது ஊர்கு கொம்மாந்தாம் முசியெ கெர்ஷாமும M/s. Kerjean) யிந்தப் படிக்கு திட்டம் பண்ணி சொலுதாதுகள் வகையிரா சிப்பாயிகள் வகையிரா யெல்லாரும் யித்தனாள் பிறப்பட்டு செஞ்சிக்குப் போகத்தக்கதாகப் பயணம் பிறப்பட்டு நாலு பெரிய பீரங்கியும் குண்டு மருந்து வகையிரா சாமானுகள் பிடி பிடிச்சுக்கொண்டு வழுதாவூர் கோட்டைப்போய் சேர்ந்தார்கள். முசியே கெசாம் நாளைக்குப் போறேனென்று சொன்னார்கள் முசியே கெர்ஷாம் நாளைகு வழுதாவூர் கோட்டையெ போய்ச் சேர்ந்தவுடனே சொலுதாதுகள் வகையிரா சாமானுகள் கூட செஞ்சிக்கு மமுதல்லிக்கான் பவுன்சும் பேரிலே சண்டைக்குப் போறதாய்ச் சொன்னார்கள்.

### 1752ஞு அகோஸ்துமீ 6வ ஆங்கிரசுஞு ஆடிமீ 26வ ஆதிவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதியென்னவென்றால் மமுதலீல்லிக்கானும் ஷெ பவுன்சும் இங்கிலீசுக்காறர் பவுன்சும் செஞ்சியண்டையிலே நரிஆத்தண்டையிலே போயிறங்கினார்களென்றும் அதிலே சிறுது பவுன்சு சகறுப்பனு வண்டையிலே போயிகாண்பிச்சுக் கொண்டு போனார்கள்யென்றும் நம்முட பிறான்சுக்காறர் பவுன்சும் கில்லாவிலே யிருக்கிற பேர்களுமிவர்கள் சமீபமாய் வரட்டுமென்று நன்றாய் பீரங்கிகளும் துப்பாக்கிகளும் சுட்டார்கள் யென்றும் அதின்பேரிலே அந்தபந்துபஸ்துப் பவுன்சு மூறிஞ்சு மறுபடி பெரிய பவுன்சு நரிபாத்தங்கரை போரம் யிறங்கி யிருக்குதே அங்கே வந்து சேர்ந்து போச்சுதென்று யேறெட்டு பத்துப்பேர் சாவென்றும் யிருபது பேருக்கு மாத்திரம் காயமென்றும் சொன்னார்கள் யென்று நம்முடைய பாத்திமி அறக்காறுகள் கபுறு விசாரிக்கப் போனபேர்கள் வந்து சொன்னார்கள்.

இதல்லாமல் கோனப்பறங்கி விழுப்புரம்ட்டாணுவை யெடுத்துப் போட்டு தன் டடாணுவை விழுப்புரம் கோட்டைக்கு வைத்துப் போட்டு தான் அரட்டை ஆலக்கிராமத் தண்டையிலே போயிறங்கினதாய் சேதி சொன்னார்கள் யிது நேத்து சனிவாரனாள் நடந்ததாய்ச் சேதிசொன்னார்கள்.

## 1752-ஹு ஆகொஸ்துமீ 7உ ஆங்கிரசுஹு ஆடிமீ 27உ சோமவாரம்

இத்தனுள்காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் கபே குடிச்சு உலாத்திக்கொண்டுயிருந்தார். அப்போ நான் போய் ஆசாரம் பண்ணினவிடத்திலே சரீரத்திலே என்ன வித்தியாசம் கண்டதென்று கேட்டார். மந்தங்கண்டு அதின் பிற்பாலே சுரங்கண்டு உங்கள் தயவினாலே சுவஸ்தமாச்சுதுயென்று சொன்னேன். மமூதல்லிகான் சேதி கேட்டாயா செஞ்சிக்குப் போயிறங்கினவிடத்திலே நம்முடவர்கள் நன்றாய் அடிச்சார்கள் பிறப்பட்டு ஓடிப்போய்விட்டானென்று கபுறு வந்துதென்று சொன்னார். அதற்குச் சந்தேகமா அவன் செஞ்சியின் பேரிலே போகச்சே தானே யிவன் நன்றாயுதைப்பட்டு ஓடிப்போவானேயென்று தாங்கள் சொன்ன வாக்கியப்படிக்கே முடிஞ்சுதென்று சொன்னேன். இங்கிலீசுக்காறர்கள் கைவிட்டு விடுவார்கள். அவர்கள் எது நடத்துகுறது யிந்தப்படிக்கு தானே வோடிப்போறதுக்குயென்று யவர் சொல்ல அதுக்கு வுத்திரம் நான் சொல்ல அந்தப்படிக்கு நடந்தது அப்பாலென் கச்சேரியே வந்து பனிரெண்டு மணி வேளைக்கு பிறப்பட்டு வீட்டுக்கு வந்து பின்றைய தினம் ஆரோக்கிய ஸ்னானம் பண்ணினேன்.

அப்பால் அஞ்சு மணிக்கு துரையவர்கள் சொன்னது முசியே கெர்ஷாம் (Mr. Keijeam) யெழுதின காகிதம் வந்தது செஞ்சியிலிருந்து காகிதம் வந்தது. நானொரு உபாயம் பண்ணினேன். கேட்டயாவென்று கேட்டார். எப்படி ஐயா சொல்லுங்கோளென்று கேட்டதுக்கு துரையவர்கள் சொன்னது திருவீதிகோட்டை விழுப்புரம் கோட்டை யிதுகளிலே யிருக்கிற வெள்ளைக்காறனுக்கு யெழுதினது யிங்கிலீசுக்காறர் மனுஷர் வந்தவுடனே நீங்களவர்கள் பேரிலே சண்டை பண்ணக்கவையில்லை அவர்களைக் கண்டவுடனே நீங்கள் வெள்ளைக்கொடியைப் போட்டுக்கொண்டு கோட்டையிலே யிருக்கிற பீறங்கிகள் துப்பாக்கிகள் வகையிரா சண்டை சாமான் சாமி ஆயுதங்கள் மருந்து குண்டு வகையிராவும் பின்னையுமிருக்கிற தினிசுகள் கையிருப்பு சாப்பிதா யெழுதி இங்கிலீசு சறுதாருக்கு கொண்டு போய் கொடுத்து அவர்கள் அதை வாங்கிக் கொண்டு வரச்சொன்னால் அந்தப்படிக்கு கொடியை சுறுட்டிக்கொண்டு கோட்டையை அவர்கள் வசத்திலே ஒப்பிச்சுப்போட சொல்லி யெழுதியிருந்தேன். அந்தப்படிககுத் திருவீதியிலேயும் விழுப்புரத்திலேயும் சண்டை பண்ணாமல் ஒப்பிச்சுப் போட்டார்களே இவர்கள் கோட்டைகள் ஒப்பிச்சுப் போடுகிறதே அல்லாமல் சண்டை பண்ணிகிறதில்லையென்று அவர்கள் யெண்ணிக்கொண்டு செஞ்சுக் கோட்டையும் முன் ரெண்டு கோட்டையும் சாடைப்படிச்கு ஒப்பிவிப்பார்களென்று யிங்கிலீசுக்காறர்களுஞ் சிறிது மமூதல்லிக்கான் மனுஷர்களும் கொடியும் பிடிச்சுக்கொண்டு கழுதைகளாட்டமாய் செஞ்சி சகற்பனை அண்டை தறுவாசா மட்டுக்கும் வருகிற மட்டுக்கும் நம்முடவர்கள் சும்மாயிருந்து அப்பால் பீரங்கிகளும் துப்பாக்கிகளும் யேக வேளையிலே தீர்ந்தவுடனே கால்போனவனும் கைபோனவனும்

தலைபோனவனும் யிந்தப்படி சின்னபின்னமாய் முறிஞ்சுப்பட்டுப்போட்ட வாக்கிலே ஓடிப்போய மமுதல்லிபபலையத்திலே விழுந்தார்கள். புதுச்சேரி பவுன்சு வருகிற அதுத்தயுங்கண்டு கோணப்பறங்கில் வெம்லாங்தே யென்கிறவன் சமபதத்திலே வந்து யிறங்கியிருக்கிற அதுத்தியுங் கேட்டு மமுதல்லிகானும் அவன் பவுன்சும் இங்கிறேசுக்காறர் பவுன்சு முறிஞ்சயேசத்துக்கு தும்பூருமேலே பிறபபட்டு திருவண்ணாமலை பிடிச்சு ஓடிப்போனதாய் முசியெ கொசம் (M Kerjeam) யெழுதினன் லலோங்தே வும் யெழுதினனை. கும்பினீர் வர்த்தகருக்குச் சொலலி அவர்கள் பிடவை உடையார்பாளையத்தது அதையும்சிதம்பரத்துக்குவருமே அவர்கள் அதை யெடுத்துக்கொண்டு போகாமல் பத்திரமாய்ச் சேவுகர்களை யனுப்பி பதறிரம் பண்ணக்காளை அனுப்புயென்றும் வர்த்தகர்களுக்குச் சொல்லுயென்று சொன்னர். நல்லதுயென்று வந்து என் கச்சேரியிலவந்து கும்பினீர வர்த்தகாகள் வநதார்கள் அவர்களுடனே துரையவர்கள் சொன்னபடிககுச் சொல்லி கும்பினீருக்குப்போய் மனுஷர்ளை அனுப்ச் சொன்னேன். அவர்களும் நல்லதென்று போனர்கள். மறுபடி ஆறரை மணி வேளைக்கு அழைப்பிச்சு மேலே யெழுதப்பட்ட பிறஸ்தாபம்தான் பண்ணினர். மறுபடி யெட்டு மணிக்கு அழைப்பிச்சு மேலே யெழுதப்பட்ட பிறஸ்தாபங்கள்தான் பண்ணினர் இத்தனை தரம் அழைப்பிச்சு ஒரு பேச்சைத்தானே பிறஸ்தாபம் பணணுகிறதென்னவென்று கேட்டால் சத்துருவுக்கு அபஜெயம் வந்து ஓடிப்போனுனென்கிற சந்தோஷம் தோணத்தேண அழைத்து அழைத்துச் சொன்னது துரையவர்கள் மெத்த உத்சாகத்தின்பேரிலே இருந்தார்.

### 1752ஹு ஆகொஸ்துமீ 9உ ஆங்கிரசுஹு ஆடிமீ 29உ புதவாரம்

இத்தனுள் நடந்த சமாச்சாரம் யென்னவென்றல் மூந்தாம் நாள் 27உ சோமவாரம் செஞ்சிக்கோட்டையிலேயிருக்கிற நம்முட பிறஞ்சுககாற பவுன்சு சக்கிறபுரத்திலே யிறங்கியிருந்த மமுதலலிக்கான் இங்கிலீசுக்காற பவுன்சின் பேரிலே ஆயிரம்பேர் பாராக்காறரும் ஒரு பீறங்கியும் றெண்டு றெக்கிலாலும் வாங்கிக் கொண்டுபோய் சண்டை பண்ணுகிறவிடத்திலேஅவர்களிலே அஞ்சு பேருக்கு சாவும் சிறிது பேருககு காயமுமானபடியினலே அவர்கள் முறிஞ்சு போட்டுக்கொண்டிருந்த மோறசாவை விட்டுப் போட்டு யெதா யெதையாயினும் மூகத்திலேயும் ஓடிப்போய் அப்பால தும்பூரண்டை வந்து சேர்ந்த சமாச்சாரம் விக்கிறபாண்டியிலே யிறங்கியிருக்கிற நம்முட முசெ கொர்சாமும் (Mr. Kerjeam) கோணப்பறங்கி முதலானவர்கள் அறிஞ்சு நேத்து 28உ அங்காரகவாரநாள் காலமே மமுதல்லிகான் லசுககர் யெவ்வளவு கூட்டமோ அறிஞ்சு வரச்சொல்லி நம்முடவர்கள் நாற்பது சுவார்களையனுப்பிவிச்சதாகவும அந்தச் சுவார்களை மமுதல்லிகான் தண்டுக்காறர் பார்த்து அவ்விடத்திலே ஒரு குப்பமிருந்தால் அந்தக்குப்பத்துக்கு காறுதி விட்டார்களாம் அதை நம்முடவர்கள் கண்டு வந்து யித்தனுள் சகலத்தாயத்துடனே பவுன்சை முஸ்தீது பண்ணிக்கொண்டு முசியே கொர்சாமும் கோணப்பறங்கி வகையிராக்கள் போயி மமுதல்லிக்கான்

இங்கிலீசுக்காறர் பவுன்சின்பேரிலே போயி விழுந்து காலமே அஞ்ஞு நாழிகைக்கு துவக்கின சண்டை மத்தியானம் பதினெஞ்சு நாழிகை மட்டுக்கும் நல்ல சண்டையிலே மமுதல்லிக்கான் தண்டிலே யிசமானாக வந்த இங்கிறேசு கொம்மாந்தாம் மேசறு என்கிற மேஸ்தர் தனிபெருக்கு (Mojar Kinneri) துடையிலே குண்டு காயம் பட்டதாகவும் பின்னையும் ஒபிசியால் மாரிலே சிறிது பேருக்கு சாவு உண்டானதாவும் அப்பால் இங்கிலீசுக்கார சொலுதாதுகளிலே அறுபது எழுபது பேர் செத்ததாகவும் அவ்வளவு காயமானதாகவும் துலுக்கச் சிப்பாயிகளிலேயும் கற்னாட்டக ருணுவிலேயும் விஸ்தாரமாக சாவும் காயமுமானதாகவும் அந்த மட்டிலே யவர்கள் முறிஞ்சு திக்குக்கு வொன்றாய் திசை தப்பி ஓடிப்போனார்கள் யென்று மிந்தப்படிக்கு சாயங்காலம்—நாலு மணிக்கு எனக்கு சேதி வந்தது அந்த மட்டிலே யிதசேதியை துரையவர்களுக்குச் சொல்லுவோமென்று பிறப்பட்டுப் போன விடத்திலே துரையவர்கள் கோட்டையிலே யிருந்துக் கொண்டு என்னை அழைக்கச் சொன்னார் யென்று சேவுகனெதிராக வந்து அழைத்தான் அப்பால் நான் கோட்டைக்குப் போயி துரையவர்களைக்கண்டு லசுக்கர் சமாச்சாரம் யெனக்கு வந்த படிக்கு நான் துரையவர்களுடனே சொன்னதுக்கு அவருக்கு மெய்ப்படாமல் யிந்த சமாச்சாரம் மெய்தானாவிப்படி நடந்திருக்குமா வென்று அனுமானத்துடனே சொன்னது வழுதாவூரிலே யிருந்து முசியே வெரியே எழுதின காகிதத்திலே மேற்கே வெகு பீரங்கி வெடி கேழ்க்குறது யென்று எழுதினானென்று என்னுடனே சொல்லிக் கொண்டிருக்கச்சே நானும் உங்களுக்கு யிப்போதானே சேதிவரப் போகுதென்று சொன்னேன். யிப்படி யிருக்கச்சே நம்முடைய லசுக்கரிலிருந்து முசியே கெர்சாமுடைய சீட்டொன்று துரையவர்களுக்கு வந்துது. அந்த சிட்டிலேயும் நான் துரையவர்களுடனே சொன்ன வயணமானபடியினாலே அதன்படியே யெழுதியிருந்தது அதின் பேரிலே துரையவர்கள்-மிகுதியுஞ் சந்தோஷமாய் யென்னுடனே துரையவர்கள் சொன்னது நீ சொன்ன சமாச்சாரம் மெயிதானென்றும் வெகு உச்சாகத்துடனே சொல்லி அப்பால் பீரங்கி மேஸ்திரியை அழைப்பிச்சு யிருபத்தோரு பீரங்கி போடச்சொல்லி உத்தாரங்கொடுத்து என்னைப் பார்த்து முசியே வென்சாம வீட்டிலே மதாம் போயிருக்கிறாள் நீம்போய் மதாமுடனே முபாற்கு பாதி சொல்லிப்போட்டு வாவென்று சொன்னார்.— நல்லதென்று சொல்லி நான் துரையவர்களுக்கு அஞ்சு விராகன்—நதீர் வைத்து துரையவர்களுத்தாரப் படிக்கு பீரங்கி மேஸ்திரியுடனே இருபத்தோரு பீரங்கி போடச்சொல்லிப் போட்டு அப்பால் நான் முசியே வென்சாம் வீட்டுக்கு மதாம் அண்டைக்குப்போயி மேலே எழுதப் பட்டு யிருக்கிற சந்தோஷ சமாசாரத்தைச் சொல்லி முபாற்குபாதி கொடுத்தவுடனே மதாமும் றொம்ப சந்தோஷப்பட்டு யினிகொஞ்ச நாளையிலே சுவாமி மமுதல்லிக்கான் தலையைக் கூட கொண்டு வரத்தக்கதாக செய்வாரென்று சொல்லி அப்பால் மதாமும் கூடத்தானே துரையவர்களண்டைக்குத் தானே வந்தாள். அப்பால் சந்தாசாயபு மகன்—றசாசாயபு மிந்த கபுறுகேட்டு துறையவர்களண்டைக்கு வந்து முபாற்கு-பாதி சொல்லி துரையவர்களுக்கு நதீர் வைத்தது.—விராகன்————————21 அல்லி நக்கீம் சாயபு————————————————————————விராகன் 11
அமீர் அஷம்—————————————————————————விராகன் 7
பின்னேயும் துலுக்கர்கள் நதீர் வைத்தது.

புதுகும்பினி வர்த்தகர்கள்——————————விரசகன் 21
பாப்பய்யபிள்ளை————————————விராகன் 21
இப்படியாக அவரவர்கள் நதிர் வைத்து ஆனவுடனே என்னை அழைப்பிச்சு பாத்தியா-திரிச்சிராப்பள்ளி தண்டுக்கு யிங்கிலீசுக்காறன் முசே லாசுவை யிசமானுக்கி அனுப்பிவிச்சதினாலே அல்லவோ-மோசம்பண்ணிப் போட்டார்கள் யிப்பகொஞ்ச பவுன்சுடனே பிறான்சுக்காறனை தனிபண்ணியனுப்பின படியினாலே யல்லயோ கீர்த்திகொண்டு வந்தான் யிப்படி யாக்கும் பிறான்சுக்காறர் செய்யுறகாரியம் என்னவென்று சகலமான பேருடனேயும் சொல்லென்று சொன்னார். அந்தப் படிக்கு சகலமான பேருக்குஞ் சொன்னேன்.

## 1752௵ ஆகொஸ்துமீ 10௨ ஆங்கிரசஷு ஆடிமீ 30௨ குருவாரம்

இத்தனாள காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போயி சுபுறு சொல்லியான வுடனே நேத்தியதினம் உண்டான சேதியே ஏதாகிலும் வந்துதாவென்று கேட்டார் நேத்து வந்தப்படிக்குத்தான் அவரவர் பின்னையும் விஸ்தரிச்சு யதனமாய்ச் சொல்லுகிறார்கள் யென்று விஸ்தரிச்சு சொன்னதுக்கு கேட்டுக்கொண்டிருக்கச்சே முசியே கோர்சாம் காகிதம் கொண்டு கொண்டு சேவுகர்கள் வந்து காகிதம் கொடுத்தவுடனே படிச்சுப் பார்த்துப் பின்னையும் வெள்ளைக்காறர் முதலான பேர்களுக்கு யெல்லாம் வந்த காகிதத்தைப் படிச்சு காண்பிச்சார். அதிலே சண்டை பண்ணினதில சத்துருக்களில் யிங்கிலீசுக்காறர் பிணம் மாத்திரம் அறுபது எழுபது யென்பது பிணம் கிடைந்ததைப் புதைச்சுப் போட்டு வைத்தோம். என்றும் மத்த தமிழர் துலுக்கர் பிணங்களை விழுந்ததை யெண்ணிப்பார்க்க வில்லை யென்று இருபத்து நாலு ராத்தல் குண்டு ஒரு பீரங்கி நல்ல சமயத்திலே உடைஞ்சுப் போச்சுதென்றும் சண்டை பண்ண மார்க்கமெல்லாம் எழுதி—சத்துருக்கள் பாரிசமாய் ஓடிப்போன சேதி முதலானதுகளும் நம்முடதளத்திலே ஒரு ஒரு ஒபிசியால் செத்துதும் சொலுதாதுகள் சிப்பாயிகள் செத்ததும் காயக்காறர்களை கூட வயணமாயெழுதினது யெல்லாம் படிச்சு காண்பிச்சு அப்பால வெகு சந்தோஷமா பேசியிருந்து அப்பால் யென்னை யழைச்சு மேஸ்தர் வென்சு யென்கிறவன் சென்னபட்டணத்திலே யிருக்கிறானா தேவனாம் பட்டணத்திலிருக்கிறானா வென்று கேடடார். சென்ன பட்டணத்திலே யிருக்கிறானென்று சொன்னதுக்கு ஆனாலும் தேவனாம் பட்டணத்துக்கு மனுஷரைப்பானுப்பி விசாரிச்சு சொல்லென்று சொன்னார். நல்லதுயென்று சொல்லியனுப்பி விச்சுக்கொண்டு வந்தேன். இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் அழைத்து வந்துதாவென்றுக் கேட்டார். வந்துதென்று சொன்னேன். என்ன சேதியென்று கேட்டார். தேவனாம்பட்டணத்திலே யித்தனாள் ஒன்பது மணி காலத்தாலே மேஸ்தர் தனலென்கிறவன் மருதல்லிக்கான் பவுன்சு கொம்மாந்தாரிடப்போனவனுக்கு தொடையிலே குண்டு காயமும் பின்னையும் ஒருயினிச்சனுக்குத் தோளின் பேரிலே ஒரு காயமும் காலிலே அசலான காயமும் பட்டு அவர்களிரண்டு

பேர்களையும் பல்லக்கின் பேரிலே எடுத்துக்கொண்டு வந்து துரைத்தனம் பண்ணுகிற மேஸ்தர் பாட்டனையும் கண்டு பேசி அப்பால் யிசுப்காலுக்குப்போயி காயங்கள் கட்டினார்கள் யென்றும் அப்பால் நாற்பது அன்பது காயக்காறாளை யெடுத்து வந்தார்களென்றுஞ் சிறிது சொலுத்தாதுகளுஞ் சிப்பாய்களும் அப்பால் வந்தார்களென்றும் மேஸ்தர் தனேல் (Mr Kinneer) காயத்துடனே வந்து கோவற்ணதேரைக் கண்டவுடனே 21-பீரங்கி சுட்டார்களென்றும் ஓடிப்போய் — காயத்துடனே வந்தானென்றுஞ் சனங்களுக்குத் தோத்ததாம்பத்தே கொண்டு வந்தானென்று தோத்தவணுமென்று பீரங்கி சுட்டார்களென்றுஞ் சீர்மை கப்பல் ஒன்று வந்தது அதிலே அன்பது சொலுதாதுகள் வந்தார்களென்றும் அந்தக் கப்பலில் இருபத்து நாலு மணி நேரம் யிருந்து அப்பால் சென்னப் பட்டணம் போகுதென்றுஞ் சென்னப் படடணத்துக் கோவற்ணதோரிடம் வேறே வருகுதென்றும் மமுதல்லிகான் பவுன்சு சின்னபின்னமாய் சிதறினதில் திருவீதிக்கோட்டைவந்து சேருது யென்றும் யிப்பே மமுதல்லிகான் திருபாசுநகர் நெல்லூரிலே பெண்ணையாத்தங்கரையோரத்திலிறங்கி யிருக்கிறானென்றும் அதுக்கும திருவீதிக்கும் அஞ்சாறு நாழிகை வழி உண்டென்றும் விழுப்புரத்திற்கும் அதுக்கும் ஆஞ்சு நாழிகை வழி உண்டென்றும் தேவனாம்பட்டணத்து துரைத்தனத்துக்கு சென்னப்பட்டணத்திலிருந்து — மேஸ்தர் யிஷ்ட்டார்கு யினன்றயதினம் வருகுறானென்றும் அரிகிஷ்ணபுரத்தினண்டையிலே மேஸ்தா தாம்கொக்கு (Mr. Tomcooke) யென்கிறவனும் மேஸ்தர் தெரெக்கியென்கிறவனும் வந்திறங்கி யிருக்கிறார்களென்றும் அவர்கள் அன்றும் அவர்கள் நம்முட வெள்ளைக்கொடி மரி கிஷ்ணபுரத்திலே போட்டிருந்ததைப் பார்த்து புதுச்சேரி யாருடைய வெள்ளைக்கொடி யிங்கே பறக்கிறதேது. யிது துலுக்கர் — சீர்மையாச் சென்று கேட்டதாகவும் அல்ல. பிரான்சுக்காறருக்கு சாகீர் விட்டதென்று சொன்னதாகவும் கொடியை யிறக்கிப் போடச் சொல்லி யங்கே யிருந்த மனுஷருடனே சொன்னதாகவும் அதின் பேரிலே நம்முட மனுஷா நாங்களிறக்கிறதில்லை. நீங்களிறக்குங்கோவென்று சொன்னதாகவும் அதின் பேரிலே யிங்கிரேசுக்காறர் யிறக்கிப் போட்டதாகவும் அதின் பிற்பாடு சாமம் பத்துநாழிகை யானவுடனே மறுபடி நம்முட மனுஷர்களை யழைப்பிச்சு நாங்கள் சும்மா விளையாடினோமென்று சொல்லி கொடியைக் குடுத்துப்போட்டுக் கொள்ளச் சொல்லி சொன்னதாகவும் அதின் பேரிலே நம்முட மனுஷர் கொடி போட்டதாகவும் சேதிவந்ததென்று சொன்னதுக்கு யிப்போ சொன்னதெல்லாம் நடந்தது. மெய்தானெனக்கும் பரசுப்பாமாயி சேதி வந்துதென்று சொன்னார். சென்னப்பட்டணத்திலிருக்கிற மேஸ்தர் சாந்தரசு யெங்கள் தொப்பி போட்டவர்களுக்குள்ளே நடக்குற ஞாயமறியாதவனாயக் காணுதே அறிஞ்சவனுக்கு நடக்கிறதைப் போலே காண்பிக்கவில்லை. அது யெப்படி யென்றால் திருச்சிராப்பள்ளியிலிருந்த சொலுதாதுகள் வகையறாக்களைத் தேவனாம் பட்டணத்திலே கொண்டுவந்து காவலில் வைத்திருக்கிறது வடக்கே தீவு நிமித்தியம் யெங்கள் பேரிலே சண்டைக்கு யெத்தனம் பண்ணுறது முதலான சங்கதிகள் நடப்பிச்சு யிருக்கிறான் அதைத் தொட்டு சீரமையிலிருந்து யவனுக்கு கழுத்துக்கு கயர்வரும் யென்று

சொன்னார் மெய்தான் ராசாக்குடைய சேந்த ஞாயமானபடி யினாலே நடக்கவேண்டிய கட்டளைவிட்டு நடந்தால் சும்மாவிட்டார் களே. சின்ன சின்னக் கண்டமாய் அறுத்தல்லோ கொல்லுவார் களென்று சொன்னேன். அதுக்கு மெய்தான் விளையாட்டல்ல வென்று துரையவர்கள் சொன்னார். அப்பால அனுப்பிவிச்சுக்கொண்டு யிப்பால் வரச்சே நயினார் சேவுகன் வந்து தேவனாம்பட்டணத்து துரைத் தனக்குப் போற மேஸ்தர் பிஷ்டடாகு யென்கிறவனும் பிள்ளையுமாரு வெள்ளைக்காறன் பேரவிளங்கனும் மேஸ்தர் பிஷ்டடாக்கு கு துபாசி வெங்கிட்டசாயிம் அவன்மகன் மத்து நாயக்கனும் அன்பது துப்பாக்கிகாறர்களும் சிப்பாயிகளும் அவர்கள் தட்டு முட்டு சாமான்கள் நூறு — ஆள் — சீமையுடனே நம்முடகுண்டுசாலைக்குள்ளே பிறபட்டுப் போறார்கள். யின்னேரம் வழுதாவூர் வாசற்படிக்கு நேராகப் போவார்களென்று வந்து கபுறு சொல்லுறான். அந்தப்படிக்கு மறுபடி துரையவர்கள் அண்டைக்குப் போய் மேஸ்தர் பிஷ்டடார்க்கு தேவனாம்பட்டணத்து துரைத் தனத்துக்குப் போறானென்று மேலே எழுதின வயனமாம் படிக்குச் சொன்னார் அதுக்கு நல்லதென்று போகட்டுமென்று, சொன்னார். நான் அனுப்பிவிச்சுக்கொண்டு யென்கச்சேரியே வந்தேன்.

1752வரு ஆகொஸ்துமீ 13௳ ஆங்கிரசவரு ஆவணிமீ 1௳

இந்தநாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போயி வந்தபிறகு நான் போயி கபுறு சொல்லியான பிற்பாடு யென்ன சேதி யென்று கேட்டார் மமுதல்லிக்கானும் அப்துல்வாபுகானும் நேத்து திருவதிப்போய் சேந்தாப்போலே அதன் பிற்பாடு இங்கிரீசுக்காறர்கள் சட்டைக்காறர்கள். — வெள்ளைக்காறர்கள் சிப்பாயிகள் வகையிராக்கள் கூட பிறங்கி பிறங்கிகள் முதலான சண்டை சாமான்கள் எடுப்பிவிச்சுக் கொண்டு தேவனாம்பட்டனம் போயிசேர்ந்தார்களென்றும் அதின்பேரிலே மமுதல்லிககானுக்கும் அப்துல்வாபுக்கானுக்கும் பேச்சுவார்த்தை நடந்து பிட்டோட்டாயி அப்துல்வாபுகான் சொன்னது நாங்களப்போதானே திரிச்சிராப் பள்ளி கோட்டையை ஒப்பிச்சுப்போட்டு நம்முட பணங்காசுகள குஞ்சுக்குழந்தைகளுடனே பிறப்பட்டு சுகமாய்ப்போய் வேலூர்— ராசமகேந்திரம் சுபை பண்ணிக்கொண்டிருக்கலாம் அந்தப்படி நடவென்று யென்ன சொன்னாலும் கேளாமல் போனீர் யிப்பால் மயிசூராருடனே பேசின உடன்படிக்கைப் படிக்கு அவர்கள் நாற்பது லக்ஷம் ரூபாமட்டுக்கும் கொடுத்து சத்துருவையுஞ் செயிக்கப் பண்ணின மட்டுக்கும் அவர்களை விடலாகாது. அவர் களுக்குச் சொன்ன உடன்படிக்கைப்படிக்கு நடப்பிச்சு அவர்கள் மத்தத்துங்கூடக் கூட்டிக்கொண்டு யெங்தெந்தகாரியம் யெப்படி நடத்தவேணுமோ அந்தப் படிக்கு நடப்பிச்சுக் கொள்ளுவோம் யென்று சொன்னால் அதுவுங்கேளாமல் அவர்களுடனேயும் பகைச்சுக்கொண்டாப்போலே யாச்சுது அவ்விடம்விட்டு யிவ்விடம் வந்த பிற்பாடு செவ்வையாய் சென்னப்பட்டணம் போயவர்களைக் கண்டு பேசிக்கொண்டு பேசிக்கொள்ளத்தக்க பேரைக்கண்டு பேசிக்கொண்டு ஆற்காட்டைப் போவோமென்று சொன்னால் கேளாமல் செஞ்சியின் பேரிலே சண்டைக்குப்

போவோமென்று பிறப்பட்டு போகச்சே வேண்டாமென்றச்சே போய் அபசெயப்பட்டு ஓடிவந்ததாய் இந்த சந்துக் கட்டுப் பார்த்துக்கொண்டு இங்கிலீசுக்காறர் இவர்களுக்குச் சிலவுக்கில்லை யென்று கைவிட்டுத்தீத்துப் போட்டார்கள் யெந்த விதமும் சொன்னுப்போலேயுங்கேழ்க்கறதில்லை உனக்கு புத்தியில்லை அதுக்கு நாங்கள் எல்லாமுமுகிப்போவோமாவென்று யிதுமுதலான தகறுறுகள் நடந்து கோபிச்சுக்கொண்டு பிறப்பட்டு திருவண்ணுமலை வழியாய் அப்துல் வாபுகான் போனதாய் சேதிவந்துது தென்று சொன்னதுக்கு எத்தனை பேருடனே போருனென்று கோட்டார் சப்பைசாகு நூறு—குதிரை காணும் யிறநூறு முன்னூறு துப்பாக்கிக் காறருண்டா மென்று சொன்னேன். பின்னையென்ன சேதியென்று கேட்டார். மத்தபேர் மமுதல்லிகானண்டையிருக்கிறபேர்களுக்கு சோத்துக்கில்லாமல் பட்டினிகிடந்து செத்து அப்பால் நிறுவாக மில்லாமல் பிறப்பட்டுப் போய்விடுகிறுர்கள். சந்தாசாயபுக்குச் சத்தியம் பண்ணிக் கொடுத்து அழைத்து நாலுநாள்வைத்திருந்து தலையை வெட்டிப்போட்ட தோஷம் யிவன் அனுப்பிவிக்கத்தேவை யில்லையா அந்தக்கட்டம் போயியிவன் தலையும் போயிவிடும் யிதுக்குச் சந்தேகமில்லை முன்னேயுங்களுடனே சொன்னேன் யிப்பாலுஞ் சொல்லுகிறேன் மாசக்கணக்கிலே அவன் தலை போகுது பாருங்கோள் யென்று யெப்படி உறுதியாய்ச்சொல்லவேணுமோ அப்படிச் சொன்னேன். பின்னையும் யெவர்கள் எத்தனைப் பெரியராசாவானாலும் துரோகமாய்ச் செனங்களையாகிலும் ஒருத்தனை வஞ்சித்தாலும் தலை வெட்டினுலும் கெடுத்துப்போட்டாலும் சுவாமியவனுக்கு உடனே ஆக்கினைகொடுத்து செனங்களுக்கு திஷ்ட்டாந்திரம் பண்ணி விடுகிறவனல்வா ஆனபடியினாலே மமுதல்லிக்கான் தலைபோறது கெட்டி யென்று சொல்லி பின்னையும் லோகாமீரமாய்ப் பேசியிருந்து யிப்பால் யென்கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் வழுதாவூருக்குந் திருவீதிக்கும் வழிகேட்டு யெழுதிக் கொண்டார். யிந்த சாடைபாரத்தால் திருவீதியிலிறங்கியிருக்கிற மகம்மதல்லிகான் பேரிலே ராத்திரியே போய் விழச்சொல்லி வழுதாவூரிலே யிறங்கியிருக்கிற—ப்வுன்சுக்கு யிசமான் முசியே கெற்சாமுக்கு யெழுதினதாய்க் காணுது.

இத்தனுள் சாயங்காலம் துரையவர்களழைப்பிச்சுயேதாகிலுஞ் சேதிவந்ததாவென்று கேட்டார். தேவனும்பட்டணம் துரைத்தனத் துக்கு மேஸ்தர் யிஷ்ட்டார்க்குப் போனபடியால் அதுக்குமுன் துரைத்தனத்துக்கு யிருக்கிற மேஸ்தர் பாட்டன்-சென்னப்பட்டணம் சீர்மைக்கப்பலின்பேரிலே யேரிப்போனதாக கபுறு சொல்லுகிறது மல்லாமல் மேஸ்தர் யிஷ்ட்டாற்கு யென்று பேருடைய தேவனும்பட்டணத்து துரை சொல்லுகிறது சீர்மையிலிருந்து ஓடுதிவந்தது. பிரான்சுக்காறருடைய சோலிக்குப்போகவேண்டாமென்று யெழுதிவந்ததாகவும் அதன் பேரிலே திருஷ்ட்டியாகாமல் நடத்தினவர்கள் யென்னவென்றும் யினிமேல் கும்பினீருக்கு—வெள்ளைக் காறர்கள் செத்த கணக்கு உத்தறவாதம் பண்ணப்போருர்கள் யென்னுலே உங்களுக்கு உத்தரவு சொல்லதக்க தில்லை நீங்கள் மேஸ்தர்-சாந்தரசுவுக்கு யெழுதியனுப்பிக் கொள்ளுங்கோளென்று மிவடத்துக்கு நீங்கள் வரவேகவையில்லை யென்றும் சொல்லிப்போகச் சொன்னதின் பேரிலே மமுதல்லிக்கான் விசாரமதிகமாகிய கடலிலே மூழ்கியிருக்கிறுனென்று சொன்னேன் கச்சேருக்குப்புத்தியில்லை

முன்னே நான் சொன்னபடிக்கு கேளாமல்போனான். இப்போ யிங்கிலீசுக்காறர்கள் கைவிட்டுவிட்ட பிற்பாடு அங்கலாய்ச்சாப்போலே யென்ன யினியாகிலும் நான் சொன்னபடிக்கு கேட்டால் சுகப்படுவா னென்று சொன்னார் யிப்பவும் உங்கள் காலிலே விழுந்தால் பிழைப்பான். இல்லாவுட்டால் அவன் சந்தாசாயபை மோசம் பண்ணித் தலைவெட்டினாப்போலே யிவன் தலையும் வெட்டுண்டு போமென்று சொல்லி பின்னையும் இரண்டு நாழிகை நேரம் பேசிக்கொண்டிருந்து யென்கச்சேரியே வந்தான்.

இத்தனாள் ருத்திரி சந்திரராயனென்கிறவனையும் அனந்தாசி பண்டிதனையும் செஞ்சியிலே மமுதல்லிகான் பவுன்சு முறிஞ்சதினம் பிடிச்சு அவர்களை இத்தனாள் கொண்டு வந்து துரையவர்கள் முன்னிலையாய் விட்டார்கள் பெரியண்ணநயினார் வீட்டிலே காவல் வைக்கிறார்கள் என்று சொன்னார்கள் சந்திரராயன் மீர்குலாமுசேன் அணடையிலிருந்து விஸ்தாரமாய் திருநெல்வேலி சீர்மையிலே பல லக்ஷம் ரூபாய் சம்பாதிச்சு யிருக்கிறானென்று துரையவர்கள் கேழ்விப்பட்டிருக்கிறபடியினாலே இரண்டு மூன்று லக்ஷம் ரூபாயகப் படும் யென்று நிஷ்கருஷயாத்தோத்துது. அதைக்கொண்டு அவன் வேளைக்குணமரிய வேண்டியது.

## 1752௵ ஆகொஸ்தும௴ 15௳ ஆங்கிரேசு௵ ஆவணிம௴ 3௳. அங்காரகவாரம்

இத்தனாள் பெருநாளன்று துரையவர்கள் கோயிலுக்குப் போயி வந்த பிறகு முசியே வென்சாமுக்கு சரீரம் மெத்தக்கடினமாயிருக்கு தென்று துரையவர்கள் போயிவந்தார்கள். அப்பால் நான் போயி கபுறு சொல்லியானவுடனே மமுதல்லிக்கான் பேச்சு யேதாகிலும் உண்டா வென்று கேட்டார். சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் சாந்தராசுக்கு காயிதம் யெழுதியனுப்பி விச்சாரணும் அதுக்குச் சவாபுயென்ன வருதோ யென்கிற யோசனையின்பேரிலே கிட்டயிருக்கிற சுவார்கள் சிப்பாயிகள் வகையிரா சேனங்களுக்கு குடுக்கிறதுக்குப் பணமில்லாமல் சங்கிடப்படுகிறதும் அவர்கள் மரிக்குறதும் பண்ணுகிற அயிரானியும் சொல்லிமுடியாதென்று சொல்லுகிறார்களிதல்லாமல் சிலவுக் கில்லாததைத் தொட்டு அவன் ஒன்று ஓடிப்போவான் அல்லவென்றால் எந்த சிப்பாயியாகிலும் வெட்டிப்போடுவான் யென்றும் யிதிலே ரெண்டிலொருகாரியம் நடக்கும் தப்பாது யென்று சொல்லுகிறார்கள். யென்றும் சொல்லி பின்னையும் யிதுவே பிறஸ்தாப மாய்ப்பேசியிருந்து யெனகச்சேரியே வந்தேன்.

## 1752–௵ ஆகொஸ்தும௴ 17௳. ஆங்கிரேசு௵ ஆவணிம௴ 5௳. குருவாரம்

இந்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்கு போயிருந்த விடத்திலே கபுறு செல்லியான பிற்பாடு என்ன சமாச்சாரமென்று கேட்டார். விழுப்புறத்துக்கோட்டையிலே கற்னாட்டகத்தார் யிருபத்தஞ்சுபேர் யிருந்தார்கள் அவர்களையும் பிடிச்சுக்கொண்டு

நம்முடவர்கள் கோட்டையும் போய் வாங்கிக்கொண்டு விட்டார்கள் அப்பாலந்த இருபத்தஞ்சு பேரையுஞ்சேர்த்து அனுப்பிவிச்சார்களென்று சொன்னதுக்கு அவர்களை அழைப்பிச்சுப் பார்த்தால் வண்ணனும் அம்பட்டனும் குடியானவர்களுமாயிருந்தார்கள். யென்ன வென்று கேட்டார் யிந்த நாயிகளைத்தொட்டு யென்ன விட்டு விட்டால் மகாராசன் விட்டு விட்டான் யென்று சந்தோஷமாய் வாழ்த்திக் கொண்டு போவார்களென்று சொன்னேன். அதின்பேரிலே வேகு பார்க்கவந்தார்களென்று நாலுபேர்களும் ஒரு பிருமணன் அவ்விடத்து அமுலுக்கு வைத்தவன் அவனொருத்தன் ஆக அஞ்சுபேரையுங் காவல் வைக்கச்சொல்லி மைத்தப்பேரைவிட்டுவிட்டார்கள் அப்பாலென் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் அல்லிக்கான் மமுதல்லிகான் அண்டையிலே திரிச்சிராபள்ளியில் முசியே லாசு–சந்தாசாயபை அனுப்பி விச்சபோது யிவனுங்கூட மமுதல்லிகானண்டையில் சேகவுத்துக்கிருக்கிறேனென்று போனவிடத்தில் நல்ல தென்று வரச்சொல்லி ஆயுதங்களைவாங்கிக் கொண்டு நம்பாமல் புறம்பாயிருக்கச்சொல்லி நீக்கியவனுக்குமிவன் தினத்துக்குங்கால் ரூபாய் விழுக்காடு கொடுத்து வந்தனும். யிவன் பார்த்தான்–அவ்விடம் விட்டு யிவ்விடம் வந்ததுக்கு யிவ்விடத்தில் நம்பிக்கையில்லாமல் அவனம்பிக்கையின் பேரிலே ஆயுதங் கூட குடாமல் ஒரு சண்டையில்கூட போகச் சொல்லமாட்டாமலிருக் கிறமட்டுக்கும் புதுச்சேரியே போவோமென்று முசியே தொத்தேலுக்கு யெழுதி ஒருகவில் துரையிது அழைப்பிச்சுக்கொண்டு யித்தனுள் ராத்திரி மமுதல்லிகான் லசுக்கர் விட்டு யிவ்விடம் வந்து சேர்ந்தான்.

1752௵ ஆகொஸ்துமீ 19௳ ஆங்கிரேசு௵ ஆவணிமீ 7௳ சனிவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சாமாச்சாரம் யென்னவென்றால் மமுதல்லிகானுக்குந்துரையவர்களுக்கும் மகம்மதாக்கல் மாரிபத்திலே சால்சவாபு நடந்து கொண்டே வந்துயிப்பால் மமுதல்லிகானன்டையி லிருக்கிற பெரியமனுஷனும் நவதாயித்தனொருத்தன் உசேன் மகம்மதுகான் யென்கிறவனொருத்தனும் யிரெண்டுபேர் பெரியமனுஷர் வந்து சால்சவாபு பேசுகிறதாகவும் அதுநிமித்தியம் அவர்கள் வருகுரத்துக்கு அனுமானம் துரையவர்கள் கவில்போனதாகவும் சேதி சொன்னார்கள்.

1752௵ ஆகொஸ்துமீ 20௳ ஆங்கிரேசு௵ ஆவணிமீ 8௳. ஆதிவாரம்.

இத்தனுள் முசியே லாசை கோட்டையிலே காவல்வைத்திருந்தவனை விட்டு சீமைக்குப்போர மரியந்திரம் விட்டுக்காவலாய் வைத்துப் போகச் சொன்னதாய் அவன் வீட்டிலே யிருக்கிறதாகச் சொன்னார்கள் சாயங்காலம் நயினர் மகன் போனவன் சொல்லியனுப்பினது நேத்து மத்தியானம் ஆலம்புரியிலிருந்து வந்து இங்கிலீசுக்கார மனுஷர்களும்

ஓபிசியாலுமார்களும் மேஸ்தர் கிலேசும்–(Mr Glusi )–சம்பத்திராயனும் யேறிசலங்கும் பேரிலே கூனிமேட்டு துரைக்கு நேராக-வாறதாயி சேதி சொல்லி யனுப்பினுன். சலங்குயெல்லாம் கும்பலாய் நேராக வாரதாயி சொல்லியுமனுப்பினுன். அந்தக்கபுறு வந்தவுடனே நான் போயி யிந்த சேதி சொன்னமாத்திரத்திலே ,சம்பதிராயனும் மேஸ்தர் கிலேசும் (Mr Gluise) வரவில்லே யென்றும் நேத்து சோன்னியே யென்று கேட்டார் நான் சென்னபட்டனத்திலிருந்து வந்தவர்கள் சொன்ன சேதியைசொன்னேன். சம்பதிராயன் யிப்படி வரத்தக்கதில்லே அவன் வெகுபாதாள பணிக்கு அன்வறதிகான் செத்த அரிதிக்கிப் பாரிக்கத்துக்கு வரங்கிக்கொண்டு யினியிப்போ யிப்படிதொடிசிலே விழப்போகாதென்று யிருக்கிறது. மமுதல்லிக்கான்–மாபூசுகானுக்கு பரிச்சேதம் சம்மதியில்லே நாசறுசங்கு வந்தபோது மமுதல்லிக்கானுக்கு அன்வறதிகான் பாதர் யென்கிற பேருங்கொடுத்து ஆற்காடு சுவாபு– திருவிதியிலே வந்து சண்டை பண்ணி வோடிப்போகயில்லேயா? அந்தக்காலத்தில் கூட அவர்களுக்கும் எனக்கும் ஒத்துவராது. உங்கள் சோலிக்கு நான் வரத்தக்கதில்லே யென்றிருக்கிறேனெயல்லாமல் ஒரு காரியத்தில் பிறவேசியாமலிருக்கிற சங்கதிகளுமுங்களுக்குத் தெரியுமே யிப்போ பிறவேசிச்சானுனல் அவுன் பொல்லாத வேளே யென்று யெண்ணவேண்டிய தென்று சொல்லி மேஸ்தர் கிலேசுக்கும் (Mr. Gluce) மேஸ்தர் லொரென்சுவுக்கும் (Major Lawrence) விவகாரம் கோன்சிலிலே தீர்ந்ததும் அதிலே பிறப்பட்டு வந்தாளு அல்ல வென்று மேஸ்தர் கில்லேசு (Mr. Gluce) வந்தாலும் வருவான் சம்பதிராயன் யிதல்லாமல் வியாதிஸ்தன் யென்னேரம் நீர்க்கட்டு வந்து வெகுசங்கடத்திலே யிருக்கிறவன் அப்படிப்பட்டவன் வாறபேச்சு நன்றுயறிய வேண்டியது. யென்று சொல்லிப் போட்டு யென்கச்சேரியே வந்தேன்.

மறுபடி யெட்டு மணி ராத்திரி யழைப்பிச்சு லான்சோ என்கிற கப்பலுக்கு உத்தாரங்குடுத்து யிருக்குது இங்கிலீசுக்காறர் வருகிற சலங்குகளே பிடிச்சுவரச் சொல்லி நாளேய மத்தியானம் மூணு சாமத்துக்குப் பிடிச்சுவருவானென்று சொன்னுர். அப்பாவிப்புறம் வந்தவுடனே மறுபடியழைச்சனுப்பிவிச்சு நாளேயதினம் காலத்தாலே அன்வதிகான் குமாரன் மமுதல்லிக்கானுட வக்கீல்களிரண்டு பேர்கள் வருகிறுர்களாம் அவர்களுக்கு ஒரு விடுதி யொன்று முஸ்தீப்பு பண்ணிக்குடுத்து நாளேக் காலத்தாலே அவர்கள் வருகிறுர்களாம் அவர்களுக் கெதிரே வரும் மகம்மது தாக்கலும் போயழைத்து வந்து அவர்களுக்கு முஸ்தீது பண்ணியிருக்கிற விடுதியிலே கொண்டு வந்து வைத்துப்போட்டு யெனக்கு வந்து கபுறு சொன்னுலப்பால் அவர்களே அழைப்பிச்சுக் கொண்டு பேசவேண்டிய வேளே சொல்லி அழைப்பிச்சுக் கண்டு பேசுவோமென்று சொன்னுர். நல்லதென்று வெளியே பிறப் பட்டவுடனே மகம்மத தாக்கல் வந்து என்னேக் கண்டு சலாம் பண்ணி நாளேயதினம் காலத்தாலே மமுதல்லிக்கானனுப்பின பெரிய மனுஷர் மகமது மசிகான் யென்கிறவனும் உசேன்மகம்மது கானென்கிறவனும் யிவர்களிரண்டு பேர்களும் வாருர்கள் யென்று துரையவர்களுடனே சொன்னதுக்கு துரையவர்கள் உங்களுடனே உத்தரவு கொடுக்கிருே மென்று சொன்னுர் யிப்போ போனீர்களே உத்தாரங்குடுத்தாரா வென்று கேட்டார் உத்தாரங் குடுத்தார் நல்லது நாளேயதினம் காலமேயப்படியே போவோமென்று வீடொன்று கன்கருயமுதலி

வீட்டுக்கு யெதிரே பிறகாச முதலி பாதியிருக்குது அதை முஸ்தீது பண்ணிக் கொடுக்கிறோம் யென்று சொல்லி ராமனை யழைத்து வீட்டை முஸ்தீதுபண்ணி மகம்மதாக்கல் வசம் பண்ணச் சொல்லி சொல்லிப் போட்டு நான் வீட்டுக்குப் போனேன்.

## 1752–ஹு ஆகொஸ்துமீ 21 ஆங்கிரசுஹு ஆவணிமீ 9ல சோமவாரம்

இத்தனை காலத்தாலே முசியே வெனசாமுக்கு ஒபிசான படியினாலே துரை முதலான பேர்கள் கோயிலுக்குப் போனார்கள் நானும் மகம்மதாக்கலும் நேத்து சொல்லப்பட்ட மமுதல்லிக்கான வக்கீல்களைச் சமாதானம் பேசுகிறதுக்குஆக வரப்பட்ட உசேன் மகம்மதுகான் மகம்மது சிகானென்கிறவனும் இரண்டுபேர்களும் வருகிறவர்களுக்கு எதிராக நம்முடைய தோட்டத்துக்கு யிப்பாலே யிருக்கிற உப்புக்கழி வாய்க்கால் பரியந்திரம் யெதிரே போயழைத்து வந்து அவர்களுக்கு நேமிச்ச விடுதியை யிறக்கிப்போட்டு நானும் மகம்மதாக்கலும் போய் துரையவர்களுக்கு கபுறு சொன்ன விடத்திலே கும்பல்கள் யெம்மாத்திரம் உண்டென்று கேட்டார். அவர்களிரண்டு பேர்களும் இரண்டு பல்லக்கின் பேரிலேதான் வந்தார்களே அவர்களது ரெண்டு கொத்தலக்குதிரை யிதல்லாமல் ஒரு சமேதாரனும் பத்து குதிரை சுவார்களும் யிருபது கற்றைட்டக துப்பாக்கிறர்களுமிருபது பேர்களுக்குண்டு கத்தி யீட்டிக்காறர்களும் அவர்கள் வேலை செய்கிறவர்களும் அவர்கள் தட்டு முட்டு யெடுத்து வந்த யிரண்டு ஒட்டகமும் யிம்மாத்திரம் சான் சாமுயுடனே வந்து விடுதியில் யிறங்கி மமுதல்லிக்கான் சலாமும் தங்களிரெண்டு பேர்கள்சலாமும் உங்களுக்குச் சொல்லி உங்களுடைய கவில் கட்டிக் கொண்டு உத்தாரப்படிக்கி வந்தோம். மமுதல்லிக்கான் உத்தாரம் நீங்களெப் படி சொன்னாலப்படி கேட்டுவரச் சொன்னார் நாங்களும் வந்தோம் நீங்களெப்போவரச் சொன்னால் அவர் வாறோம் யெப்படி நடக்கச் சொன்னால் அப்படி நடக்குறது யென்று சொல்லச் சொன்னார்கள் யென்று சொன்னதுக்கு பின்னை யொன்றும் சொல்லவில்லையா வென்று கேட்டார். பின்னையொன்றுஞ் சொல்லவில்லை யென்று சொன்னோம் நீங்களா அவர்களை யொன்றும் கேழ்க்கயில்லையா வென்று கேட்டார். உங்களுக்குத்தாரமில்லையே யானபடியினாலே ஒன்றும் கேழ்க்கவில்லை யென்று சொன்னதுக்கு அவர்களுக்கு வயது எவ்வளவுவென்று கேட்டார். மகம்மதுசிகானுக்கு எண்பது மட்டுக்கும் உண்டு. உசேன் மகம்மது கானுக்கு அறுபத்தஞ்சு உண்டென்றும் தோத்துது. யென்று சொன்னதுக்கு அவர்கள் நம்முட சொலுதாதுகள் அசனுதி கான் வகையிராக்களை காவல் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் அவர்களைக் கூட்டியழைத்து வந்தார்களா அவர்கள் மாத்திரம் தான் வந்தார்களாம் நம்முடைய சொலுதா. வகையிராக்களைக் காணோம் யென்று சொன்னோமானால் ஏன் வந்தார்கள் அவர்கள் வந்தாலே யல்லாமல் ஒரு பேச்சுப்பேசத்தக்கதில்லை யென்றார் சொன்னது மல்லாமல் அவர்களைப் போகச் சொல்லென்று சொன்னார் அப்படி சொல்ல வேண்டாமிங்கே சாயங்காலம் அழைப்பிப்போம் அப்போது நாம்தானே பேசுகிறோம் நீங்களொன்றுஞ் சொல்ல வேண்டா மென்றுஞ் சொன்னார் நல்லது யென்று சொன்னப்போலே அவர்கள் வரச்சேரி கட்டாரி கத்திகள் சூரிகள் கூட கொண்டுவரப்போகாது.

சோதிப்பார்களென்று சொன்னூர். அந்தப்படிக்கு மகமதாக்கள்தான் போய்ச்சொல்லி கப்பல் கூட கொண்டு வராமல் திட்டம் பண்ணி பின்னே யழைத்து வாறேனென்று சொன்னுன். நல்லது போங்கேய வென்று துரையவர்கள் சொன்னூர். நாங்களுமனுப்பிவிச்சுக் கொண்டு வெளியே வந்தவுடனே மகம் மதாக்கலிருந்துக் கொண்டு நான் மதாமையுங் கண்டு பேசி அப்பாலவர்கள் அண்டைக்கும் போயி கண்டு பேசுகிறேனென்று சொல்லி யனுப்பிவிச்சுக் கொண்டு போனுன் நான் வீட்டுக்குப் போனேன். இத்தனுள் பகலுக்கு மேலாக ஒருமணிவேளைக்கு நேத்து டபால் வைத்த சேவுகர்களிலே ஒரு சேவகன் வந்து இங்கிலீசுக்காறர் ஏறி வந்த சலங்கு பதினென்றும் சுலுப்பு ஒன்றும் நம்முடைய கப்பல் வந்து பிடிச்சு சலங்கிலே யிருந்த வெள்ளைக்காறர் யெல்லாரையும் கப்பலின் பேரிலே ஏத்திக்கொண்டு சலங்கையும் பிடிச்சு கப்பலிலே கட்டிக்கொண்டு ரெண்டு பீரங்கி போட்டானென்று வந்து கபுறு சொன்னுன். அப்பால் கப்பல்காறன் பிடிச்சு பீரங்கி அடையாளத் துக்குச் சுட்டவுடனே மனுஷர்கள் அகப்பட்டார்கள் யென்கிற சங்கதி துரையவர்களறிந்து துரையவர்கள் கோட்டையே போயி கோவர்ணமாவிலே போயி மெத்தையின் பேரிலே ஏறி கப்பல் பாயெடுத்து ஓடி வருகிறதைப் பார்த்தவுடனே என்னை யழைக்கச் சொன்னூர் என்று சேவுகன் வந்து அழைத்தவுடனே நான் கோட்டையே போயி துரையவர்களைக் கண்டவுடனே இங்கிலீசுக் காறரெல்லாம் அகப்பட்டார்கள். சுலுப்பு ஒலாந்தாக் கொடிபோட்டு வருகுது. ஆனபடியினுலெ இங்கிலீசுக்காறருது அல்லாமல் சலங்குகள் மாத்திரம் இங்கிலீசுக்காறருது என்று சந்தோஷமாய்ச் சொன்னூர். நீங்கள் கபுறுவைத்துப் பிடிக்கவேணுமானுல் அகப்படாத வஸ்து வுண்டாயென்று சொன்னேன். அப்போ முசியே பெடுத்தல்லேனும முசியே தொத்தேலும் கூடயிருந்தார்கள். அப்பால் சீமை கப்பல் கப்பித்தான் முசியே லேசுக்கலே (Lesquelen) வென்கிறவன் வந்தான் அவனுடனே பேசியிருந்து வீட்டுக்குப் போனூர். நானும் என் கச்சேரியே வந்தேன்.

அப்பால் பகலுக்கு மேலாக வாசற்படியிலிருக்கிற சேவகற் களுக்கும் சென்டினேர் காக்கிற வெள்ளைக்காறர்களுக்கும் துரையவர்கள் உத்தாரமும் மதாமும் உத்தாரமும் குடுத்தார்கள் அந்த உத்தார வயனம் யென்னவென்றுல்,

ஆர்வந்தாலும் கத்திக்கட்டாரிகள் சூர்கத்திகள் வகையிராக்கள் ஆயுதங்கள் கொண்டுவந்ததெல்லாம் சோதித்து வாங்கச்சொல்லியும் மமுதல்லிக்கான் வக்கீல்கள் வருகிற உசேன் மகம்மதுகான் மகம்மது சிக்காணையும் அவர்கள் பிறகே வருகிற பேர்களையும் நன்றுய்ச் சோதிக்கச் செய்தும் ஆயுதங்களிருந்ததை வாங்கிக் கொள்ளச்சொல்லியும் உத்தாரம் பண்ணியிருந்தார்கள் அதின் பேரிலே பாப்பய்யபிள்ளை தன்னை யெதிரே போயழைத்து வரச் சொல்லி வைப்பார்கள் என்றும் குதிரைகள் முதலானது முஸ்தீது பண்ண யிடத்தில் பத்து மணிக்குத்தானே மமுதல்லிக்கான் ஸ்தானுபதிகள் வந்துவிட்டார்களென்று சாயங்காலம் துரை வீட்டுக்கு வந்த விடத்தில் கபுறு கேட்டு குதிரைகள் ஆனைகள் முதலானதுகளையும் யனுப்பிப் போட்டு கட்டாரிகளுடனே உள்ளே நுழைந்தார்கள். வாசற்படியிலிருக்கிற சந்திரேன் கட்டாரிகளை

வாங்கச் சொல்லி பாப்பய்யபிள்ளையையும் அவன் மகனையும் சொன்னாப்போலேயும் அவர் சத்தே மாட்டமென்றும் அதன்பேரிலே துப்பாக்கி புடங்கினாலே யிரெண்டு மூண்டுயிடி போட்டாப்போலே கட்டாரிகளை குடுத்துவிட்டார்கள். துப்பாக்கி யிடிக்கு அவன் மகன் பொறுக்கமாட்டாமல் தாமே விழுந்தாப் போலேயும் யிதிலே கூட வந்த துலுக்கர்களெல்லாரும் சிக்கிறமாக கத்திகள்கூட கட்டாரிகள் குடுத்துவிட்டாலும் சின்ன சின்ன சூரிகள் தலப்பாகுகளுலே சட்டைப் பையிலே யிருக்குமென்று தலைப்பாகைகளைக்கூட வாங்கி வாங்கி யெங்குஞ் சோதிச்சு விட்டார்கள்யென்றும் வந்து சொன்னாள். அப்பால் சாயங்காலம் ஆன ஒரு நாழிகைக்கு மழுதல்லிக்கான் வக்கீல்கள் வந்தவர்களை மகம்மதாக்கலை அழைத்து வந்தும் துப்பிளேயிச்சு பேட்டி பண்ணிவிச்சான். அவர்களிரெண்டு சாலுவை கொண்டு வந்து போத்தினார்கள். அப்பால் சந்து நேரம் பேசிக்கொண்டிருந்து ஆன பிறபாடு நல்லது நீங்கள் வந்து என்னுடனே சொன்ன பேச்செல்லாம் துரயைவர்கள் உடனே சொல்லி அப்பால் நாளை உங்களை துரையவர்கள் பேட்டி பண்ணிவிக்குறாருமென்று சொல்லி பாக்கு வெத்திலை பன்னீர் கொடுத்துப் போகச்சொன்னார்களென்றும் அவர்களனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள்யென்றும் போகச்சே சந்தினேர்கள் கத்திக்கட்டாரி களில்லாமல் சோதிர்சு விட்டார்களென்றும் வந்து கபுறு சொன்னார்கள்.

இத்தனாள் வழுதாவூரிலே யிறங்கியிருக்கிற நம்முட பிறஞ்சுக்காறர்கள் அறமாதும் தலைவணங்கிய முசியே கெற்சாமும் திருவீதியின் பேரிலே போகத்தக்கதாக வழுதாவூர் விட்டு லசுக்கர் கூச்சாரியி மருதூரிலே போய் யிறங்கிறாய் சேதி வந்து சொன்னார்கள்.

1752ஷ ஆகொஸ்துமீ 22வ ஆங்கிரசுஷ ஆவணிமீ 10வ. செவ்வாய்க்கிழமை

இத்தனாள் காலத்தாலே நேத்துப் பிடிச்சு யிங்கிலீசுக்காறர்கள் ஒபிசியால்மார்களையும் நாலு பேர்களையும் ஒரு பொம்பெடுத் தோரும் ஒரு மங்கள் மேஸ்திரியும் ஆறு பேர்களையும் யிருக்கிற துரை விட்டை அழைத்து வந்தார்கள். ஆறு பேர்களிலே ஒபிசியாலொருத்தன் வியாதியாயிருக்கிறவனை யசுப்பித்தாலிலே யனுப்பி விட்டார்கள். அவனொருத்தன் போக மத்தவஞ்சு பேர்களையுமிறக்கி துரையவர்கள் வீட்டை அழைத்து வந்தார்கள்—அப்பால் அவர்களுக்கு துரையவர்கள் உபசாரம் பண்ணியப்பால் அதிலொருவன் பிறன்சுப் பேசுகிறான் அவனும் துரையவர்களும் பேசியான பிற்பாடு அவர்களுக்குப் பல்லக்குகளைக் குடுத்து மோன்சியேர் தொத்தேல் வீட்டே யனுப்பினார்கள்.

அப்பால் துரையவர்களென்னை யழைப்பிச்சு யிறநூறு மூன்நூறு சொலுதாதுகளென்றும் சம்பத்திராயன் மேஸ்தர் கிலேஸ் (Mr. Cluce) வாறார்களென்றும் நயினார் சேவகர்கள் வந்து கபுறு சொன்னார்களே யெல்லாம் அடத்தம் சுலுப்பு ஒலாந்தாக்காறருது சதுரங்கப்பட்டணத்திலிருந்து நாகப்பட்டணத்துக்கு கருங்கல் லு ஏத்திப் போகுது அதை அடிகட்டு கூட சோதிச்சார்கள். அதிலொருத்தரு

மில்லை. இந்த சலங்கிலே வந்தவர்கள் யெண்பது பேர் சொலுதாதுகளும் நாலு பேர் ஒபிசியால்மார்களும் ஒரு பீறங்கி மேஸ்திரிகளும் ஒருமங்கள மேஸ்திரியுமாக எண்பத்தாறுபேர்மாத்திரம்வந்தார்கள். அங்கேயிருந்து தேவனும்பட்டணத்துக்கு அனுப்பிவிச்சது அந்தப்படிக்கு தேவனும்பட்டணத்துக்கு யெழுதின காகிதம்கூட வந்த ஒபிசியால்மார்கள் காண்பிச்சார்கள். ஆனபடியினாலே சம்பத்துராயனும் மேஸ்தர் கிலேசும் (Mr. Cluce) பீறப்படடதேயில்லை. பொய் சொன்னார்களானலிப்போ நம்மை சேவிக்க வேணுமென்றாலும் நம்மண்டை யிருப்பார்கள் யிதிலே ரெண்டு பேர்கள் ஒபிசியால் மார்களில் சிவிசுநவென்று ஒரு சாதிஅவர்கள்முன் இங்கிலித்தோர் ராசாவைக்கேட்டு கும்பினியர் அரு நூறு பேர்களை வாங்கிக்கொண்டு யிவடத்துக்கு அனுப்பிவிச்சார்களானபடியினாலே அவர்களில் சேர்ந்தவர்கள் யென்றும் மேஸ்தர் லொரென்சுவுக்கு மேஸ்தர் கில்லேசு (Mr. Laurence and Mr. Cluce) க்கும் ஒருத்தருக்கொருத்தர். விவகாரம் தீர்ந்தது. அவர்களாறும் பிறப்படுகிறதில்லை யென்றார்கள் சொன்னதாக துரையவர்களென்னுடனே சொல்லிய கபுறு கேட்ட பிற்பாடு தேவனும்பட்டணத்தில் என்ன செய்கிறார்களென்று கேட்டாரெப்படி தெரியும் நேத்து சாயங்காலம் பிடிச்சு சேதியின்றைக்கு—அவர்களறியப்போறது இன்றைக்கு —அங்கே நடந்த சேதிகளும் யிவ்விடத்திலேயிருக்கிற வர்த்தகர்கள் துபாசிகளிலே நாலத்துரெண்டு பேர்கள் பேசிக்கொண்டதின் பேரிலே அறிஞ்சு அப்பால் இவ்விடத்துச் சொல்லி அனுப் போறதும் வெளிகளிலே பேச்சுக்கள் துவனிக்கப் போறதும் சுறுக்கிலே யறியக்கூடுதாமென்று சொன்னேன். அப்பால் மதாக்கல் வந்து சலாம் பண்ணி மதாம் காம்பிருவிலே பார்த்தது போலே நடந்தான். அப்போ துரையவர்களும் மதாம் காம்பிருவே போனார்—நான் யென்கச்சேரியே வந்தேன்.

பதினோரு மணி வேளைக்கி மமுதல்லிக்கான் ஸ்தானுபதிகளானவர்கள் வந்த மகம்மது சீக்கானும்—உசேன் மகமது கானையும் இரண்டு பேர்களையும்—மகம்மதாக்கல் அழைத்துக்கொண்டு துரைவீட்டு வாசர்ப்படிக்கு மட்டுக்கும் வந்தவுடனே யிதிலே சோபுதாரர்கள் வந்து துரையவர்கள் சாப்பிடுகிற வேளையிலே ராத்திரியேழு மணிக்கு அழைத்துக்கொண்டு வரச்சொன்னாரென்று வந்து சொன்னதுமல்லாமல் யிவர்களை அழைத்துக்கொண்டு கடற்கரை ஓரம் அலங்கத்து கொத்தளங்களிமிதுகளும் கோட்டையுங் காண்பிக்கச் சொன்னார் யென்று சொன்னமாத்திரத்திலே கடற்கரை ஓரமே போனார்கள் அங்கே யிங்கிலீசுககாறர் சொலுதாதுகளைப் பிலிச்சு வந்தவர்களை யிறக்குறசாடைகள் காண்பிக்கச் சொன்னார்கள் அதைப்பார்த்தார்கள். அப்பால் கொத்தளங்கள் பேரிலே வைத்திருக்கிற யிறுபத்துநாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிகள் குந்தானி பீரங்கிகள் முதலானது வைத்திருக்கிற யிடங்களை யெல்லாம் காண்பிச்சு கோட்டையிலே கட்டுகிற குவற்ணமாவும்போய்பார்த்து அப்பால் சாந்தாசயபு செத்துப் போனதுக்கு அவர் குமாரனை மாத்திரம் பொறுசி விசாரித்துப் போட்டு அவர்கள் விடுதியே போனார்கள் யென்று சேதி வந்து சொன்னார்கள்.

இத்தனுள் ராத்திரி துரையவர்கள் அண்டைக்கு மகம்மதல்லி கான் ஸ்தாளுபதிகள் வந்தவர்கள் போயி சந்திச்சு பேச்சுவார்த்தைப் பேச வேண்டியது பேசிக்கொண்டு வூருக்குப் போறதுக்கு அனுப்பிவிச்சுக் கொண்டு காலமே போக வழுதாவூர் வாசற் படிக்கும் உத்திரவு வாங்கி விடுதியே போளுர்கள் யென்று ஒன்பது மணிக்கு வந்து கபுறு சொன்னுர்கள். வந்த காரியம் யென்ன போறகாரியமென்ன வென்று கேட்டார். அதுக்கு சேதி சொன்னவர் குறிகைப் பேச்சு யெங்கள்— சொலுதாதுகளையும் எங்கள்தாலூக்கு அனதிகான் வகையிராக்களை விட்டால்–அப்பாலுங்களுக்கும் மெங்களுக்கும் சமாதானப் பேச்சு பேசு கிறதேயல்லாமல் அதுக்கு முன்னே பேசத்தக்கதில்லை யென்று திர்மான மாய்ச் சொன்னதுக்கு–நாங்கள் ரூபுரூபிலே போய் மமுதல்லிகானுக்கு உங்களுடைய அபிப்பிருயத்தைச் சொல்லி அப்பாலவரவர்களுக்குச் சம்மதியாளுல் வாரோமென்று சொல்லி யனுப்பிவிச்சுக்கொண்டு போறதாய்ச் சொன்னுர்கள். இங்கிலீசுக்காறர்கள் சொலுதாதுகள் எண்பது பேர்களையும் யிறக்கி கோட்டையிலே கொண்டு போய் வைத் தார்கள். இத்தனுள் நடந்த அதிசயமான சமாச்சாரமென்னவென்றுல் முன் மகாரார்சராசஸ்ரீ துரையவர்கள் உத்தாரப்படிக்கு ஆற்காட்டிலே நான் அனுப்பியிருக்கிற தூபக்குண்டை சாம்பய்யன் எனக்கு யெழுதின காகிதம் அறுக்காறு கொண்டு கொண்டு யித்தனுள் யிவடத்துக்கு வறச்சே மேட்டிலேயிருக்கிற நயினுர் சேவுகர் அந்த அறுக்காறர் கொண்டுவந்த காகிதத்தை வாங்கிக்கொண்டு நயினுர் கையில் கொண்டு போய் கொடுக்க அவன் கொண்டுபோய் பாப்பய்யப்பிள்ளை கையில் கொடுக்க அந்தக்காகிதத்தை பாப்பய்ய பிள்ளை வாங்கி பிரிச்சு படிச்சுப் பார்த்ததில் அந்த மந்தலப்புப்படியே யெனக்கு வந்து சொன்ன மனுஷர் வாக்கு மூலப்படிக்கு யெழுதிவிச்ச வயண மாவது—இன்று பகல் மூணுஞ்சாமத்துக்கு ஒரு காகிதம் வந்து — நயினுர் மனுஷன் மேட்டிலே பிடிச்சு பாப் பய்யபிள்ளை வசத்திலே வந்து அந்த மத்தலப்பு மகாராசராசஸ்ரீ அவர்களுக்கு சாம்பய்யன் ஆசீர்வாதம் ஆற்காட்டுக் கோட்டையிலே 40 நாற்பது பேர் பாறுக்காறரும் பத்துபேர்—பீரங்கிகளும் யிருக்கி ருர்கள். மகானந்துல்லா யிங்கேயிருக்கச்சே அங்கங்கே குமுக்கு யனுப்பிக்கொண்டு யிருந்தான். அவனிப்போ தண்டுக்குப் போய் விட்டான். அப்துல்வாபுகானும் மகானந்துல்லாவும் கலசைப் பாக்கம் வந்து சேர்ந்தார்களாமிவடத்துக்கு வாறதாய் பெரிய தேவடியும் ராயசீவீடும் காலிபண்ணுருர்கள். நாலு நாளைக்கு முன்னே மகம்மதல்லி அரிசி சாமான்—மருந்து குண்டு தண்டுக்கு யனுப்பச்சொல்லி யிங்கேயிருக்கிறவர்களுக்கு யெழுதினுன். நேத்து வாண்டா மென்று யெழுதினுன். மகம்மதல்லியும் புசங் கராயனும் செஞ்சிகில்லே வாங்கிக் கொண்டு பிறகு ஆற்காட்டுக்கு வந்ததாய்ச்சொல்லுகிருர்கள் இவ்விடத்து சமாச் சாரம் யிப்படி யிருக்குதென்று தெலுங்கிலே யெழுதியிருந்தது. எழுதினவர்கள் மனுஷனல்லது தங்கள் சித்தம் அறியக்கட்டளை யிடவும்யென்று யெழுதினபடிக்கு எழுதினது

1752ஹு ஆகொஸ்து௴ 23௳ ஆங்கிரசுஹு ஆவணி௴ 11௳
புதவாரம்

இத்தனுள் தேவனாம்பட்டணம் கோவற்ணதோர் மேஸ்தர் இஷ்டார்கு (Mr. Stark) காகிதம் இந்த யிங்கிலீசுக்காறர்களை பிடிச்ச சம்மதிக்கு ஆக யெழுதி சோபுதாரர்கையிலே அனுப்பினதைக் கொண்டுவந்து துரைகையில் கொடுத்ததாய்ச்சொன்னார்கள்.

1752ஹு ஆகொஸ்து௴ 24௳ ஆங்கிரசஹு ஆவணி௴ 12௳
குருவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்டசேதி காசிதாசுபுக்கஞ்சி குமாஸ்தாக்கள் கோவற்த்தனதாசு குமாஸ்தாக்கள் வலலபசுந்தரதாசு குமாஸ்த்தாக்கள் யிவர்களுக்கு காசுத்தின்கான் லசுக்கர் சமாச்சாரமும சலாபத்துசங்கு லசுக்கர் சமாச்சாரமும் வந்ததாகவும் சொன்னார்களென்று நான் கேழ்விப்பட்டேன். அந்த சேதியென்னவென்றால காசுத்திக்கான் பாசிராயன் குமாஸ்தா பல்லாரிராயன் ஒல்க்கார் யென்கிற மராட்டியர் சறுதார்கள் வகையிராக்களையும் கூட்டிக்கொண்டு 60.000 அறுபதினாயிரம் குதிரையுடனே நற்மதாயென்கிற நதி கடந்து யிப்பறம் புறணபுரி யென்கிற பட்டணம் வந்து சேர்ந்தான் யென்றும் அதுக்கு யிப்பறம் அவரங்காபாத்து எட்டு நாளைப் பயணமென்றும் அவரங்காபாத்து வந்து சேர்ந்தவுடனே மழைக்காலமென்று அங்கே சாவணிபண்ணுவானென்றும் அல்லது யிப்பரம் அயிதராபாத்துக்கு வந்தாலும் வருவானென்றும் அதை ஊர்ச்சிதமாய்ச் சொல்லிப போகாதென்றும் நாமதைக் கடந்து யிப்பறம் வந்தவுடனே தக்கனசுபாவிலே (Deccans) யெத்தனைபேர்கள் கில்லேதார்கள் மனசுபாதாரர்கள் சாகிர்தாரர்கள் சீமிதாறர்கள் பாளையக்காறர்கள் முதலானபேர்கள் பாதுசவினுடைய குடையின் கீழே யிருக்கப பட்டவர்கள் யெத்தனைபேர்களுண்டோ அத்தனை பேர்களுக்கும் பாதுசாவினுடைய பர்வானா—காசுதின்கான் சொன்னபடிகேட்டு நடந்துகொள்ளச் சொல்லியும் சலாபத்துசங்குவினுடைய பேச்சு கேழ்க்கக்கவையில்லை. யென்றும் பாதுசாவுக்கு சலாபத்துசங்கு துரோகம் பண்ணினனென்றும் நிம்மக்கு அறும் யென்றும் அவனைப் பிடிக்கச்சொல்லி காசுதின்கான் வசத்திலே ஒப்புவிக்கச்சொல்லியும் யில்லாவிட்டால் சலாபத்து சங்குவை அவனவனுக்கு நேரிட்டால் வெட்டிப்போடச் சொல்லியும் யிப்படி பலவிதமாக யெந்தவிதமும் சலாபத்துசங்குவை வெட்டிப்போட்டு விடச்சொல்லி பாதுசா யெழுதிகொடுத்த பரமானுக்களை காசுதின்கான் முன் சொல்லப்பட்ட கில்லேதார சாகிர்தார் மன்சுபேதார் சமேதார் வகையிருக்களுக்கு யெல்லாம் கொடுத்தனுப்பினதுமல்லாமல் சலாபத்துசங்கு அண்டைபிலே யிருக்கிற பேர்களுக்குகூட அனுப்பிவிச்சதின்பேரிலே சலாபத்துசங்கு வண்டையிலே யிருக்கிறபேர்கள் சமேதாறர்கள் மனசுபாதார்கள் வகையிரா துலுக்கர் யென்கிறவர்கள் இந்துஸ்தானிகள் மராட்டியர் வகையிராக்களுக்கு யெல்லாம்

பாதுஷா பர்வாஞ வந்ததாகவும் அதின்பேரிலே சிறிதுபேர்களெல்லாம் போக்கும் பேரிலே யிருக்கிறூர்களென்றும் சயிதுலசுக்கர்கான் வகையிரா பெரிய மனுஷர்கள் சலாபத்துசங்குவுக்கு ரொம்பவும் தெரியபடச் சொல்லுகிறதாகவும் தமையனுடனே சண்டை பண்ணுகிறதும் விரோதப்படுகிறதும் உக்ததமல்ல அப்பாலும் யிது பாதுசாவினுட உப்புத்தின்னு அவர்பேரிலே கத்திகட்டுகிறது தெய்வத்துக்கும் யேராது லோகத்துக்கும் ஏராதென்று ரொம்பவும் தெரிப்பப்படச் சொல்லுகிறுப்போலேயும் வெள்ளைக்காறர் பெலமிருக்கச்சே அவர்களெம்மாத்திரம் மடிக்கலாமென்றும் போலேதானே நேமிச்சுக்கொண்டு சயிதுலசுக்கர்கானுக்கு சத்துத்தரம் சொல்லாமல் அதைத் தொட்டு மூன்னே என்னபேச்சு நாசறசங்கு கேளாதே போனதைத் தொட்டுதானே இத்தனை அனர்த்தத்துக்கு யெல்லாம் யிடமாச்சுதுயென்று சொல்லி நல்லது காசுதின்கானுக்கு ஆகிலும் போய்ச்சொல்லுவோமென்று வொரு பேரைப்பேட்டுக்கொண்டு சயிதுலசுக்கர்கானுக்கு அவுரங்காபாத்துக்கு காசுதின்கானண்டைக்குப் போனதாகவும் பின்னையிஞ் சிறிது மன்சபதாறர்கள் சகீர்தாறர்கள் வகையிராக்களிருக்கிறவர்களிலே சிறிது பேர்கள் அயிறங்காபாத்துவுக்கு காசுதின்கானண்டைக்குப் போனதாகவும் அதின்பேரிலே சலாபத்துசங்கு ரொமபவும் விசாரத்துடனே யிருக்கிறுனென்றும் நீசாமல்லிக்கானும் அவன் தான் பிகடாமிச்சு யிருக்கிறுன். அவனும் போவாரோ அல்லவோ யென்றும் தமையன்வரட்டுமென்று யிருக்கிறுனே தெரியாதென்று இந்தச் சேதியெல்லாம் எழுதி வந்தது. யென்று சொல்லிக்கொண்டதுமல்லாமல் யிவடத்திலிருந்து யின்னம் குமுக்கு அனுப்பச் சொல்லி துரைக்கு எழுதிவந்ததாகவும் சொல்லிக்கொண்டார்கள் இருக்கிற பவுன்சும் பீறங்கிகளும் விஸ்தாரமாயி முஸ்தீது பண்ணிக்கொண்டு சலாபத்துசங்கு வெளிப்பாளையம் போட்டு சலாபத்து சங்கு யெதிரே நடக்குறதாய்ச் சொன்ஞர்கள்.

இத்தனுள் சாயங்காயம் பிசப்புப் பட்டமாயிசகிறூரிட்டுக்கொள்ளாமல் வந்திருக்கிற பாதிரிபேர் அந்தோனியார் மணக்குளத் தங்கரைசந்து யண்டையிலே நான் உட்கார்ந்துக்கொண்டிருக்கச்சே அவர் வீட்டுக்குள்ளே போறவர் என்னையழைத்து தன் பல்லக்கை நிறுத்தி யிப்போ மூசியே துப்பிளேயிக்சு யென்னை அழைப்பிச்சு சொன்னது சென்னப்பட்டணத்துக்கு கடசிக்கப்பல் வந்ததில் புடுதிகால் ராசா (King of Portugal) சொல்லியனுப்பிச்சுது மயிலாப்பூர் புடுதிசுக்காறர்களுது ஆனபடியிஞலே அந்த மயிலாப்பூரிலே மேஸ்தர் போஸ்கவேன் (Mr. Boscowan) என்கிற அமிரால் போனபோது அகிலே யிருந்த பாதிரியாரையும் பிடிச்சுக்கொண்டு புடுதிககீசு (Pot uguese) கொடியை யிறக்கிப்போட்டு யிங்கிரேசுக்கு கொடியை போட்டதை மறுபடி புடுதிக்கீசுகாறர்களுக்குததானே யெப்போதையும் போலே கொடுத்துவிட்டு இங்கிலீசுக் கொடியையும் கழட்டிப்போட்டு விட்டுப் போகச்சொல்லியுஞ் சொல்லியனுப்பிவிச்சப்படியிஞலே இங்கிலீத்தேர் ராசா யிங்கிரேசு கும்பினியாருக்கு கட்டளையிட்டது முன் —அங்கேயிருந்து வந்த பாதிரி பிரோ—அந்தோனியாவுக்குப் போயிருக்கிறுன் அவன் வசத்திலே மயிலாப்பூரை ஒப்பிவிச்சுப் போடச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்யென்று யிங்கிரேசுக்

கும்பினியார் சென்னப்பட்டணம் கோவர்ணதோரும் கோன்சே லுக்குமெழுதியனுப்பிவிச்சதாகவும் அந்த ஒடுதி வந்து பார்த்துக் கொண்டவுடனே மயிலாப்பூரிலே போட்டிருந்த யிங்கிரேசுக் கொடியையும் யிறக்கிப் போட்டு யிருக்கிற சொலுதாதுகளையும் அழைப்பிச்சுக்கொண்டு போனார்களென்றும் பீரங்கிகளையும் யிறக்கிக் கொண்டு போனார்களென்றுமங்கே யிருக்கிற பிசப்பு முதலான பறங்கிக்காறருடனே யிந்தச் சேதி சொன்னது யெழுதி வந்ததாய்ச் சேதி முசே துய்ப்ளேயிக்சு யென்னுடனே சொல்லி யென்னைப் பயணமாயிருக்கச் சொன்னார். நல்லனுவ சல்லவ யிதைவிட நல்ல சேதி யென்னயிருக்கிறதென்று சொன்னார். அதுக்கு நான் முபாற்கு சொல்லி சினயோர் கிருந்தி சொன்னமட்டுக்கும் நிசசமாசாரந்தான் நல்ல சேதி நீங்கள் யென்னை மறக்கவேண்டாம் யென்றுபசாரமாய்ச் சொல்லியனுப்பிவிச்சுக்கொண்டு நான் கச்சேரியே பந்தலுக்கு வந்தேன். நாளை பிரான்சு ராசாவினுடைய போ பண்டிகையான படிபினாலே யித்தனாள் சாயங்காலம் பீரங்கிகள் விஸ்தாரமாய் கோட்டையிலேயும் கப்பல்களிலேயுஞ் சுட்டார்கள்.

1752வுப ஆகொஸ்தும் 29உ ஆங்கிறசவுஸ ஆவனிமீ 17உ மங்களவாரம்

இத்தனாள் பாகூரிலிருந்த நம்முட பவுன்சு நேத்து ராத்திரி பத்து நாழிகைக்குப் பாகூர் விட்டு மருதூர் போய்ச் சேர்ந்த கபுறு மமுதல்லிகான் பவுன்சுக்கு யித்தனாள் காலத்தாலே அறியப்பட்டு யவர்கள் பவுன்சு பாகூர் வந்து கொள்ளையிட்டு சிறிது வீடுகளும் கொளுத்தினதின் பேரிலே யிங்கே யிருந்து யோடிவந்த சனங்கள் சொன்ன வார்த்தைப் பிறகே மமுதல்லிக்கானுடைய மராட்டிய குதிரைகள் வந்து கொள்ளையிட்டு வாரார்களென்று சொன்ன மாத்திரத்திலே வில்லியநெல்லூரிலே உண்டான சமஸ்தமான சனங் களும் போட்டது போட்ட வாக்கிலே ஓடிவந்தவர்களும் எடுத்து வந்தவர்களுமாய்ப் புதுச்சேரியே வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்து அமீலாக யிருக்கிறவன் ஆணையப்பிள்ளை குமாரன் றங்கப்பிள்ளை தன் பெண்சாதி வகையிராக்களையும் கும்பினீர் பணம் யிருந்ததையும் கணக்கு சுருணைகளையும் யெடுத்துக்கொண்டு புதுச்சேரியே அனுப்பி விட்டு தானும் பத்து சேவுகருமாய் ஒழுகரை வந்து சேர்ந்தானென் றும் அரும்பாத்தைபிள்ளை குமாரன் முத்தய்யபிள்ளை யென்கிறவன் அவனவர்கள் சாவடியில் போயிருந்தவன் அவ்விடத்திலேயிருந்த சருகைப்பாளை நெலுநீர் வகையராயெல்லாம் யெடுப்பிச்சுக்கொண்டு புதுச்சேரியே வந்து சேர்ந்தானே ஆனால் மத்தப்பேர்வெளிகளிலே யிருக்கிற பேர்கள் ஓடிவாரதும் தட்டுமுட்டுகள் யெடுத்துக் கொண்டும் வாறதை ஆச்சரியமாயெழுதவேண்டியதில்லையே இந்தப் படிக்கு காபிரு விழுப்புறம் தந்துவள நெல்லூர் குடிகள்கூடவ லசை வந்ததாய்ச் சொன்னார்கள் இத்துடனேகூட முசியே புரி மதாம் தேசகுர்தன் (Mr. Bury and Desgurdin) வகையிரா யித்தனாள் காலத் தாலே முதாலூர் கோட்டைக்கு முசியே வெறியென்று யிருக்கிற வனைப் பார்க்கப் போனவிடத்திலே மாமியார் மாமனார் வந்தார் களென்று முசியே வெறி கோட்டைக்கு கொம்மாந்தாமானபடி

யிலுலேயும் பீரங்கி யிருபது முப்பது மட்டுக்கும் போனபோதும் சாப்பிடுகிறபோதும் சுட்டதின்பேரிலே சண்டையாச்சு சத்ரு வந்து வெகு நாபிருவாயி தூரதூரங்களிலிருந்தும் வலஸை வாறதாய்ச் சொன்னார்கள்.

1752ஷு ஆகொஸ்துமீ 30உ ஆங்கிரசுஷு ஆவணிமீ 18உ
புதவாரம்

இத்தனுள் சாயங்காலமானபிறகு மமுதல்விகான் மனுஷாகள் நம்முட கும்பினீர் கிராமங்களை கொளுத்துகிறதும் கொள்ளை யிடுகிறதுமான சமாச்சாரங்கள் அடிக்கடி ஆணையப்பிள்ளை குமாரன் றங்கப்பிள்ளை யெழுதியனுப்புகிற சேதியின் பேரிலே துரையவர்கள் மனது கிலேசம் தோத்தி அதுக்கு சானசாமி பண்ணியனுப்புகிற அலுவலின் பேரிலேயிருந்ததுமல்லாமல் வெகு யோசனையின்பேர்லே யிருந்தார்.

1752-ஷு ஆகொஸ்துமீ 31உ ஆங்கிரசுஷு ஆவணிமீ 19உ.
குருவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போயி கபுறு சொல்லி வந்த பிற்பாடு கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால் நேத்து மமுதல்விகான் பவுன்சு வந்து திருக்காஞ்சியண்டையிலிறங்கி அரியர்ங்குப்பத்துக்கு அடுத்த பூரணங்குப்பம்—அழிசபாக்கம் முதலான யிடங்களிலெல்லாம் கொள்ளையிட்டு மாடுகளையெல்லாம்—ஓட்டிக் கொண்டு போனதுமல்லாமல் வில்லியநெல்லூர் ஓதியம்பேட்டு வகையிரா கிராமங்களிலெல்லாம் வந்து கொள்ளையிட்டு சரிக்கட்டி மாடுகளையும் ஓட்டிக் கொண்டு போனதுமல்லாமல் குதிரைக்காரர் வந்து றங்கப்பிள்ளை பத்துபேர் துப்பாக்கிகாரர்களும் அவனுமாய் லக்ஷுமணநாயக்கன் மண்டபத்திலே யிருந்தவர்களை குதிரைக்காரர்கள் வந்து சுத்திக்கொண்டு அதனால் வோடிப்போய் வழுதாவூர் சேர்ந்தார்கள் யென்றும் அதன்பேரிலே வழுதாவூரிலே யிருந்து கோணப்பறங்கியும் சிறிது பாறுக்காறர்களும் குதிரைக்காரர்களும் வந்து பீறங்கிசபுத்தம் துப்பாக்கி சபுத்தம் காண்பிச்சமாத்திரத்திலே வந்த குதிரைக்காறர்களெல்லாம் ஓடிப்போய்விட்டதாகவும் லக்ஷுமணநாயக்கன் மண்டபத்தினண்டையிலே வழுதாவூரிலிருந்த நம்முட பவுன்சும் முசியே கெற்சாமும் வந்து யிறங்கினார்கள். யென்று சேதி வந்து சொன்னார்கள்.

இத்தனுள் பகலைக்கு மேலாக நாலுமணி நேரத்துக்கு குண்டுசாலையிலே சென்னப்பட்டணத்து வழியிலிருக்கிற பாளையக்காற சேவுகனும் வந்து கபுறு சொன்னதென்னவென்றால் பாதுசா பற்வானு கொண்டு கொண்டுஒரு மொகுலன்பல்லக்கும் நாலு குதிரையும் பத்துபேர் அறுக்காறுகளுடனே வந்து சேர்ந்தார்கள் என்றும் அவன்—சோலைத்தாண்டவன்சாவடியிலே வந்து யிறங்கியிருக்கிறான். நாங்கள் போய் கேட்டதுக்கு முன்னே யெழுதப்பட்டவயணமாம் படியே சொல்லி துரையவர்களுடனே போய் கபுறு சொல்லச் சொன்னான். அந்தபடிக்குப்போய் துரையவர்களுடனே கபுறு சொன்னதுக்கு நல்லது போவென்று சொன்னார் யென்று வந்து கபுறு சொல்லிப்போட்டு வழிச்சாரியே போனார்கள்.

நான் அங்கிப்போட்டுக் கொண்டு வெளியே பிறப்படுவோமென்றி ருக்கச்சே துரையவர்கள் அழைக்கிருர்கள் யென்று சேவுகன் வந்து அழைத்தான். போனவிடத்திலே துரையவர்களும் சம்பாவுறு கோயில் சிரேஷ்ட்டரும் கடற்கரை தீருவைச்சாவடியிலே போயிருக்கச்சே போயாசாரம் பண்ணி நின்றவுடனே என்னைக் கிட்ட அழைத்துப்பார்த்து சாவினுடைய பர்வானு கொண்டு கொண்டு ஒரு மன்சுபாதாரன் பெரியமனுஷன் மொகுலன் வந்து நயினியப்பிள்ளை சாவடியண்டையிலே வந்திறங்கியிருக்கிருன்-அவனுக் கெதிரேபோயழைத்து வந்து வண்ணுந்துறையிலே முசியே ரேணு (Mr. Renault) யிருக்கிற காம்பிறுவை ஒழிச்சு அதை விடுதிவிச்சுகு அதிலே யிருக்கச்சொல்லி அவர்களிருக்கிற மட்டுக்கும் அவர்களுக்கு வேண்டிய சாபாட்டுடனே சேர்ந்தது அவர்களுக்கு திருப்த்தியா— நடப்பியென்றும் அவர்களுக்குச் சந்தோஷம் வரும்படியாய் நடப்பியென்று சொல்லிப் போகச்சொன்னுர். அப்பால் அனுப்பி விச்சுக்கொண்டு வடக்கு வழி குண்டுசாலைக்கி அப்பிறம் அடுத்த வடவண்டையிலிறங்கி யிருக்கிற மொகுலனுக்கு முன்னுதாகச் சொல்லியனுப்பிவிச்சுப்போட்டு நான் வண்ணுந்துரைக்குப்போய் முசியே ரேணு (Mr. Renault) க்குச் சொல்லி அவனிருக்கிற—விடுதி வீட்டை முஸ்தீதுபண்ணிவைக்கச்சொல்லிச் சொல்லிப்போட்டு யங்கேயிருந்து சோலைத்தாண்டவன் சாவடி பிளியந்தோப்பிலே யிறங்கி யிருக்கிற மொகுலன் அண்டைக்குப்போனவுடனே அவனெதிரே வந்து வெகு யாசாரம் பண்ணி கட்டிக்கொண்டு முன்னே யென்னை உள்க்காரச் சொல்லி தான் தூரப்போயி உள்க்கார்ந்துக் கொண்டு தீவான் சாயபு உம்முடபேரும்—கீற்தியிம் டில்லிசகலெரல்லாம் தன்மன்சுபேதாரனைக் கொல்லுவிச்சீர் யென்கிறது பிருன்சுக்காற ருடைய சமஸ்தானக்கு சகல கீற்த்தியுமீ மச்சிலிபந்தர் முதலான சீர்மைகளிருபத்தஞ்சு முப்பது லக்ஷம் மட்டுக்கும் சீர்மைபூமிகளும் உண்டாக்கினதுமல்லாமல் பூமியுள்ளமட்டுக்கும் கீற்த்தி சாசுவதமாய் யிருக்கிறவர்கள் யெப்போதும் பேசிக்கொள்ளத்தக்க தாக நடப்பிச்சுப்போட்ட உம்முட 'பிறதாபமும் கீற்த்தியும் என்ன வென்று யெத்தனை வாயிருக்குதென்று சொல்லுகிறதுக்க யென்றும் பின்னையுமனேகவிதமாய் ஸ்தவுத்தியம் பண்ணினுன்—நானதுக்கு சொல்லத்தக்க உத்தாரமென்னமோ அதுசொல்லி மகாராசா அசறத்து நவாபு கொரந்தோர் சென்ருல் சாயாபுலவாரி அதுருஷ்ட்டத்தினுலே சமஸ்தமான பேர்களும் அவர்களைச்சேர்ந்தவர் களெல்லாம் கீர்த்திவந்தரஞுர்களென்று சொன்னதுமல்லாமல் நவாபு செனருல் சாயபு அவர்களுடைய அதிருஷ்ட்டத்தினுடைய பெலன் இவர்கால்பட்டவர்களுக்கு பாதுசாபட்டம் வரும் யென்றும் சொன்னல் மத்தப்படி அவர் தாரிப்புபண்ணுகிறதுக்கு தெபனக்குத் தெரியாதென்று சொல்ல வேண்டிய பேச்செல்லாம் சொல்லி நீர் வந்த காரியமென்ன வென்று கேட்டேன் முன் ருமதாசு பண்டிதனிருக்கச்சே பாதுசா பர்வானு நிமித்தியம் விசீமன் சூரல்லிக்கான் மாரிபத்தில் பாதுசாயண்டையில் பிறேத்தனம் பண்ணியிருந்தான் அந்தப்படிக்கு பாசிராயனை செயிச்சுதுக்கு தசிலி பற்வானு அழைப்பிச்சுயிருந்தான் அது அனுப்புறத்துக்குள்ளே ராமதாசு பண்டிதன் செத்துபோனதினுலே அட்டிப்பட்டிருந்தது. அதையிப்போ சலாபத்து சங்கு யென்கையிலே குடுத்து துரைக்கு ஒரு சிரொப்பாவும்—துரை பெண்சாதிக்கு ஒரு சீரொப்பாவும்

ஷிகுமாரத்திக்கு ஒரு சீரொப்பாவும்--கூட கொடுத்து சலாபத்து சங்கு முசியே புசி (Mr. Busy) முதலானபேர்கள்—காகிதங்களெழுதிக் கொண்டு கொடுத்தனுப்பிவிச்சார்கள். அதைக்கொண்டு கொண்டு நான் பிறப்பட்டு ஒரு மாசமாச்சுது. யின்று வந்து யிவ்விடம் சேர்ந்தேன். யென்பேர் யூசுபாஷிக்காஎன்று பேர் ஆயிரம் குதிரைக்கு நான் சறுதாரென்று பூகுவோத்திரஞ் சொன்னதின் பேரிலே நீர் வந்த காரியம் பின்னை ஒன்றுக நான்கேழ்விப்பட்டிருக்கிறேன். அந்த சாடை நீர் சொல்லவில்லை யென்று கேட்டேன் அதுக்கவன் சொன்னது தீவன்சீக்கி தெரியாததொன்றும் உண்டா வென்று சொல்லி மகம் மதல்லிக்கான் பேருக்கு ஆற்காட்டு சுபாவுக்கு பகலி பற்வானுவும்கூட கொண்டு வந்தேன். அந்த பகலி பற்வானுவை நம்முடயதுரை கையிலே கொடுக்கிறது நம்முடையவர்கள் (துரை) மமுதல்லிக்கானுக்கு கொடுத்து யனுப்புகிறதென்று சொல்லி துரையவர்கள் சொன்னபடிக்கு மமுதல்லிக்கான் கேட்டு நடந்துகொள்கிற தென்று சொன்னுன் நீர் எப்போ மமுதல்லிகானண்டைக்குப் போறதென்று கேட்ட துக்கு யிந்த பாதுசா தசிலி பர்வானுவை வாங்கிக்கொண்டவுடனே போவேன் யென்று சொல்லி அது யென் ஆதினமல்ல நவாபு கோவர்ணதோர் சாயிபுயவர்கள் யெப்படி பறுமாயிருக்கிருர்களோ-- அப்படி நடக்க யெனக்கு உத்தாரமேயல்லாமல் யெனக்கு சிறிது சொதந்தரிக்க மில்லை என்று சொல்லி யிந்த மமுதல்லிக்கான் பேச்சு துரையவர்களுக்கு முன்னமே தானே யெழுதி வந்திருக்குது அவருக்குத் தெரியும் நானியிப்போவும்முடனே சொன்னதாய் சொல்லவேண்டாந் துரையவர்களுமிலாக்கத்தாய் பேசச்சே பேசுகிற பேச்சே யென்று சொன்னுன் மெத்த நல்ல தென்று சொல்லி துரையவர்களுக்குத் தாரமும்மை அழைத்துக் கொண்டு போய் வண்ணுந்துரையிலே பெரிய இடங்காட்டி அதிலே விடுதி விடச் சொல்லிச் சொன்னுரென்று சொன்னதுக்கு நாளை காலத்தாலே அப்படியே அந்த சாகையிலே வந்திறங்கியிருக்குறோம் யிப்போ வந்திறங்கி கூடாரம் போட்டு சமையலும் சமைக்குருர்கள். ஆனபடி யினுலே கூடாதென்று வெகு உபசாரஞ்சொல்லி துரையவர்களுக்கு ரொம்பவும் சலாஞ் சொன்னுன். அவன் கையிலயனுப்பிவிச்சுக் கொண்டு துரையவர்கள் வீட்டுக்கு வந்து அவன் சலாமும் சொல்லி நாளைக்காலத்தாலே வண்ணுந்துரையிலே வந்திறங்குறோமென்று சொன்னுனென்று சொன்னதுக்கு மறுபடி போய் மமுதல்லி கானுக்கு ஒரு காகிதம் வந்து அவன் கையிலே மகம்மதல்லி கானுக்கு ஒரு காகித மொன்று எழுதிவிச்சு அவர்கள் அறுக்காறுகள் கையில் கொடுத்து அனுப்ப வேணும் யெழுதுகுற வயணமும் விஸ்தரிச்சு எழுதக் கவையில்லை. நவாபு கோவற்ணதோர் செனருல் சபாசங்கு சாயபு அவர்களுக்கு பாதுசாபர்வானுவும் சலாபத்து சங்கு காகிதமும் ச[illegible]கர்கான் காகிதமும் வகையிராவும் பாதுசாவினுடைய வெகுமதி, வஸ்திரங்கள் சுவாகரிசமுசேர் வகையிரா கொண்டு கொண்டு உம்முட பேருக்குஞ் சலாபத்சங்கு பர்மானுவும் சயிதுலசுக் கர்கான் யினுயத்துனுமா வகையிரா-கொண்டு கொண்டு யித்தனுள் புதுச்சேரி வந்து சேர்ந்தோம் சேந்த விடத்திலே உம்மூட கலாபச் சேதியாய்க் கேட்டோம்— அப்படி கலாபமும் பண்ணக் கவையில்லை. வீடு வாசல்களைக் கொளுத்தி செனங்களுக்கு யெல்லாம் ஆபத்து பண்ணவேண்டாம். நாமிவடத்தில் நவாபு செனருல் சாயபு அவர்களை மிலாகத்து பண்ணிக்கொண்டு பாதுசாபர்வானுவையும் வெகுமதியும் கொடுத்துப்போட்டு அவர்கள் கையிலனுப்பிவிச்சுக்கொண்டு உம்மை

வந்து கண்டு பேசுகிற மட்டுக்கும் நீர் சனங்களுக்கு யிக்கட்டை பண்ணுமல் சும்மாயிருக்கவும் யென்று ஒரு காகிதமொன்றெழுதி விச்சு யனுப்பி போட்டுவாருமென்று சொன்னுர். நார்னிருந்து இந்துஸ்தானி பேச்சிலே சொல்லுகிறதுக்கு அங்கே யொரு துபாசி யிருந்து பாரிசு பேச்சிலே யாங்காட்டும் பேசினது. ஆனபடியினலே பாரிசு பேச்சு யறிந்துள்ளவர்களே யனுப்பினல் திட்டமாய்ச் சொல்லி எழிதிவிச்சு அனுப்பிவிச்சி வருவானென்று சொன்னேன். பாரிசு பேச்சு பேசுகிறவனுயிவனென்று கேட்டார். யிரானி சாதி குலாப்போஷ்து-யென்று தாமசு கொல்லிக்கான் யிறகு குல்லாப் போட்டுக்கொண்டு முன் டில்லி மகம்மதுசா சண்டையிலே வந்த வர்களாம் அப்படிதான் குல்லா போட்டுக் கொண்டிருக்கிறுர்கள் யென்று சொன்னதின் பேரிலே ஆனல் முசியே திலார்சுவை அழைக்கச் சொல்லு யென்று சோபுதாருடனே சொல்லிப் போட்டு பெண்சாதி அப்பாலிருந்தவனே யழைச்சு நான் போய் வந்து சொன்ன கபுறும் அப்படியே சொன்னவுடனே அந்தம்மாள் பரிச்சேதமாய் முசியே திலார்ஷையும் றங்கப்பள்ளையையும் அனுப்பப்போகா தென்றும் மதனுந்தபண்டிதனுக்கு தெரிஞ்சது முசே திலார்ஷு வையும் (Mr. Delarche) றங்கப்பிள்ளையையும் அனுப்பப்போகாதென்ற விடத்திலே துரையவர்கள் கேளாமல் முசியே திலார்ஷையும் அழைப்பிச்சு யென்னையும் கூடகூட்டி போகச்சொன்னுர். அப்பால் முசியே திலார்ஷும் நானும் அந்த மொகுலன் அண்டைக்குப் போன விடத்திலே முசியே திலார்ஷு அவனுடனே பாரீசு (Perisian) பேச்சிலே பேசினுன். அவன் யெனக்கு படிக்கவுந் தெரியாது எழுதவுந் தெரியாது ஒரு பாரிசு யெழுதுகிறவனைக் கொண்டு யெழுதிவிச்சால் நான் மொகறு குடுக்கிறேன் போட்டு அனுப்புங்கோளென்று சொல்லி தன் பிறகே வந்த-சயிதுமகம்மதென்கிற குல்லாக்காறனுக்கு குதிரை குடுத்து தன்-மொகரையும் குடுத்து அனுப்பிவிச்சான் நாங்கள் வரச்சே துரையவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள் அப்போ போய் எச்சரிச்சவுடனே துரையவர்கள் சாப்பிடுகிறதை விட்டு விட்டு யெதிரே வந்து வந்த சயிது மகம்மதென்கிற குல்லாபோஷே கட்டிக்கொண்டு மேசையில் கூடவைத்துக்கொண்டு அவனுக்கும் றெட்டி மத்தது கொடுத்து தித்திப்பு பழவகை மாமிசம் கொண்டு வந்து வைத்தார்கள். அதைவிட்டுப் போட்டு றெட்டியும் தித்திப்பு பழவகையும் சாப்பிட்டான். அப்பால் மேசை கலேஞ்சவுடனே முசே திலார்ஷையும் மதனுந்த பண்டிதனுடனே கூடயிருக்கிற ஒசந்த பாரிசி முல்லா யொருத்தன் அவனே யெழுதச் சொல்லி யவன் கையில் மமுதல்லிக்கான் பேருக்கு காகித மெழுதிவிச்சு லகோட்டா பண்ணி மோகறு பண்ணி மொகுலன் அறுக்காறுகன் கையிலே குடுத்து வழிக்காட்டுகிறதுக்கு கும்பினீர் சேவுகர் ஒருவரை கூடக்கூட்டி திருக்காஞ்சியிலிறங்கி யிருக்கிற-மமுதல்லிகான் அண்டைக்குயனுப்பிவிச்சு மொகுலனேயும் அப்போதானே குண்டுத் தாழையாண்டை யிலிறங்கியிருந்த டிக்காணுவுக்கு அனுப்பிவிச்சார்கள் முசியே திலார்சு வீட்டுக்குப்போனுன். நானும் வீட்டுக்குப் போறதுக்கு-அப்போதுரையவர்கள் அண்டைக்குப்போய் அனுப்பி விச்சுக் கொள்ளச்சே வெகுசம்பிறமாய் அழைப்பிக்க வேணும் பாதுசா பர்வானு மாத்திரம்தானே வந்தது யிங்கேயிருந்து கத்தி- துறுயி–சிருபேஷி வகையிரா வெகுமதிவஸ்திரங்கள் கூட அனுப்பி விச்சு யவடத்திலே யிருந்து வந்ததாயெண்பிக்கிறதுமல்லாமல்

பீரங்கிகள்—மத்தது விஸ்தாரமாய் போடுவிச்சு பெரிய பண்டிகை பண்ணுகிறதுமல்லாமல் நீங்களெல்லாரும் நதிர்வைக்க வேணுமென்று சொல்லி அப்பால் நாமங்கே போரபோது தவபத்து முதலான சான்சாமுகளெல்லாம் வெகுதிட்டமாய் வரவேணு மென்று சொன்னார். அப்படியே வெகுசம்பிறமங்கள் பண்ணினால் பாப்க்கயாயிருக்குஞ் சமீபத்தில் யிறங்கி யிருக்கிற மமுதல்லிக்கான் யிங்கிலீசுக்காறர் காதுகள் செவிடுகட்டுப்போகவேணும் யென்று சொல்லி பீரங்கி மேஸ்திரியை அழைச்சு வடக்கு வாசற்படிக்கு அப்பறம் வழிக்கு மேற்குப்பார்க்க கூடாரம் போடவேணுமென்று சொன்னதுக்கும் பீரங்கிமேஸ்திரியை யழைச்சு கூடாரம் கொண்டு போயி வழிக்குநேர் விசாலமாயிருக்கிறதே—அந்த விடத்திலே கூடாரம் போடச் சொல்லி உத்தாரங்குடுத்து அந்த கூடாரத்துக் குள்ளே போடவேண்டிய சமுக்காளம் றத்தின கம்பிளி நீயழைப் பிச்சுப் போடென்று சொல்லி—நாளையதினம் பிதனூர்—வக்கீல் வந்து யிறங்கியிருக்கிறானே அவனைப்போயழைத்து வந்து ஒரு விடுதியிலே அமத்தி அங்கே யிருக்கச்சொல்லென்று சொன்னார். நானந்த வக்கீலைப்போயழைத்து வாறதுக்கு உத்தமல்ல அதுக்குத் தக்கஞப் போலே—மதஞந்தப் பண்டிதனை யாகிலும் ஆரையாகிலும் அனுப்பிக் கலாமென்று சொன்னேன் அதின்பேரிலே மதஞந்த பண்டிதனை யழைத்துப் போகச்சொன்னார். அதுக்கு யவன் பிதனூர் சமஸ்தானம் பெரிய சமஸ்தானம் அதினாலே சினயோ—மயிசூராருக்கு நடப்பிச்சப்படிக் குநடப்பிக்க வேணுமென்று சொன்னானென்று சொன்ன மாத்திரத்திலே றங்கப்பிள்ளை நீ போயழைத்துவா வென்று சொன்னார். இனிரெட்டிக்கலாகாதென்று சொல்லி நல்லதென்று சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்தேன்.

## *1752ஸு செத்தேம்புறுமீ 1௳ ஆங்கிரசுஸு ஆவணிமீ 20௳ சுக்கிரவாரம்.*

அயிதராபாத்திலிருந்து வந்த யூசுபாஷிக்கான் யென்கிறவன் **(Yusuf Bashi Khan)** காகிதம் நேத்துராத்திரி மமுதல்லிக்கானண் டைக்கி யனுப்பின காகிதத்துக்கு பிறத்தியுத்தரம் வந்ததாகவும் அதிலே யெழுதி யிருந்த வயணம்—என்னண்டைக்கு பாலிபறவானு கூற்றட்டகசுபைக்கு கொண்டுவந்த நீயென்னண்டைக்கு வரவேணுமே யல்லாமல் நீ புதுச்சேரியில் போயிருக்க காரியம் யென்ன இப்பவும் யிவடத்துக்கு கொண்டு வந்த—பாதுசாவினுட தசிலி பர்வானுவையும் சலாபத்துசங்கு காகிதம் வகையிராவையும் புதுச்சேரி கோவற்ணதோர் சாயபு அவர்களுக்கு கொடுத்து விட்டு சீக்கிறமத்துக்கு யென்னண்டைக்கு வரவேணு மென்று யெழுதியனுப் பினதாகவும் அந்தக்காகிதத்தை யிங்கேயிருந்து வந்து மொகறுபடிக்கி முசேதிலார்சு அண்டைக்கு அனுப்பினதாகவும் அந்த மமுதல்லிக்கான் அனுப்பின காகிதம் அதையும் துரையவர்கள் கையில் கொடுத்து மதஞந்த பண்டிதனைக் கொண்டு படிக்கச் சொல்லி மத்தலப்பு கேழ்க்குமிடத்தில் மேலேயெழுதியிருந்த மத்தலப்பு படிக்கி படிச்சு சொன்ன மாத்திரத்திலே துரையவர்கள் வெகு கோபமாயி உத்தாரஞ் சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனுள் நம்முட பவுன்சு லக்ஷமணனுயக்கன் மண்டபத் தண்டையிலிறங்கியிருந்தவர்களுந் திருக்காஞ்சியிலிறங்கியிருந்த யமுதல்லிக்கான் பவுன்சும் பிறப்பட்டு வந்து வில்லிய நெல்லூர் ஆத்தண்டையிலே மாந்தோப்பு யண்டையில் நல்லசண்டை பத்து நாழிகைக்கு துவக்கினது சாயங்காலம் பரியந்திரம் நல்ல சண்டை பண்ணிஞர்கள், பீரங்கிகள் வேட்டும் துப்பாக்கிகள் சபுத்தமும் சாயங்கால பரியந்திரம் விடாமல் கேட்டது. ராத்திரி வந்தசேதி அல்லிக்கான் போயி எதிரி பவுன்சில் விழுந்து நல்ல சண்டை பண்ணி அவர்களை முறியப் பண்ணி வந்தானென்றும் குதிரை சுவார்கள் ஒரு கவைக்கு வராமல் போனுர்கள் யென்றும் அல்லிக் கானுக்கு முசியே கெர்ஷாம் (Mr. Kerjean) குதிரை வெகுமானத்துக்கு முன்னூறு ரூபாயும் நாலுகெசம் சகலாத்தும் கொடுத்து துரை யவர்களுக்கும் வெகுமானம் அவனுக்கு அனுப்பச் சொல்லி யெழுதின தாகவும் சாயங்காலம் பிற்பாடு உபயத்யதிரவர் பவுன்சும் யிங்கிலீசுக் காறர்—மமுதல்லிகான் பவுன்சு திருக்காஞ்சியிலேயும் நம்முடவர்கள் பவுன்சு லக்ஷமணனுயக்கன் மண்டபத்திலேயும் போயிறங்கின தாகவும் மமுதல்லிக்கான் பவுன்சு வில்லிய நெல்லூா புதுப்பேட்டை கட்டியிருந்ததை இரண்டுதரம் நூத்தி நாறபது நூத்தி அன்பது வீட்டு மட்டுக்கும் சுட்டதாகவும் அதின்பேரிலே ராத்திரி நல்ல மழை பேஞ்சுது. உபயத்திரவர்கள் பவுன்சும் மெத்த நனைஞ்சு அலங்கோலப்பட்டதாய்ச் சேதி வந்தது.

## 1752ஸு செத்தேம்புறுமீ 2உ ஆங்கிரசு ஸு ஆவணிமீ 21உ சனிவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போனவிடத் திலே நேத்துராத்திரி நம்முட பவுன்சு லக்ஷமண நாயக்கன் மண்டபத்தை யண்டையி லிறங்கியிருந்தவர்கள்—திருக்காஞ்சியில் யிறங்கிறந்த மமுதல்லிகான் யிங்கிலீசுக்காறர் பவுன்சும் பேரிலே போய் விழவேணு மென்று யிருந்தார்கள். மழைபேஞ்சதைத் தொட்டு போகாமல் நின்றூர்கள் யென்று சொன்னுர். மெய் தானய்யா—அரியாங்குப்பத்து ஆறும் தண்ணீ வருகுது யென்று சொல்லி பின்னையும் பல பேச்சாய்ப் பேசியிருந்து யென் கச் சேரியே வந்தேன்.

பகலைக்கு மேலாக கேழ்விப்பட்ட சேதி மமுதல்லிகானு யிங்கிறே சுக்காறர் மேஸ்தர் லரேன்சு ஷியார் பவுன்சும் திருக்காஞ்சி விட்டு தெற்கே தேவனும்பட்டணம் குண்டுசாலையோரம் பெண்ணையாத்தங் கரைக்கி—அக்கரையோரம் கொண்டூர் தோப்பில் போயிறங்கியிருக்க வேணுமென்று யினிமேல் யிங்கேயிருந்தால் ஆறுதண்ணீர் விஸ்தார மாய்வந்தால் மோசம் வருமென்றும் பிறப்பட்டுப் போய்விட்டார்கள் யென்று வந்தச்சேதி துரையவர்கள் கேட்டு நம்முடைய பவுன்சு பிரம்பைக்கு வடக்கே லக்ஷமணனுயக்கன் மண்டபத்தண்டை யிறங்கி யிருந்த நம்முடவர்கள் பவுன்சுக்கு உத்தரம் கொடுத்து யனுப்பினது. மமுதல்லிகான் இங்கிலீசுக்காறர் பவுன்சும் பேரிலே—சமயம் பார்த்தே பிறகேபோய் விழுந்து அடிக்கச் சொல்லி யெழுதினதாகவும் நம் முடய பவுன்சு லக்ஷமணனுயக்கன் மண்டபம் விட்டு திருக்காஞ்சி யண்டையிலே யிறங்கினதாகவும் யெதிரிகள் பவுன்சு செல்லஞ்சேரிக்கு அந்த வட்டங்களிலே போயிறங்கினதாக சேதி சொன்னுர்கள்.

இத்தனுள் மமுதல்லிகான் காகிதம் துரையவர்களுக்கு வந்ததில் யெழுதி வந்த சேதி நீங்கள் பாதுசா பரவாஞ யிந்த சுபாக்களுக்கு யெல்லாம் பெரியத்தனமாயுங்களியல் படிபின்கீழே யிருங்கச் சொல்லி வந்ததகாவும் யெழுதினீர்கள் அதுகளெல்லாம் யெனக்குஞ் சேதி வந்தது. தங்களுக்கு பாதுசா பர்வாஞ பாளாசிராவை யுங்கள் பவுன்சு செயிச்சது நீங்கள் பாதாயிருக்கிறீர்கள் சபா சென்று தசிலிபர்வாஞ வந்தது சலாபத்து சங்கு பர்வாஞ யெங்கள் பேரிலே தயவு பண்ணி நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லி பெழுதிவந்தது. சயிதுலசுக்கர் கானும் அப்படியே யெழுதி அனுப்பிவிச்சான். ஆற்காட்டு சுபாவுக்கு யென்பேருக்கு பகலீபர்வாஞவும் வந்தது. அதுவுங்களுக்கு மொயிறது பாதி யிருந்தது யென்றும் நீங்கள் தயவு பண்ணி நடப்பிக்க வேணுமென்றும் நீங்கள் யெப்படி சொன்னுலப்படி கேட்டு நடந்து கொள்கிறேன் என்று முங்களுக்கு முசபர்சங்கு—சல்பத்துசங்கு யெந்தெந்த சீர்மை சாகீர்விட்டார்களோ அதுகளெல்லாம் விட்டு விடுகிறேனென்றும் பின்னையும் உங்கள் தாலுக்கு யாராருக்கு சாகீர்கள்—யிப்போ நடக்குதோ—அதுகளெல்லாம் விட்டு விடுகிறேமென்றும் யிதல்லாமல் பின்னையும் சாகீர் மத்ததுகளெல்லா மென்ன கேழ்க்கிறீர்கள் அதுகளெல்லாம் நடப்பிக்குறேம் யென்றுமென்னை உங்கள் மனுதனுக்கி வைத்துக் கொண்டு நடப்பிச்சுக் கொள்ளுங்கள் தள்ளிவிடவேண்டா மென்றும் வெகு உபசாரமாயெழுதியனுப்புவிச்சதாகவும் மமுதுதாக்கலுக்கும் துரையவர்களுக்குந் தெரியப்படச்சொல்லி ரெண்டு நாழிகை காரியம் உத்தரம் வாங்கிவந்தால் ரெண்டுபேச்சுப் பேசிக்கொண்டு பேசிக் கொண்டு அந்தச்சினம் உம்மை அனுப்பிவிடுகிறேனென்றும் இது முதலான சேதிகளாக யெழுதி யனுப்பி விச்சசாகவும் அதுக்கு துரையவர்கள் கோபம் பண்ணி மக்ம்மதாக்கலை நீபோகவேண்டாம் இனிமேல் பரிச்சேதமாய் யெழுதியனுப்ப வேண்டாமென்றும் நாங்கள் பரிச்சேதமாயுனக் கெழுதுகிறதில்லை யென்று முன் பிறசங்கமே—ஆகாதென்று துரையவர்கள் சொன்னுரென்றும் பரிச்சேதமாயெழுத வேண்டாம் யென்றுமிப்படியெல்லாம் கண்டிப்பது நடந்துயிருக்குதென்று ஒரு ருேக்கா யெழுதிவந்த மமுதல்லிகான் மனுஷன் கையிலே கொடுத்தனுப்ப சொன்னுர்கள்யென்று மந்தப்படி ருேக்கா யெழுதி துரையவர்களுக்குப் படிச்சுக்காண்பிச்சு மமுதல்லிகான் மனுஷன் கையில் கொடுத்தனுப்பிவிச்சார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனுள் சாயங்காலம் துரையவர்கள் அழைப்பிச்சு வில்லிய நெல்லூர் கோயிலை கோட்டை போடாதே தீராது தமிழருக்கு கோயிலுக்கு போக்குவரத்துக்கு உள் திருக்கோளம் கூட சேர்த்து சுவர் போட்டுக் குடுக்கச் சொல்லுகிறேம். மத்தது சேர்த்துக் கொண்டு கோட்டைப் போட்டுக் கொள்ளுகிறேமென்று உள்ளே போனுர் மறுபடி யித்தனுள் ராத்திரி துரையவர்களும் முசியே தொத்தேலும் யிருந்துக்கொண்டு யழைப்பிச்சு திருவந்திபுரத்துக்கும் திருவீதிக்கும் நம்முட பவின்சு திருக்கீசாயி யிருக்க ஒரு யிடஞ் சொல்லவேணுமென்று கேட்டார். பெண்ணையாத்துக்கு யிக்கரை கரையாம்புத்தூர் யென்று யிப்போ நம்முட கும்பினீர் கிருமங்களைச் சேர்ந்திருக்குது. அது வந்து முக்கத்தக்கமென்று சொன்னேன்

முன்னே முசியே லத்தூசு (Mr. de Latouche) யிருந்து சண்டை பண்ணின தெந்த கிறுமம யென்று கேட்டார். சொன்னுவூரென்று சொன்னதுக்கு மெபிதான் அது நல்ல வசதியென்று சொன்ன வுடனே முசியே தொத்தேல் அதுவெல்லாமெனக்குத் தெரியும் யென்.று பேசியிருந்தார்கள். நான் பிறப்பட்டு வந்து என் கச்சேரியி லிருந்தேன்.

நேத்தய சண்டையின் பேரிலே வெளிச்சனங்கள் வெகுபேருள்ளே வலசை வந்த சனம் மிதமில்லே. அரியாங்குப்பம திருநாள் முன் 18௳ புதவாரம் கொடி யேகத்துக்கிங்கேயிருந்து விக்கிறகங்களெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போயி அரியாங்குப் பத்தில் கொடியேத்தி அன்று முதல் திருநாள் நடந்துதே நேத்து பிடிச்சு காபிருப்பபட்டு விக்கிறகங்களையுமெடுத்துக்கொண்டு கொடியுமிறக்கிப் போட்டு ஊரே வந்து சேர்ந்தார்கள்யென்று வந்து சொன்னுர்கள்.

1752௵ செப்தம்புறுமீ 4௳ ஆங்கிரசு௵ ஆவணிமீ 23௳ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே மமுதல்லிகான் யெங்கேயிருக்கிறுனென்று கேட்டார். அவன் பவுன்சும் அவனும் பாகூரிலேயிருக்கிறுனென்கிற கபுறு வந்தது. சோத்துப்பாளையமானுல் பெண்ணையாத்தங்கரைக்கு அப்பிறம் கொண்டூர் தோப்புக்கு அனுப்பிவிச்சான் யிதிலே பெண்ணையாத்தங்கரை பெறண்டு பிறவாகம் வந்து தாம் அதைத் தொட்டு அப்பிறம் போகாமலிருக்கிறுனென்கிற கபுறு ஒன்று யிதல்லாமல் மேஸ்தர் லொரென்சு தேவனும்பட்டணத்துக்குப் போனவன் மறுபடி வந்து சிலவு சித்தாயத்துக்கு வாங்கிக் கொண்டு வாறேனென்று செல்லிப்போட்டு யினியப்பிறம் போனுல் அபகீற்தி ஓடிப்போறுர்களென்கிற கபுறு ஒன்று ஊரெல்லாம பிறந்தது. ஆனபடியினுலே பாகூரிலே தானே யிருக்கச்சொல்லி சொல்லிப் போட்டு தேவனும்பட்டணம் துரையைக்கண்டு பேசப்போறுன். யென்கிற கபுருய் வந்து சொன்னுர்கள் என்கிறதாய் சொன்னதுக்கு அவர்கள் பவுன்சு பெண்ணையாத்துயக்கரை போயி கொண்டூர் தோப்பு போய் சேர்ந்ததாய்ச் சொன்னுர்கள். நீ யிப்படி சொல்லுகிறுய் யென்றுப்போலே சுருக்காய்ச் சொன்னுர். அந்த மட்டுக்கும் கபுறு கேட்டு தெரிந்துக் கொண்டு வந்து அப்பால் பேசுவோமென்று சொல்லி யோசனைப்பண்ணிக்கொண்டு யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் கேழ்வி பட்ட சேதி சயிது காசிம் யென்கிறவனுக்கு திருவீதி புவனகிரி தீர்த்தனகிரி வெங்கிட்டாம்பேட்டை வகையிரா பறங்கிப்பேட்டை வகையிரா பஞ்சமாலும் விருத்தாசலம் சீர்மை பஞ்சமாலும்கறுககுறிச்சி (Kallakuruchi) திருப்பாலைப்பந்தல் யிறை வாசநெல்லூர் வகையிரா சீர்மைகளுக்கு பகவிபர்வானவும் யெழுதிக் கொண்டு கொடுத்து சிறுப்பாவும் கொடுத்துதாய்ச் சொன்னுர்கள்

இத்தனாள் காலத்தாலே அரியாங்குப்பத்து திருநாள் யெத்தினம் பண்ணி விக்கிறகங்கள் மறுபடி அரியாங்குப்பத்துக்கு கொண்டு போனதாய்ச் சொன்னார்கள்.

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் வில்லியநெல்லூருக்குப் போய் வந்து யென்னை யழைத்து அனுப்பிவிச்சு முசியே அபேலே (Mr. Abeille,யுங் கூடவைந்துக்கொண்டு வில்லியநெல்லூர் கோயிலே கோட்டைப் பண்ணவேணுமென்று யோசனை பண்ணினோமே கோயில்வந்து மெத்தப் பள்ளமும் கோயிலுக்குத் தெற்கு மாந்தோப்பு வெகுமேடுமானபடியினாலே கோவிலிலே யிருக்கிறவர் களைப் பார்த்துமாந்தோப்பு மேட்டின் பேரிலே பீரங்கியைவைத்து அடித்தால்கோயிலும் கோயிலிலே யிருக்கிற பேர்களுக்கும் நல்ல அடிபடும்கோயில்பள்ளத்தாக்குயானபடியினாலே கோவிலிலே யிருக் கிறவர்களுடைய துப்பாக்கி வேட்டும் கோயிலிலேயிருந்து சுடுகிற பீரங்கியும் எதிரிகளுக்குப்படமாட்டாது. ஆனபடியினாலேயும் இதல்லாமல் கோவில்சுத்தி சுவரெல்லாம் வெகு பழைய சவர்கவைக்கு வராது. அல்லவென்று கட்டிக்கொண்டு செய்வோம் யென்றால் முக்கால்வாசி செவிர்—விழுந்துப்போயிருக்குது.— ஆனபடியினாலே யிப்போயிருக்கிறதை யிடிச்சுயெடுத்துப் போட்டுப் புதுசாய்க் கட்டவேணும் அப்படி புதுசாக்கட்டியும் பள்ளத்தாக்கானபடியினாலே மாந்தோப்பிலே ஒரு மண்டபமிருக்குது. அந்த மண்டபத்தைக் கட்டிக்கொண்டு அங்கே கோட்டை போடச்சொல்லி தில்லே மேஸ்திரிக்கு உத்தாரங்குடுத்து வந்தேனென்று துரையவர்கள் சொன்னார். அதுக்கு முசியே அபேலிருந்துக் கொண்டு முந்தாநாள் சாயங்காலம் நாங்கள் போய் பார்த்தவுடனே எனக்கு அப்படித்தான் தோத்திச்சுது. இப்போ சொன்னால் உங்கள் மனத்திலே கோபமாய்த் தோத்தப்போகுது நீங்கள் வந்த வேளையிலே—சொல்லுவோமென்று யிருந்தேன். இப்போ நீங்கள் சொன்ன--தாவு-நல்லதாவென்றும் அங்கே கோட்டை கட்டினால்—பரிச் சேதம் சுத்துக்காத வழிகுதிரைக்காறர்கள், சுவார்கள், சிப்பாயிகள் வகையிரா சத்துருக்கள் சேரக்கூடாது யென்று முசியே அபேல் சொன்னான். அது மெய்தான் என்று துரையவர்கள் சொன்னார்கள். அந்தமட்டுக்கும் தண்டிலிருந்து ஒபிசியால் வந்தான் அவனுடனே பேசியிருந்தார். நான் யென்கச்சேரியே வந்தேன்.

கும்பினீர் வர்த்தகர் துரையவர்கள் வில்லியநெல்லூருக்குப் போனார் யென்று புதுப்பேட்டை வெந்து போனதுகளெல்லாம் காண்பிச்சு சொல்ல வேண்டியதெல்லாம் சங்கிதகளையும் சொல்லுவோமென்றும் போனார்கள். இவர்கள் போறவேளைக்கு அவர் அதுகளெல்லாம் பார்த்துப்போட்டு வண்டியின் பேரிலே யேறுகிற வேளையாயிருந்தது. அப்போ யிவர்கள்போய் சலாம் பண்ணினார்கள்—எங்கே வந்தீர்களென்று கேட்டார். புதுசாய் பேட்டை யேத்தினது வெந்துபோச்சுதே-அதுகளுங்களுக்கு காண்பிச்சு யினிமேல் நடக்க வேண்டியதுக்கும் கேட்டுக்கொள்ள வேண்டியது யென்றும் வந்து உங்களைக் காண்பிச்சுக்கொண்டோம் யென்று சொன்னதுக்கு யென்கணக்கு றங்கப்பனுடனே வெந்துபோன வீடு கட்டிப்போடச்சொல்லி சொன்னேன். அவன் கட்டிவிச்சு-குடுப்பா னென்று துரையவர்கள் சொல்லிப்போட்டுப் போனாரென்று கும்பினீர் வர்த்தகருங்களுடனே சொல்லச் சொன்னாரென்று கும்பினீர் சேவுகனொருத்தன் வந்து சொன்னான்.

## 1752ஆம் செப்த்தம்புறுமீ 7உ ஆங்கிரசுஆம் ஆவணிமீ 26உ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு தேவனாம்பட்டணத்திலிருந்து ஆராகிலும் வந்தார்களா-கபுறுகள் ஏதாகிலும் கேழ்விப்பட்டதுணடாவென்று கேட்டார். நேத்தியதினம் பிடிச்சு ஒருத்தராகிலும் வரவில்லை-யிவடத்திலிருந்து ஆரைப்போகச் சொன்னால் கண்டவர்களையெல்லாம் வெட்டுகிறார்களென்றும் ஒருத்தரும் போய்ப்போய்-மறுபடி வந்து விட்டார்களென்று சொன்னேன். யெப்படியாகிலும் போகச்சொல்லி பேருக்கு யிருபது முப்பது ரூபாயாகிலும்பால்மாறாமல் கொடுத்து அனுப்பிவியென்று சொன்னார். அதின் பேரிலே பறங்கிப்பேட்டை பிள்ளையாண்டான் ஒருத்தன் பின்னையும் நேசனூரான் (Nesanur) வகையரா நாலுபேருக்கு நாற்பது ரூபாயாக குடுத்து-நம்முட அவரவர்கள் யெத்தனைபேர் சுகமாய் அகப்பட்டவர்கள் யெத்தனைபேர் காயப்பட்டவர்கள் யெத்தனை பேர்அந்தவயணமுமவர்களில் வெள்ளைக்காறரில் எத்தனைபேர் செத்தவர்கள், காயப்பட்டவர்கள் அவர்களிருக்கிற சாடையென்ன அந்தவயணமும் தெரிஞ்சுகொண்டு வரச்சொல்லி-சொல்லியனுப்பி விச்சேன். மறுபடி யென்னையழைப்பிச்சு யேதாகிலுஞ் சேதி வந்துதாவென்று கேட்டார். நேத்து முசியே கெருசாமை யெடுத்து வந்த பல்லக்குக்காறருடனே கூட ஒரு செட்டிப்பிள்ளை யாண்டான் யிவடத்தியான் சண்டையில் பெதறி தேவனாம்பட்டணத்தை போயிருந்து வந்தான். அவன் வந்து சொன்னது நம்முட சொல்தாதுகளும் ஒபிசியால்மார்களையும் மமுதல்லிக்கான் பாகூரிலே யிருக்கிறானே மேஸ்தர் லொரென்சு பாகூர் கோட்டை வொன்றிருக்குதே-யதிலே யதிலே யிருக்கிறானாம் அதிலே நம்முட சொலுதாதுகள் ஒபிசியால்மார்கள் கூடயிருக்கிறார்களாம் இதிலே காயக்காறர்களைத் தேவனாம்பட்டணத்தை அனுப்பினார்களென்றும் யிங்கிலீசுக்காறருக்குள்ளே சாவும் நாற்பது பேர்-மட்டுக்கும் காயக்காறருக்குள்ளே அறுபது யெழுபது பேர்கள் மட்டுக்கும் உண்டென்றும் சொல்தாது கப்பித்தான் மேஸ்தர் கிமிலெனகிற வனு (Mr. Campbell) க்கு சாவுகாயமாம்-மார்பிலே குண்டுகாயம் மெத்தப்பளுவாயி பெலத்தக்காயம் பட்டுதாம் நாழிகை கெடுவின்பேரிலே அவனிருக்கிறானென்றும்-பின்னையும் ரெண்டுமூண்டு-ஒபிசியால் மார்களும் நல்ல சாவுகாயமென்றும் சொன்னானென்று சொன்னேன். அதுக்குத் துரையவர்கள் சொன்னது கைகலந்த சண்டையானபடியினாலே துப்பாக்கிகள் சுடுகிறதுக்கு கூடாமல்ப்போனதினாலே ஒருத்தருக்கொருத்தர் குத்தினபடியினாலே காயமும் சொல்லவேண்டியதும் சாவும் விஸ்தாரமாய்ச் சொல்லலாமென்றும் சொன்னார்-யிதிலே முசே ஓபேர் (Mr. Aubert) என்கிறவன் மங்களமேஸ்திரி முசியே கெர்சாமுக்குப்பட்டிருந்த காயம் குண்டுனால் பட்டிருந்த குண்டு காயத்தில் பட்டிருந்த குண்டை முதுவிலே அறுத்துயெடுத்துப் போட்டு காயங்கட்டிவந்து கபுறு சொன்னான் அதின் பேரிலே துறையவர்கள் பிழைப்பானாவென்று கேட்டார். யிந்த கட்டுயவிழ்த்த பார்த்த பிற்பாடு சொல்லலாமே யல்லாமல் யிப்போ பிழைப்பானென்று சொல்லப்போகாதுயென்று சொன்னான். அதின் பேரிலே துரையவர்கள் என்னைப்பார்த்து முசியே கெர்சாமுக்கு யிருக்கிற குணம் மங்கள

மேஸ்திரி சொன்னபடிக்கு மயன்னுடனே சொன்னர். அதுக்கு முசியே கெற்சாம் வந்து நகைத்த முகம் மகா பிறயவார்த்தையும் பொறுமையும் வணக்கமும் ஒழுக்கமும் முதலான நல்ல குணங்களை யெடுத்துச் சொல்லி பெகு சனங்கள் தாபந்தப்படுகிருர்கள் யென்று சொன்னேன் யெல்லாம் மெயிதான் ஆனுல் யுத்த வேளையிலே ரெண்டு தளத்திலே யிருக்கிற பேர்கள் வெகுசாக்கிறதையுடனே யிருக்கவேணும் சத்துரு சமீபத்திலே ரெண்டு நாழிகை வழியிலே யிருக்கச்சேயேமாரியிருக்கலாமா. ஆனதினுலே மோசம் வந்த தென்று சொன்னர் அந்த மட்டுக்கும் தம்முட பெண்சாதியை சிவபிருயச்சித்தம் முதலான சடங்கும் யென்ன உண்டோ அதுகள் யெல்லாம் பாதிரிகளை அழைப்பிச்சு முடிச்சுப்போடச் சொல்லியுமிருக்கிற திரவியத்துக்கு நடக்கவேண்டிய செய்காரிய அட்டவணை யென்கிற தெஸ்தமென்து யெழுதிவிச்சு போடச் சொல்லி, சொல்லி யனுப்பிவிச்சார், அந்தப்படிக்குப் போய் செய்விச்சாமென்றுமப்பால் துரையவர்களும் போய்ப்பார்த்து வந்தாரென்று நான் யென்சச்சேரியே வந்த பிற்பாடு வந்த கபுறு சொன்னர்கள்.

## 1752ஷு செப்ததம்புறுமீ 8உ ஆங்கிரசுஷு ஆவணிமீ 27உ சுக்குறவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவக்களண்டைக்குப் போய் நித்திய கிருத்தியங்கபுறு சொல்லுகுற நிமித்தியம் போய் சொல்லிப் போட்டு பிறப்படச்சே முன் இங்கிலீசுக்காறர் படகும் பேரிலே வந்தவர்களைப் பிடிக்கும் பொருட்டு தபால் வைக்கச் சொன்னீர்களே அந்தப்படி அப்போ வைத்தது முதலானது வரைக்கும் அந்தப்படியே தானிருக்கிருர்கள் அவர்களை வாங்கிப் போடுகிறதா வைக்குறதா வென்று கேட்டதுக்கு அவர்களுக்கு சம்பளமும் படியும் குடுக்கிறதோ அந்தப்படிக்கு அரும்பாத்தைக் கையிலே வாங்கிக்குடுத்து யெப்போது மிருக்கச் சொல்லவும் வாங்கிப் போடவேண்டியிருக்கணுமென்ருல் போனுனே என்று எச்சரிக்குறேன் அந்தமட்டுக்கும் யிருக்கவுமென்று சொன்னர். அப்பால் யென்கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் பகலைக்கு மேலாக அஞ்சரை மணிக்கு அன்வறதிகான் குமாரன் மமுதல்லிகான் அண்டையிலிருந்து அறுக்காறுகள் காகிதம் துரையவர்களுக்கு கொண்டு வந்தார்கள் அந்தக்காகிதச்சேதி தெரியாது. ஆனுலும் சண்டையாய் அவர்கள் செயிச்ச உச்சாகத்தின் பேரிலே யெழுதினுன் ஆனபடியினுலே எங்கள் தகப்பனர் அன்வருதின் கானுக்கு நீசாம் ஆற்காடு சுபா கொடுத்து அனுப்பி அப்பால் பாதுஷா சன்னது அழைப்பிச்சுக் கொடுத்து அதின் பேரிலே ஆற்காடு சுபா பன்னினதே யல்லாமல் மைத்தப்படி அல்ல அப்படிப்பட்ட அன்வறதிகானுக்கு சத்துருவாய் சந்தாசாயபு யேற்பட்டு அன்வறதி கானைக்கொன்று போட்டபடியினுலே அந்தப்பழி தீத்துகொள்ளு கிறதுக்கு நான் சற்வப் பிறயத்தினமும்பண்ணி பகையை தீத்துக் கொண்டேன் எனக்கானுல் கற்னுட்டக சுபா கொடுத்து யிருக்குது. அதுக்கும் பாதுசாபர்வானு நாசர்சங்கு—காசுதின்கான் பர்வானு யிப்போ சலாபத்துசங்கு பர்வாணுவும் வந்து இருக்குது. அது நீரும்நன்ருய்அறிவீர்

அப்படியிருக்க நீரெங்கள் பேரில் ஏன் வீரோதம் பண்ணுகிறீர்-ஒன்றுக் கொன்று அன்னியொன்னியமாயிருப்போமென்றும் உங்களுக்குள்ள சாகீர்களுக்கு அதனமாய்த்தானே நடப்பிக்கிறதும் அல்லாமல் உங்களைத் தாலுக்கா சேர்ந்தவர்களுக்கு-ஆராருக்குச் சாகீர்கள் நடக்கிறதோ அவர்களுக்கெல்லாம் நடப்பிக்குறேன். நீங்களும் நாங்களுமொன்ருக யிருந்து நடக்குறதானால் யெந்தெந்த காரியஞ்சாதகத்துக்கு வராது. நீங்களெப்படி சொன்னால் அப்படி நடந்துகொள்ளுகிறேனென்று பின்னையும் இத்திப்பான வார்த்தையாயெழுதி அனுப்பினதாய் சேதி வந்து சொன்னார்கள்.

ஆறரை மணிக்கு சாயங்காலம் வேளை சொபுதாரன் வந்து துரையவர்களழைக்குருரென்று வந்து அழைச்சான் யெது-நிமித்திய மழைக்கிருர் அங்கே யாரிருக்கிருர்கள் யென்று கேட்டதுக்கு முசியே அலுபேரை அழைக்கச்சொன்னார் அவன் வீட்டிலேயில்லை யென்று சொல்லி வெளியே போனவிடத்துக்கு தேடிக்கொண்டு சேவுகர் அழைக்கப்போனார்களென்று துரையவர்களுடனே சொன்னதுக்கு துரைவயர்கள் கோபித்துக்கொண்டு உங்களை அழைக்கச்சொன்னாரென்று சோபுதாரன் வந்தவன் சொன்னான் அப்பால் நான் போய் துரையவர்களண்டையிலே நின்று ஆசாரம் பண்ணினவுடனே மதனுந்த பண்டிதனையும் மழைத்து மமுதல்லி கானுக்கு ஒரு காகிதமெழுதி யனுப்பச்சொல்லி சொன்னவயணம் நாமிப்போ கேழ்விப்பட்ட சேதி யென்னவென்ருல் முந்தாம்னாள் புதவாரம் நாள் சண்டையானால் நானுங்கள் படாவிலே அகப்பட்ட பேர்கள் ஒபிசிபாள்மார்கள் சொலுதாதுகளில் காயக்காறரும் காயமில்லாதவர்களும் எங்களுக்கு துணையும் தெரியாதிருக்கிறது. இன்னாரின்னார் என்றுந் தெரியவில்லை.

ஆனபடியினாலே காயக்காறர்களையும் காயமில்லாதவர்களையும் என் பேரிலே தயவு பண்ணி அனுப்பினால் நாமுமக்கு வார்த் தைப்பாடு குடுக்கிறோம். அதென்னவென்ருல் அப்போ உம்முட கையிலே படாவிலே அகப்பட்டு நீர் அனுப்பிவிக்கிற சொலு தாதுகள் ஒபிசியால்மார்களும் உம்முட பேரிலே கத்தியெடுத்து சண்டைபண்ணுகிறதில்லையிதை முழுக்க நம்பி எங்கள் மனுஷர்கள் யெத்தனைபேர்களிருக்கிருர்களோ அத்தனை பெர்களையும் சீக்கிறமா யெத்தனைபேர்களிருக்கிருர்களோ அத்தனை பெர்களையும் சீக்கிறமா யனுப்பவும்யென்று நீங்களனுப்புற சேதிக்கு முன்னதாக யெழுதி யனுப்பினால் பல்லக்கு டோலிகளை அனுப்பிவிக்கிறோமென்று யெழுதச்சொன்னார் அந்தப்படிக்கு மதனுந்த பண்டிதனுடனே சொல்லி யெழுதச் சொன்னதுக்கு அந்தப்படிக்கு காகிதமெழுதிக் கொண்டு வந்தவுடனே மொகறு பண்ணி தம்முட சொபுதாரன் கையில் கொடுத்து மமுதல்லிகான் பாகூரிலிருக்கிருன் கொண்டு போய் கொடுத்து பத்து பதினொரு மணிக்கெல்லாம் கொடுத்து சூரிய உதயத்துக்கெல்லாம் பதிலுத்தரவு வாங்கிக்கொண்டு வாவென்று சொல்லி ரெண்டு பேர் சேவுகர்களையும் சோபதாறர் களையும் கூட்டித் தெருவாலே வடவண்டை வாசற்படி பக்கம் பிறப் பட்டால் மமுதல்லிகான் அறுக்காறுகள் வாசற்படியண்டையிலே யிருக்கிருர்கள். அவர்களுக்குத் தெரியுமென்று தென்னண்டை வாசற்படி யிரும்புக்கதவு திறந்து அந்த வழியாகப் போய் வரச்

சொல்லி திட்டமாய்ச் சொல்லியனுப்பிவிச்சான பிற்பாடு யென்னையும் போகச் சொல்லி உத்தாரங்கொடுத்தார். நானும் என் கச்சேரியே வந்தேன். துரையவர்கள் யோசனை பண்ணினதென்ன வென்றால் மமுதல்லிகான் யித்தனாள் சாயங்காலம் அனுப்பின காகித்திலேயும் தாம் இத்தனாள் ராத்திரி யேழு மணிக்கு ஒபிசியால்மாரையுஞ் சொலுதாதுகளையும் சொலுதாதுகளையும் விட்டு அனுப்பினதாலல் அவர்களும் உம்முட பேரிலே ஆயுதங்களை யெடுத்து சண்டை பண்ணுகிறதில்லையென்று சாத்து பண்ணி யெழுதி அனுப்பினபடியினாலே மமுதல்லிகான் ஒபிசியால் மார்களையும் சொலுதாதுகளையும் அனுப்பிவிடுவானென்று யோசனை பண்ணி பத்து பதினஞ்சு பல்லக்கும் டோலிகளும் அகப் பட்ட மட்டுக்கும் சம்பாதிச்சு யிந்தச்சினம் அனுப்பச் சொல்லி விநாயகபிள்ளையையும் அப்புவையும் அழைப்பிச்சுச் சொன்னார். அந்தச் சனம் யென்னையும் அழைப்பிச்சு அரும்பாத்தையும் அப்புவையும் அழைப்பிச்சு சொல்லியிருக்குது. பல்லக்குகள் டோலிகள் அமத்தியனுப்புகிறார்கள். அவர்கள் கையில் ஆகாது அவர்களுக்கு சகாயமாயிருந்து சான்சாமி பணணி அனுப்பச் சொல்லி சொல்லி யிப்போதானே பிறப்பட்டு ராத்திரிக்கு அரியாங் குப்பம்போய் சேர்ந்து அங்கேயிருக்கிற டோலிகள் பல்லக்குகளையும் முசியே தொத்தேல் கூட்டுவார். அதையுங்கூடக் கொண்டு போயிருக்கச் சொல்லியனுப்பவேண்டுமென்று சொல்லிப்போட்டுப் போகச்சொன்னார். நல்லதென்று சொல்லி விநயகப்பிள்ளையை அழைத்துக் கேட்டதுக்கு பத்துப் பனிரெண்டு பல்லக்கு சேர்ந்தது இன்னமிரெண்டு பல்லக்குகவையென்று சொன்னால் அந்தப்படிக்கு ரெண்டு பல்லக்கும் அமத்திக்கொடுத்து அனுப்பினேன்.

அப்பால் துரையவர்கள் மமுதல்லிகான் பேருக்கு போயண்டாக் களையும் பல்லக்குகளையும் டோலிகளையும் சிலவுக்கு விராகனும் கொடுத்து அனுப்பிவிச்சோமென்று சொலுதாதுகளை ஒபிசியாலுகளை யனுப்பிவிக்கச் சொல்லி காகிதமு மெழுதிலாலா வென்கிற சொபுதாரன் கையில் கொடுத்து முந்நூத்தம்பது விராகனும் சிலவுக்கு குடுத்து ஒன்பது மணிக்கெல்லாம் றவாணு பண்ணியனுப்பினார்கள்.

## 1752௵ செப்த்தம்போறுமீ 9௨ ஆங்கிரசு௵ ஆவனிமீ 28௨ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களழைப்பித்து மமுதல்லிகான் லசுக்கர் சமாச்சாரம் வந்துதா வென்று கேட்டார். நேத்து ராத்திரி யேழெட்டு மணிவேளையிலே போன சோபுதாரனுமிரெண்டு சேவுகர்களும் வந்தார்களென்று சொன்னதுக்கு துரையவர்களந்த சோபுதாரனை அழைத்து யென்ன சமாச்சாரமென்று கேட்டார் அதுக்கு சோபுதாரன் சொன்னது நாங்கள் போனவுடனே முதல் சவுக்கியிலே இங்கிலீசுக்காறர் தாலூக்கு யெல்லாம் பொம்பாயி களசிகள் வகையிராக்கள் சவுக்கியு மிருந்தார்கள் சந்தினேரும் காற்குறார்கள். அவர்கள் யாரென்று கேட்டார்கள். புதுச்சேரி யிலிருந்து அசாத்து நவாபு சனறால் சாயிபு அவர்கள் காகிதம் மமுதல்லிகானுக்கு கொண்டு வந்தோமென்று சொன்னோம். அவன்

சிப்பாயைக்கூட்டி அப்பால் யிங்கிலீசுக்காறர்கள் சொலுதாதுகள் சவுக்கியிருக்கிறது. அங்கே கொண்டுபோய் விட்டான். அவன் ஒரு கொப்புறூலே கூட்டி பாகூர் கோட்டையிலே மேஸ்தர் லாரன்சு யிருக்கிறன் அவனண்டையிலே கொண்டுபோயி விட்டான் மேஸ்தர் லொரென்சு யெங்கேயிருந்து வந்தீர்களென்று கேட்டான். நவாபு சனறுல் சாயபு மமுதல்லிகானுக்கு காகிதம் கொடுத்து கொண்டு போய் கொடுக்கச் சொல்லி சொன்னர் கொண்டுவந்தோமென்று சொன்னேம் அவர் துரையவர்கள் ஆரோக்கியத்துடனே யிருக்கிறுரா? நீங்கள்போனல் நம்முடைய சலாஞ் சொல்லவுமென்று சொன்னர். மமுதல்லிகானண்டைக்கு கூட்டி யனுப்பிச்சார் அவர் அண்டைக்குப் போகச்சே ராத்திரி பதிஞெண்ணரை மணி பனிரெண்டு மணி வேளையுண்டு அவர்கச்சேரியிலிருந்து உள்ளே யவருக்கிற விடத்துக்கு அப்போதான் போனர் நாங்கள் வந்த கபுறு சொன்ன மாத்திரத் திலே உள்ளேயிருந்து வெளியே வந்து யென்கையிலிருந்த காகிதத்தை வாங்கிக் கொண்டு வரச்சொல்லி படிச்சுப் பார்த்துக்கொண்டு இதுக்குப்பதிலுத்தரவு யெழுதுகிறதுக்கு கணக்குப்பிள்ளை வீட்டுக்குப் போனர்கள் ராத்திரி வெகுநேரம் ஆச்சுது நாளையதினம் பதிலுத்திரவு யெழுதி யெங்கள் மனுஷர்கையில் கொடுத்து யனுப்புகிறேம் நீங்கள் போங்கோளென்று சொல்லி யென்னுடனே கூடயிருந்த இரண்டு சேவுகர்களையும் அப்பாலே நிற்கச் சொல்லி யென்னையழைத்து உங்களுக்குச் சொல்லச் சொல்லி சொன்னது சொல்லுகிறேனென்று சொன்னது யெங்கள் தகப்பனர் அன்வறதிகான் பாதுசாவுக்குப் படிக்கும் நிசாமுடைய உக்குப்படிக்கும் கற்னுட்டக சுபைக்கு வந்தோம் வந்த யெங்களை சந்தாசாயபு வந்து சும்மாய் வெட்டிப் போட்டான் இப்போது அதுக்குப் பழி நாங்கள் தீர்த்துக்கொண்டு விட்டோம் அப்பால் யென்பேருக்கு கற்னுட்டக சுபாவுக்கு பாதுசா பர்வானயிருக்குது நாசறுசங்கு பர்வானயிருக்குது. காசுதின்கான் பர்வான யிருக்குது யிப்போ சலாபத்துசங்கு பர்வான வந்து நீங்களும் அறிவீர்கள் அப்படி யிருக்க நாங்களிந்தக் கற்னுட்டக சுபாநிமித்தியம் சரீரம் திரவியம் சீவன் கூடகுடுத்துயிருக்கிற நாங்கள் யிந்தசுபாவை விடப் போறேமா. ஒருக்காலும் விடத் தக்கதில்லை நீர்வேனுமானல் யெங்கள் பேரிலேமுன் தயவாய் நடப் பிக்கயில்லையா யிப்பவும் அப்படியே தயவு பண்ணி நடப்பிச்சால் உங்கள் மனுஷனக யிருந்து கொண்டு நீங்களெப்படி சொல்லு கிறீர்கள் அப்படி கேட்டு நடந்துக் கொள்கிறேன். அல்ல வென்று சுபாவுங்களுதானலும் ஒருத்தரை நாயமா வைத்து அல்லோ நடகிறது. அப்படியென்னை உங்கள் நாபா வைத்து நடப்பிச்சுக்கொண்டு வொருங்காள் உங்களுக்குமுங்கள் மனுஷருக்கும் யிதாயத்து மொய்தின்கான் சலாபத்துசங்கு என்ன சாகீர் விட்டு நடப்பிக்குறுர்களோ அதுக்கும் பின்னையும் அதனமாய்த்தானே நடப்பிச்சுக் கொள்ளுகிறேன் நான் நடந்து கொள்ளுகிறேன் இப்படி யெல்லாம் பின்னையும் சொல்லவேண்டிய சாடையெல்லாம் சொன்ன தாய்ச்சொல்லி நீங்கள்யிப்படி கேளாதே போறதைத் தொட்டு நான்விடத்தக்கதில்லை. யிதைத்தொட்டு விருதாவாய் சனங்கள் சாவும் ராச்சியம் அறிஞ்சுபோய் குலைக்கிறதுக்கு நாயும்— கூவுகிறதுக்கு கோழியுமில்லாமல் போனதுமல்லாமல்

யின்னம் சனங்களுக்கு கஷ்ட்டப்படகாலமிருக்கு தாங்கட்டு மென்று சொல்லச் சொன்னுரென்று பின்னையும் நாலாறு விசேஷம் யிதற்கு அடுத்த சாடையாய்ச் சொல்லி மெத்த மெத்த சலாம் சொன்னது மல்லாமல் அதன்பேரிலே பக்ஷம் வைக்கச்சொன்னுனென்றும் மமுதல்லிகான் யென்னை தனிப்பிற நிறுத்துக் கொண்டு தானும் நின்றவாக்கிலே என் தோளின் பேரிலே கைபோட்டுக் கொண்டு இந்த வார்த்தையெல்லாம் சொல்லி வ.ால்யமாயங்களுடனே சொல்ல வேனுமென்று சொன்னுனிதெல்லாம் துரையவர்கள் சிறிது கேட்டதுமுண்டு சிறிது கேளாததுமுண்டு அப்பால் சுவாரசிமாய் அப்பிறம்போய் மறுபடி நேத்து ராத்திரி போயண்டாக்களையும் பல்லக்கு களையும் டோலிகளையுஞ் சோபுதாரரையெல்லாரையும் கூட்டி மமுதல்லிக் கானண்டைக்கு யனுப்பிவிச்சமே யவர்களை வழியிலே பாத்தாயா வென்று கேட்டார். பார்க்கவில்லை யென்று சொன்னதுக்கு அதே தென்று கேட்டார். நான் திருக்காஞ்சிவழியாய்ப் போனேன். அவர்களரியாங்குப்பம் மரிகிருஷ்ணபுரத்து வழியாய்ப் போனுர்கள். அதினுலே பாத்ததில்லை யென்று சொன்னுன். அப்பால் நான் கயறு சொல்லிப் போட்டு யென் கச்சேரியே வந்தேன். இத்தனுள் சாயங் காலம் மமுதல்லிக்கானண்டைக்குப் போன லாலா வென்கிற சோபுதாரன் என்கிறவன் வந்து சொன்ன கபுறு நான் கொண்டு போன முன்னூத்தன்பது விராகனும் சிலவுக்கு ஞேவாளிகள் காயக்காறர் களுக்கு யல்லோ கொண்டு வந்தது யென்றும் மமுதல்லிக்கான் வாங்கிக்கொண்டு கொண்டு போன பல்லக்குகள் டோலிகள் போயண் டாக்கள் சமேத்து வைத்துக்கொண்டு காயக்காறர்களையும் நோயளி களையும் அனுப்புகிறதில்லை யென்று சொல்லி யென்னைப்போய் கபுறு சொல்லச் சொன்னுர்களென்று சொன்னதுக்கு துரையவர்கள் கோபிச்சுக்கொண்டு யென் விராகனைக் கொடுத்ததாய் டோலி வகையிரா—பல்லக்குகளை யேன் வைத்துப் போட்டு வந்தாய்—அவர்கள் காயக்காறரை கூட்டுகிறதில்லை. யென்றுல் விராகனையும் பல்லக்கு வகையிராக்களையும் பிடிப்பிச்சுக்கொண்டு வந்து சேரவேணுமே அல்லாமல் சும்மா யெப்படி வந்தா யென்று கோபிச்சுக் கொண்டார். அதுக்கு அவர் அவர்கள் அப்படி செய்தால் நான் செய்ய வேண்டிய தென்ன வென்று சொன்னுன். அப்பால் அவனை மறுபடி போகச்சொல்லி அனுப்பிவிச்சு தோஸ்து மகம்மதையும் போகச் சொன்னதாய் மமுதல்லிக்கானண்டைக்கு யனுப்பிக்க யோசனை பண்ணி போகச் சொன்னதாய் சேதிசொன்னுர்கள்.

## 1752௵ செப்த்தெம்புறுமீ 10௨ ஆங்கிரசு௵ ஆவணிமீ 29௨ ஆதிவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போய் கபுறு சொல்லிப் போட்டு நானென் கச்சேரியே வந்தேன். அரியாங்குப் பத்திலே முன் 24௨ (5௨) செப்தாம்பூறுமீ செவ்வாய்க் கிழமை ராத்திரி சண்டையில் முறிஞ்சவர்கள் — கையிலகப்பட்டக் காயக்காறர்கள்—காயமில்லாமல் போக தக்கின தப்பினபேர்கள் அரியாங்குப்பம் வந்து சேர்ந்த பேர்களுக்கு மத்தத்தாயி யிங்கே யிருந்த வெள்ளைக்காறர்கள் சிப்பாயிகள் வகையிராக்களைக் கூடக் கூட்டி அனுப்பிவிச்சது மல்லாமல் பத்து உருப்படி பீரங்கிகள் கூடாரங்கள் வகையிரா சண்டை சாமான்கள் யென்ன வுண்டோ

அதுகளெல்லாம் அனுப்பி தயாராக்கி யெப்போதும் பவுன்சு யிருக்குது யென்பிச்சார் சுவாமி தயவினாலே யிப்போ மயிசூரை யிலிருந்து தேவனாம்பட்டணம் (Devanampatnan) என்கிற கப்பல் வந்தால் அதிலே சொலுதாதுகள் காப்பிரிகள் வகையிரா முன்னூறு நானூறு பேர்கள் வருவார்கள்ளே வந்தால் யெப்போதும் பவுன்சு யென்பிக்கும் எதிரிகளுக்கும் மகா பயமாயிருக்கும் அதைத்தொட்டு வெகு காரியம் கட்டி நடக்கும்படி நடக்க வேணுமென்று சுவாமியைப் பார்த்து பிரார்த்திக்கிறார்கள். வெகுபோகள் எனக்கானால் யிருக்கிற மனது சுவாமி யித்தனை ஒச்சத்தியாய் ஆகாசமளவின் கீற்த்திக்கு சத்து ஒருத்தர் தூஷணத்தை சொல்லலாகுது யென்று யிருக்கிற விசாரம் சுவாமிக்குத் தெரியும்.

இத்தனாள் . சாயங்காலம் கேழ்விப்பட்ட சேதி மமுதல்லிககான் அண்டையிலிருந்து நம்முடைய பிறான்சுக்காறன் முன் -24உ. ராத்தி சண்டையிலவர்கள் கையில் அகப்பட்டவன் அவனே மமுதல்லிக் கான் வெள்ளைக்காறர்கள் விடுகிற பேச்சுக்கும் சந்திசமாதானமா யிருக்கிற பேச்சுக்கும் யவனுடனே சொல்லி யனுப்பின தாகவும் அவன் வந்து யித்தனாள் பகலைக்கு மேலஞ்சு மணிக்கு துரைவர்கள் புதுசாய்க் கட்டுகிற கோவற்னமாவிலே அப்பால் துரையவர்கள் வீட்டுக்கு வரச்சே கூடவந்து வீட்டுலேயும் பேசியிருந்து அப்பால் அவனை மறுபடி மமுதல்லிக்கான் தண்டுக்குப்போறதுக்குப் பயணம்பண்ணி அவனுடனே கூட தோஸ்து மகப் மதுவையும் போகச் சொல்லி றவாண பண்ணி யெட்டு மணிக்கு ராத்திரி தானே போய்ச் சேரச்சொல்லி அனுப்பிவிச் சதாய் சேதி சொன்னார்கள். வந்த வெள்ளைக்காறன் யென்னவந்து சொன்னானோ அதுக்குப் பதிலென் வுத்திரஞ் சொல்லியனுப்பிவிச்சார் களோ தெரியாது.

## 1752௵ செப்த்தோம்புறுமீ 11உ ஆங்கிறசு௵ ஆவனிமீ 30உ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்தில் துரையவர்கள் யென்ன சேதியென்று கேட்டார். கோட்டை யிலே யின்றைக்கு காலத்தாலே காரைக்கால் வற்த்தகருதும் நம்முட வூர்கும்பினீர் வர்த்தகருதும் முப்பத்தி மூணு கட்டும் போட்டார்கள் யென்று கபுறு சொன்னவுடனே நாளையத்தினம் பாதுசாபர்வானா வந்திருக்குதே அதை நான்போய் வாங்கிவர வேணும் அதுக்கு நவபோத்து மாயிமருத்தபு முதலான வாயித்திய சின்னங்களென்ன வுண்டோ அதுகளெல்லாம் முஸ்த்தித்துப் பண்ணி பயிர்க்குடிகள் பிடிக்குறதுக்கு சேவுகர்களையும் முஸ்தீது பண்ணி விச்சு தயாறு பண்ணி விச்சால் நாளைக்காலமே யேழரை மணிக்குப்போய் வாங்கி வரவேணும் அதுக்குத் தயாறு பண்ணிவை யென்று சொன்னார்-துலுக்கர்களுக்கும் பிள்ளையும் அமுல்தார்களுக்கும் கும்பினீர் வர்த்தகர் முதாலன பேர்களுக்கும் யெச்சரிக்குறதாவென்று கேட்டதுக்கு உனக்குத் தெரியாதா சமஸ்தானமானபேர்களும் வந்து நதீர்வைக்கிறவாடிக்கை யென்று சொன்னார்-நல்லது அந்தப்படியே சொல்லியனுப்பிவிக்குறேன் என்று செல்லியனுப்பிவிச்சுக் கொண்டு வந்து என்கச்சேரியிலிருந்து ரசாசாயபு-பத்தல்லிக்கான் (Raza sahib-Fathi-Ali-Khan) முதலான

பேர்கள் பெரிய மனுஷராயிருக்கிற துலுக்கர்களுக்கும் கும்பினீர் வர்த்தகர்களும் முதலானவர்களுக்கும் பாப்பய்ய பிள்ளை முதலான அமுல்தாறர்களுக்கும் நாளையதினம் பாதுசா பர்வானு துரையவர்கள் போய் வாங்கிவரப் போகிறார். ஆனபடியினாலே நீங்களெல்லாம்-நதீர்கொண்டு வந்து காணுங்கொள்ளென்று சொல்லிப் போகச் சொல்லி அவர்களுக்கு சேவுகர்களைப்போய் சொல்லிவரச் சொன்னேன். அப்பால் துரையவர்கள் முசியே திலார்ஸையும் முசே பொஷேத்தையும் அழைப்பிச்சு நாளையத்தினம் பாதுசாபர்வானு வாங்கிவர வேணுமென்று சொல்லி கோன்சேலியோர்கள் முதாலன வெள்ளைக்காறர்கள் எல்லாரும் நதீர்வைக்கச் சொல்லி நூத்தியன்பது மொகருவும் அறுநூறு ரூபாயும் கொடுத்து யெல்லாருக்குங் கொடுக்கச் சொல்லி சொன்னார். அந்தப்படிக்கு வாங்கிக் கொண்டு முசியே திலார்ஷு முசியே பொசேத்தும் போய்விட்டார்கள்.

இத்தனுள் பிதனூரிலிருந்து (Bidanur) வந்த வக்கீல்கள் தகப்பன் பிள்ளை ரெண்டு பேர்களும் மதாம் மாரிபத்திலே போய் துரையவர்கள் பேட்டிப்பண்ணிக்கொண்டார்கள் அவர்கள்கொண்டு போய்க்கண்ட வெகுமானம் தங்கள் ராசா அனுப்பிவிச்சார்களென்று மதாமுக்கும் துரையவர்களுக்கும் கொடுத்துது. தாட்டிபத்திரி துப்பட்டி ரெண்டுக்கு யிறநூறு ரூபாய் விலையென்றும் சொன்னார்கள். இரண்டு சந்தனக் கட்டை களிப்பாக்கு-அத்தர் வகையருக் கொண்டுபோய்க் குடுத்து சந்திச்சு ராசா அவர்கள் சொல்லச்சொன்னாரென்று சிறிது மத்தலபுகளுஞ்சொல்லி விடுதிக்குப்போய் வாருமென்று யனுப்பிவிச்சுக்கொண்டு வந்ததாய்ச்சொன்னார்கள். யிருக்கிறமட்டுக்கும நித்தமொருத்தருக்கும் தறுபாறுக்கும் வாருமென்று சொன்னார்களாம். நல்லது வந்து போயிருக்கவும் என்று சொன்னதாகவும் நித்தியமஞ்சு ரூபா படிகுடுக்கிறகுஸ்துமா தென்று சொன்னதுக்கு குடுக்கச்சொல்லுகிறே மென்று சொன்னதாய்ச் சொன்னார்கள் இத்தனுள் சாயங்காலம் துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு நாளைக் காலமே யெல்லாரும் வரத்தக்தாக திட்டம் பண்ணினீராவென்று கேட்டார் யெல்லாம் தயாராக யிருக்குதென்று சொன்னேன். இப்படி கேட்டுக்கொண்டிருக்கச்சே தோஸ்துமகம்மது யெனகிறவன் மமுதல்லிக்கானண்டைக்குப்போயிருந்தானே அவனண்டையிலிருந்தும் ஒரு போயண்டன் வந்து தோஸ்துமகம்மது சொல்லச் சொன்னாரென்று சொன்னதும் நானும் சினோர்—பறங்கியும் நேத்து போனமே போனவுடனே பறங்கியை மாத்திரம் உள்ளே யழைப்பிச்சுக்கொண்டு [illegible] அரைநாழிகை வழியில் அங்கே யிருந்து போயிருக்கிற பல்லக்குகள் வைத்திருக்குதே-அங்கே யிருக்கச் சொன்னார்கள் அந்தப்படிக்கு நேத்துராத்திரியிருந்தேன் யின்று காலத்தாலே என்னை யழைப்பிச்சு பேசினார்கள். பேசினபிற்பாடு மறுபடி முன்னிருந்த தாவிலே போயிருக்கச் சொல்லி அப்பால் மமுதல்லிக்கான்—தேவனாம்பட்டணத்துக்குப் போனால் போனவன் வந்தவுடனே கண்டுபேசிக்கொண்டு வாருமென்று சொல்லச் சொன்னானென்று சொன்னான். பின்னையும் யேதாகிலுஞ்சேதி தெரியுமா வென்று கேட்டார் யெங்களைப் போறுப்போலே காவல் வைத்துப் போட்டார்களே யெங்களுக்கு யென்ன சேதி தெரியுமென்று சொன்னானிந்தமட்டுக்கும் நல்லதென்று போகச் சொன்னார் அவன் போனான்.

